அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.

। श्रीगुरुभ्यो नमः ।

# ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ விஜயம்

ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதி

ஸ்ரீ ஜகத்குரு

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் – (I)

*(கி. பி. 1622 – 1663)*

அவர்களின் திவ்யசரித்திரம்

முதல் பாகம்

( அவதாரம் முதல் பீடாரோஹணம் வரை )

*ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,*

*ஸ்ரீரங்கம்.*

1964

# அட்டவணை





| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 24 | குன்றுவராங்கோட்டை | குன்றுவாரங்கோட்டை |
| 7 | 8 | பெண் ஸந்ததிகளேற்பட்டு | பெண் ஸந்ததிமாத்திரமேற்பட்டு |

# முன்னுரை

तं सर्वभूताभयदं विभवैरन्वितं परम्।
नारसिंहं गुरुं चापि नवं ज्ञानार्णवं भजे ॥
सत्यस्वरूपं सद्ज्ञाननिष्ठं साक्षाच्छिवं परम्।
सदा दानरतं दान्तं सच्चिदानन्दमाश्रये ॥

இவ்வரலாற்றின் காலம் கி. பி. 16ம் நூற்றுண்டின் முடிவும் 17ம் நூற்றுண்டின் துவக்கமும். மாபெரும் விஜயநகர ஸாம்ராஜ்யத்தின் சிதைவு காலம். ராஜதானியான விஜயநகரத்தை முஸ்லீம் மன்னர்கள் தகர்த்துவிட்டதும் பேனுகொண்டா, சந்திரகிரி, வேலூர் ஆகியவை முறையே தலைநகரமாக்கப்பட்டன. ஆரவீடு வம்சத்தைச் சேர்ந்த வேங்கடராயர் II (1586—1614) ஒரு தீரபுருஷன். முஸ்லீம் பகைவரைப் போரில் முறியடித்து தென்னட்டு நாயக்கர்களையும் தனக்குக் கீழ்ப்படியும்படி செய்தான். அடுத்து வந்த ஸ்ரீரங்கராயர் சிறையில் மடிந்தான். அடுத்த மன்னன் ராமதேவராயர். பதினைந்து ஆண்டுகள் தென்னடு முழுவதிலும் ஒரே உள்நாட்டுக் கலகம். ராமதேவரின் தளகர்த்தர் யாசம்மாவும், தஞ்சை நாயக்கர் ரகுநாதனும், ஒரு பக்கமாகவும், வேங்கடராயனின் மைத்துனன் ஜக்கராயனும், மதுரை நாயக்கர் முத்துவீரப்பனும், செஞ்சி நாயக்கர் கிருஷ்ணப்பனும் மற்றொரு பக்கமாகவும் போர் நடத்தினர்கள். இக்கேரி (கௌதி) நாயக்கர் வேங்கடப்பனும் (1586—1629), ஸ்ரீரங்கப் பட்டணத்தைக் கைவசப் படுத்திக்கொண்டு மைசூர் அரசை நிறுவின ராஜ ஒடேயாரும் இக்கலகத்தில் சேரவில்லை. அமைதிக் குலைவுடன் கொலை, களவு முதலிய கேடுகள் நாட்டைப் பிடித்தன. விவசாயிகள் தங்கள் கிராமங்களில் அமைதியாக வாழ முடியவில்லை. பஞ்சம் தாண்டவமாடியது. இந்த நிலையில் மக்கள் பட்ட துயரத்தைப்பற்றி நம் நாட்டிலிருந்து ரோமாபுரிக்கு கிறிஸ்தவ குருக்கள் (Jesuits) எழுதிய கடிதங்கள் (Letters of the Madura Mission) மூலம் ஒருவாறு

நாம் தெரிந்துகொள்ளலாம். இவ்விதச் சூழ்நிலையில் ஸ்ரீ நரஸிம்ஹனின் குடும்பத்தாரும் உறவினர்களும் பட்ட கஷ்டங்களை இந்நூலில் காண்கிறோம். இவ்விளக்கமே இந்நூலின் முதல் பாகத்துக்குப் பின்னணியாகும்.

விஜயநகர ஆட்சி தென்னாட்டில் வியாபித்ததும், ஆந்திரர்களும் கன்னட நாட்டாரும் அதிகாரப் பதவி களில் நியமிக்கப்பட்டார்கள். இவர்கள் காபு அல்லது ரெட்டி, கம்மா, வேளமா வகுப்பினர்கள். ரெட்டிகளில் பலர் வேளாண்மைத் தொழிலையும் செய்தார்கள். அர்த்த நாரீச்வரபுரத்திலும் ரெட்டிகளிருந்தார்கள். (பக். 6.) அதிகாரிகளுடன் ஆந்திர பிராமணர்களும் தென் நாட்டுக்குக் குடி வந்தார்கள்.

இவ்வரலாற்றில் வரும் அந்தணர்களில் பலர் "நரஸிம்ஹன்" "நரஹரி" என்ற பெயர் கொண்ட வர்கள். ஒருவர் "அகோபலர்" மற்றொருவர் "அழகாத்ரி" (அழகிய சிங்கர் என்பது நரஸிம்ஹர் – அவர் வசிக்கும் மலை அழகாத்ரி.) இவைகளெல்லாம் நரஸிம்ஹ க்ஷேத்திரமான அகோபலத்தை நினைவுக்குக் கொண்டுவருகின்றன. இதுபோலவே "வேங்கடாத்ரி" "வேங்கடாசலம்" "திருமலை" "திம்மாம்பா" ('திம்ம' என்பது "திருமலை"யின் திருபு), "வேங்கடம்மா" என்பவை திருமலை — திருப்பதியைக் குறிக்கின்றன. ஒருவர் காளஹஸ்தி பட்டர். ஆகவே இவர்கள் எல்லோருக்கும் பூர்வீக வாசஸ்தலம் ராயலுசீமா (Ceded District). அங்கிருந்து தமிழ்நாட்டுக்கு வந்தவர்கள்.

மதுரை ராஜ்ஜியத்தை ஸ்தாபித்த விச்வநாத நாயக்கனும், அவன் அமைச்சன் தளவாய் அரியநாதனும், சீமையை படை மான்ய முறையில் (feudal tenure) 72 பாளையங்களாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் ஒரு படைத்தலைவனை சிற்றரசனாக்கினார்கள். வத்தலகுண்டு பாளையத்திலுள்ள அதிகாரி மாதிராஜா (பக். 5) அர்த்தநாரீச்வரபுரத்தை வேத விற்பன்னர்களான சில ஆந்திர அந்தணர்களுக்குப் பிரம்மதேயமாக வழங்கி

இருக்கவேண்டும். நாடு அமைதியாக இருக்கும்போது இவர்கள் கிருஷிமூலம் ஸம்பாதித்தார்கள். அத்துடன் அந்தணருக்கு ஏற்பட்ட ஆறு கர்மாக்களில் ஒன்ருன ப்ரதிக்ரஹம் பெற்றும் வாழ்க்கையை நடத்திவந்தார்கள். அக்நிஹோத்ரம் முதலிய வைதிக கர்மாக்களில் அதிக சிரத்தை, வேத அத்யயனத்தில் மிகவும் ஊக்கம். அப்படியே க்ஷேத்ராடனத்திலும். சுருதி ஸ்மிருதிகளில் அந்தணருக்கு வகுக்கப்பட்ட நியமங்களையே அனுஸரித்து வந்தார்கள். சதாவதானம் அஷ்டாவதானம் போன்ற விசேஷ யோக்கியதைகளும் சிலருக்கு இருந்தன. சீரிய இல்வாழ்க்கை, பந்து விசுவாசம், பரஸ்பர உபகாரம் ஆகிய சிறந்த அம்சங்களையும் இவர்கள் வாழ்க்கையில் காண்கிருேம். நற்குணங்களுக்கு சிகரம் வைத்தாற்போல தீவிரமான குருபக்தி; சிருங்கேரி குருக்களிடம் பரம பக்தி. சிருங்கேரிக்குச் சென்றவர்கள் பலரை இவ்வரலாற்றில் காண்கிருேம்.

அப்போது சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தை அலங்கரித்தவர்கள் ஜகத்குரு ஸ்ரீ அபிநவ நரஸிம்ஹ பாரதிகள் (1600–23). இவர்கள் மதுரை சீமையில் பிறந்தவர்கள் என்று தோன்றுகிறது. (பக். 3.) ஸ்வர்ண நிறமுள்ள சரீர காந்தியை உடைய இந்த ஆசார்யரின் அபார மந்திர சக்திக்குக் கல்தூணில் இவர்கள் மஞ்சளால் வரைந்த கோடுகளுக்குள் கணபதி மூர்த்தீகரித்து அர்த்த சித்ர (bas relief) ரூபமாக உருவெடுத்ததே சான்ருகும். இந்த ஸம்பவத்தை 'குரு வம்ச காவ்யம்' பின்வருமாறு கூறுகிறது :—

**तन्मन्त्रसिद्धेर्महिमा शंसितुं केन शक्यते ।**
**विघ्नेश एव यत्पुर्यामाचन्द्रार्कं विवर्धते ॥**

சிவகங்கையில் கிளைமடம் இவர்களால் ஸ்தாபிக்கப் பட்டது. மற்றொரு கிளை மடமாகிய ஆவனி மடம், கோலார் பிராந்தியத்தில் விஜயம் செய்யுங்கால் ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளால் நிறுவப்பட்டது,

(M. A. R. 1929 p. 88) என்பது தெளிவு. இந்த மடத்தின்வசம் உள்ள சாஸனங்களில் மிகப் பழமை யாகக் காண்பது கி. பி. 1645-ல் மூன்றும் ஸ்ரீரங்கராயர் ஆட்சியில் பொறிக்கப்பட்டது (E. C. X. Mulbagal 60). ஆகையால் இந்த மடத்தை ஸ்தாபித்தவர் இவ் வாண்டுக்கு சிலகாலத்துக்கு முன் பட்டபத்திரரான ஸ்ரீ அபிநவ நரஸிம்ஹ பாரதிகளாக இருக்கலாம் என்று ஊகிக்கலாம். இந்த ஆசார்யரின் வரலாற்றில் இவை விசேஷமான செய்திகள். இவர்களின் திவ்ய குணங்கள் 7-ம் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. 1622-ம் ஆண்டில் "சிவ கீதை"க்கு இவர்கள் எழுதிய பாஷ்யம் சமீபத்தில் ஸ்ரீ மடத்தால் பிரசுரிக்கப்பட்டிருக் கிறது. பொறுப்புகளையெல்லாம் சிஷ்ய ஸ்வாமிகளிடம் கொடுத்துவிட்டு ப்ரஹ்மதத்வானுஸந்தானம் செய்து கொண்டே விதேக முக்தி அடைந்தார்கள் என்று படிக்கிறோம். (பக். 61.) ஸ்ரீ வித்யாசங்கரரின் பாத கமலங்களை தியானித்துக்கொண்டே ப்ரஹ்ம தத்வத்தில் ஆழ்ந்தார்கள் என்று கூறுகிறது "குருவம்ச காவ்ய"மும்.

இவர்கள் காலத்தில் பலவிதத்தில் சிருங்கேரி மடத்துக்கு உதவியளித்தவர் இக்கேரி நாயக்கர் வேங்கடப்பன் I. வீர சைவ பரம்பரையில் பிறந்த இந்த மன்னன் அத்வைதத்திலும், சிருங்கேரி குருவினிடமும் ஆழ்ந்த பக்தி வாய்ந்தவன். மடத்தின் கட்டடங்களைப் புதுப்பித்து, அக்கிரகாரங்களை ஸ்தாபித்து, வருஷம் ஐம்பது வராகன் கொடுக்கக்கூடிய நிலங்களை அளித்து மடத்தைச் சிறப்பித்தான். சாஸ்திர ஞானமுள்ள இந்த நாயக்க மன்னன் தன் ஸபையில் ஸ்ரீ ஆசார்யரின் முன்னிலையில் பண்டித ஸதஸ் ஒன்றைக் கூட்டினன். வித்வான்களைப் பலவாறாக ஆதரித்தான். இவனுக்கு **विशुद्धाद्वैतप्रतिष्ठापनधुरन्धरः** என்ற சிறந்த விருதைச் சூட்டி ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் அனுக்கிரஹித் தார்கள். இது பிறகு நடந்த செய்தி.

ஸ்ரீ நரஸிம்ஹனின் சீரிய மாண்பு பால பர்வத்தி லேயே விகஸித்து சோபை அளித்தது. அத்யயனத்தில் ஆர்வம், ஆச்சரியமான கிரஹண சக்தி; முதலிய குணங் களை எல்லோரும் மெச்சினர்கள். தாயை இழந்த இவர் பந்துக்களிடம் பரிவுடன் நடந்துகொண்டார். ராமாயணம் படித்ததும் ஸ்ரீ ராமனுடைய சரிதையை தன் நடத்தையில் கொண்டுவந்தார். ஸ்ரீ ராமனுக்குச் சிறிய தாயாரிடம் இருந்த பக்தியை தாமும் தம் சிறிய தாயாரிடம் காட்டினர். இளம் பருவத்திலேயே தீர்த்த யாத்திரை யிலும் ஆலய வழிபாட்டிலும் இவர் மனம் ஈடுபட்டு இருந்தது. வறுமையில் தம் மாமனை சிரமப்படுத்த இஷ்டமில்லாமல் பிக்ஷை எடுத்து வந்தார். (பக். 20) அத்யயனத்தை முடித்ததும் விவாஹம் செய்துகொண்டு கிருஹஸ்தாச்ரமத்தின் தர்மங்களைச் செய்யவேண்டும் என்று எண்ணினர். இதுவே இவர் தகப்பனரின் ஆசையுமாகும். தம் மாமன் வேங்கடாசல தீக்ஷிதரின் குமாரியை மணப்பது என்றே சிருங்கேரிக்குச் சென்றார். ஆனல் ஸ்ரீ சாரதாதேவியின் ஸங்கல்பம் வேறுவிதமாக இருந்தது. இதற்கு சில ஆண்டுகளுக்கு முன் மதுரை யில் ஒரு ஸம்பவம் நடந்தது. சிருங்கேரியிலிருந்த நரஸிம்ஹ பட்டர் இவர் தகப்பனரை ஒரு கேள்வி கேட்டார். "நரஸிம்ஹனுக்கு ஸந்யாஸத்தில் நோக்கம் இருக்குமா"? என்று. "அது அவனுக்குச் சரியில்லை" என்று சீறினர் தகப்பனர். இதைக் கேட்ட பாலகர் "ஏன் அப்பா ஸந்யாஸம் என்றால் ஸர்ப்பம்போல் நினைத்துக்கொண்டு வேண்டாம் என்கிறீர்கள்" என்று வினவினர். (பக். 12.) பின் நிகழவிருக்கும் ஸம்பவத் துக்கு இது சூசகம் போலும். பாலகர் அறியாமலேயே பெரியதோர் ஸம்ஸ்காரத்தின் வித்து விதைக்கப்பட்டது போலும்! பிறகு சிருங்கேரியில் ஜகத்குரு இவரை வற்புறுத்தியதும் ஸந்யாஸத்துக்கு ஸம்மதித்துவிட்டார். அந்த ஒரு கணத்தில் விவாஹத்தில் இருந்த எண்ணம் மறைந்தது. அத்துடன் ஸம்ஸார பந்தங்களும் விலகி விட்டன. **न बद्धोऽहं नाहं संसारी** என்ற உயர்ந்த அனுபவம்

குரு கடாக்ஷத்தால் ஒரு விநாடியில் கூடிவிட்டது. மஹா வாக்யம் உபதேசமானவுடன் விசேஷமான தேஜஸும் ஏற்பட்டது. (பக். 45.) அப்போது குருவும் சிஷ்யனும் பரமேச்வரனும் முருகனும் போல காட்சியளித்தார்கள் (பக். 54.) என்று இந்த நூலில் சொல்லியிருப்பதை அனுசரித்தே குரு வம்ச காவ்யமும் சொல்கிறது.
... ......... **ददर्श सशिष्यं सुपश्यन् शिवमिव सुकुमारम्** (IX 50)
இக்காவ்யத்தில் மற்றொரு உபமானமும் கொடுக்கப் பட்டிருக்கிறது. **मुनियुगलं** ... ...|... **शुकपितृशुकयोगिद्वन्द्ववद्राजमानम्** (IX 47) (வியாஸாசார்யாரும் சுகயோகியும் போல இரண்டு முனிவர்களும் பிரகாசித்தார்கள் என்று).

கௌதி மன்னன் ஸபையில் குருவும் பால ஸ்வாமி களும் கூடியிருந்த ஸமயம், பால ஸ்வாமிகளின் பிரஸங்கத்தைக் கேட்ட ஒருவர் "ஸரஸ்வதீ தேவியே செய்தாற்போலிருந்தது" என்றார். மற்றொருவர் "வித்யாரண்யருக்கு ஸமானமாவார் இவர்" என்றார். இப்புகழெல்லாம் தனக்கு அல்ல, குருநாதனின் அனுக்ரஹமே என்று பாவித்தார்கள் பாலஸ்வாமிகள் (பக். 58). இது உண்மையே. காவ்ய பாடம் படித்துவந்த பாலஸ்வாமிகள் வித்வத் ஸபையில் அதுவும், ராஜ ஸபையில், அதிசயிக்கத் தக்கபடி உபந்யஸித்தார்கள் என்றால் அது குரு கடாக்ஷ மகிமைதானே! இம்மாதிரி ஸம்பவம் சிருங்கேரி மடத்தின் வரலாற்றில் புதிதல்ல. ஸ்ரீ பகவத் பாதாளின் கடாக்ஷ மகிமைதானே கிரியை ஸ்ரீ தோடகாசார்யராகச் செய்தது! ஏகசிலா கிராமத்தி லிருந்து வந்த இரு சிறுவர்கள் ஸ்ரீ வித்யாசங்கரரின் அனுக்ரஹத்தால் ஸ்ரீ பாரதீ தீர்த்தர், ஸ்ரீ வித்யாரண்யர் என்று புகழ் பெற்றார்கள்! தங்கள் மேன்மைக்குக் காரணம் குரு கடாக்ஷமே என்றுதானே ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் பாடியிருக் கிறார்கள்! அப்படியே இந்த ஜகத்குருவின் ஆசிதானே ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளின் மேன்மைக்குக் காரணம்! ஸ்ரீ சந்திரசேகர பாரதிகளின் கிருபையில்

தானே வளர்ந்து பிரகாசிக்கும் நம் ஜகத்குரு ஸ்ரீ வித்யா தீர்த்த ஸ்வாமிகள் நமக்கு அருள் பாலிக்கிறார்கள். பூர்வாசார்யர்களின் மகிமை, தபோபலம் முதலியவை புதிதாகப் பீடாரோஹணம் செய்யும் ஆசார்யரைச் சாரும் என்பது ஸித்தம். சிருங்கேரியில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர் முதல் பரமேச்வர அம்சர்களான எல்லா ஆசார்யர்களின் மகிமையும், இப்போது நம்மை பரிபாலிக்கும் குருநாதரிடம் சேர்ந்து விளங்குகிறது என்று சொல்வது மிகையாகுமா?

40 — 41-ம் பக்கங்களில் விவரிக்கப்பட்டிருக்கிற நவராத்ரி உத்ஸவத்தின் நிகழ்ச்சிகளை இன்றும் நாம் மடத்தில் காண்கிறோம். தங்கப்பல்லக்கில் ராஜவிருதுகளுடன் ஸ்வாமிகள் பவனிவரும் காக்ஷியை அன்றுபோல இன்றும் காண்கிறோம். அப்படியே வித்வத் ஸபைகளும். 17-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் கௌட தேசத்திலிருந்து "சிரோமணி" என்ற நியாய கிரந்தத்தில் பாரங்கதரான பண்டிதர்கள் ஸபையில் கலந்துகொண்டார்கள். (பக். 41.) இன்றும் 20-ம் நூற்றாண்டின் பின் பகுதியில் நம் குரு சரணரின் வித்வத் ஸபைக்கு நியாய சாஸ்திரத்தில் பாண்டித்யம் பெற்ற கௌட தேசத்து வித்வான்கள் வருகிறார்கள்! மன்னர்கள் ஸ்வாமிகளுக்குப் பொன்னாடை ஸமர்ப்பிப்பதும், ஸ்வாமிகள் மன்னர்களுக்கு ஆசியுடன் பொன்னாடை அளிப்பதும் இன்றும் நடந்துவருகின்றது. இந்தப் பொன்னாடைகள் **अतुलकनकसूत्रप्रोतकौशेयवासांसि** என்று "குருவம்ச காவ்யம்" விளக்குகிறது. சிருங்கேரி பீடத்தின் தொன்மை எப்போதும் புதுமைதான். (Its glory is ever old and ever new.)

16–17-வது நூற்றாண்டுகளின் ஸமூக வாழ்க்கைச் சித்ரம் இந்நூலின் பக்கங்களைச் சிறப்பிக்கிறது. இதைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள மூல கிரந்தத்தைப் படிக்கவேண்டுமென்று அவா ஏற்படுகிறது. இயற்கை அழகு, நாட்டின் வளம் முதலியவை கவர்ச்சிகரமாக

வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. வைகை, காவிரி நதிகளின் கரைகளிலுள்ள நகரங்களும், கிராமங்களும் படத்தில் காண்பிக்கப்பட்டவை போல நம் கண்முன் நிற்கின்றன. மதுரை திருவரங்கம் ஸ்தலங்களிலுள்ள மூர்த்திகளை வர்ணிக்கும் சுலோகங்கள் நம் மனத்தைப் பக்திப் பெருக்கில் ஆழ்த்துகின்றன. வராகப் பெருமானின் இரண்டு பற்களிலிருந்து வடியும் நதிகளே சிவாம்சம் பெற்ற பத்ராவும், விஷ்ணு அம்சம் பெற்ற துங்காவும். இவைகளின் மத்தியிலுள்ளது சிருங்கேரி பீடம். அங்கு ஸர்வலோக மாதா சாரதா வீற்றிருக்கிருள். இப்படி சிறப்பு வாய்ந்த பீடத்தை அண்டியிருப்பவர்கள் நாம்! நம் பாக்கியம்தான் என்ன!

சிருங்கேரி மடத்து கோசஸ்தானத்தை ஆராய்வதற்கு அனுமதி அளித்து அங்குள்ள சிறந்த நூல்களை தாங்களும் ஆராய்ந்து நாமும் ஆராய்வதற்கு ஸௌகர்யங்களை அளித்து நூல்களை உலகுக்கு அளிக்க திருவுள்ளம் கொண்ட நம் குருநாதரின் சரணங்களை வாழ்த்துவோம்.

மிக்க பிரயாஸையுடன் ஜீர்ணமான ஏடுகளிலிருந்து இந்த கிரந்தத்தை ஆராய்ந்து வடமொழியில் பிரதி தயாரித்தவர் நம் மான்ய ஸகோதரர் ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் ஆவர். எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இந்த 'விஜயத்தைச்' சுருக்கமாகத் தமிழில் ஆக்கித் தந்திருக்கிருர். எளிமையும், ஆழமும், இனிமையும் காம்பீர்யமும் கொண்டிருக்கிறது இந்தச் சிறிய நூலின் நடை. இதை அழகாக அச்சிட்டு நமக்கு அளித்திருக்கிருர்கள் ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் ஸிண்டிகேட் அச்சகத்தார்.

**K. R. வேங்கடராமன்,**
'ஸ்ரீ சங்கர கிருபா' ஆசிரியர்.

டிசம்பர் 1964.



ஸ்ரீ தக்ஷிணாம்நாய ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி

ஸ்ரீ ஜகத்குரு

**ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள்**

உ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ விஜயம்

## 1. குருவின் பெருமை

ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யார் இவ்வுலகில் அவதரித்து உபநிஷத் ஸித்தாந்தமான அத்வைதத்தை நன்கு நிலைநாட்டி அவைதிக மதங்களைக் கண்டித்து கடைசியில் காச்மீரத்தில் ஸர்வக்ஞபீடாரோஹணம் செய்து விட்டுக் கைலாஸத்திற்குத் திரும்புவதற்குமுன் வைதிக ஸித்தாந்தம் சாசுவதமாக பரிபாலிக்கப்பட்டு வருவதற்காக இப்புண்ணிய பூமியின் நான்கு திக்குகளிலும் சிருங்கேரி, துவாரகை, பதரி, புரி என்ற க்ஷேத்திரங்களில் நான்கு ஆம்நாய பீடங்களை ஏற்படுத்தி அவைகளில் முறையே தம் முக்கிய சிஷ்யர்களான ஸுரேசுவராசார்யார், பத்மபாதாசார்யார், தோடகாசார்யார், ஹஸ்தாமலகாசார்யார் ஆகிய இவர்களை பீடாதிபதிகளாக நியமித்தார் என்பது யாவரும் அறிந்த விஷயமே.

அவைகளில் தக்ஷிண தேசத்திற்காக ஏற்பட்ட சிருங்கேரி சாரதாபீடத்தில் ஸ்ரீ ஸுரேசுவரர் முதற்கொண்டு அநேகம் மஹான்கள் பீடாதிபத்யம் வகித்துவந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோருடையவும் விரிவான ஜீவ்ய சரித்திரம் முழுவதும் இதுவரை நமக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும் இந்தப்பரம்பரையில் வந்துள்ள ஸ்ரீ புருஷோத்தம பாரதீ ஸ்வாமிகளின் சரித்திரமும் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகளின் சரித்திரமும் ஒருவாறு இப்பொழுது கிடைத்து இருப்பது நம் பாக்யவசமேயாகும். அவைகளும் ஜனனம் முதல் ஸித்திவரை பூராவாகக் கிடைக்கவில்லை. இவ்விரண்டு சரித்திரங்களும் சிருங்கேரி மடத்து கிரந்தகோசத்தில் ஏட்டுப் பிரதிகளில் ஸம்ஸ்கிருத பாஷையில் இருந்து வருகின்றன. அவைகளில் காணப்படும் அம்சங்களையாவது நாம் அறிந்துகொள்ளவேண்டியது மிகவும் அவசியமாகும்.

அவ்விரண்டில் ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகளின் சரித்திரம் கிடைத்தமட்டிலிருந்து ஜனனம் முதல் வியாக்யான ஸிம்ஹாஸனம் ஏறும் வரையிலுள்ள வரலாறு சுருக்கமாக இப்பொழுது முதலாவது பாகமாக வெளியிடப் படுகிறது. பின்னுலுள்ள சரித்திரம் இரண்டாவது பாகமாக வெளியிடப்படும். ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள இச் சரித்திரத்தின் மூலகிரந்தத்தையும் கூடிய சீக்கிரம் அச்சிட்டு வெளியிட ஏற்பாடு செய்யப்படும்.

ஸ்ரீ சிருங்ககிரி குருபரம்பரையில் ஸ்ரீ வித்யாரண்யருக்கு வெகு காலத்திற்குப் பிறகு விஜயநகர ஸாம்ராஜ்யம் சிதறிப் போய் ராஜ்ய க்ஷோபம் ஏற்பட்டு அராஜகம் நடமாடிவந்தது. ஸ்ரீ பாரதீ கிருஷ்ண தீர்த்தர், ஸ்ரீ வித்யாரண்யர் இவர்கள் காலம் முதற்கொண்டு சிருங்கேரி ஸம்ஸ்தானத்திற்கு ஏற்பட்டு வந்த சில நிலங்களையும் மற்றும் சொத்துக்களையும் பல துஷ்டர்கள் ஆக்ரமித்துக்கொண்டார்கள். பிறகு கௌதி என்ற ராஜ்யத்தை ஆண்டுவந்த வெங்கடப்ப நாயக்கர் என்ற பிரஸித்தமான அரசர் துஷ்டர்களை வென்று தன் ஆளுகையை ஸ்திரப்படுத்திக்கொண்டு சிருங்கேரி மடத்திற்கேற்பட்ட பழைய ஸ்திதியை மறுபடியும் ஏற்படுத்திக்கொடுத்தார். இது நடந்தது கி. பி. 1576 முதல் 1600 வரை பீடாதிபத்யம் வகித்துவந்த ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீஸ்வாமிகளின் காலத்தில் என்று தெரிகிறது. அவருக்குப்பின் பீடாதிபத்யம் வஹித்த அவர் சிஷ்யர் ஸ்ரீ அபிநவ நரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் இயற்றிய சிவகீதா பாஷ்யத்தில், தன் குருவிற்கு நமஸ்காரம் செய்யும்போது, இவ்விஷயத்தைக் கண்டிருக்கிறார்.

शृङ्गेरीवसुधां खलैरपहृतां भूदेवविद्वेषिभिः
श्रीमत्क्रोडतनुर्यथावदचलां संस्थाप्य विश्रान्तिभाक् ।
सद्वेदाचलसीम्नि वेङ्कटनृपः श्रीधर्मसिंहासने
भक्त्याऽस्थापयदप्रमेयमहिमाधारं नृसिंहं गुरुम् ॥

ச்ருங்கேரீவஸுதாம் கலீரபஹ்ருதாம் பூதேவவித்வேஷிபி:
ஸ்ரீமத்க்ரோடதனுர் யதாவதசலாம் ஸம்ஸ்தாப்ய
விச்ராந்திபாக் |
ஸத்வேதாசலஸீம்னி வேங்கடந்ருப: ஸ்ரீ தர்மஸிம்ஹாஸனே
பக்த்யாऽஸ்த்தாபயதப்ரமேயமஹிமாதாரம் ந்ருஸிம்ஹம்
குரும் ||

வெங்கடப்பநாயக்கர் கி. பி. 1586 முதல் 1629 வரை ராஜ்ய நிர்வாஹம் செய்தார். ஸ்ரீ அபிநவநரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் பீடாதிபத்யகாலமான 1600 முதல் 1623 வரை பூராவும் வெங்கடப்ப நாயக்கரின் ஸஹாயம் இருந்து கொண்டே வந்தபடியால் அவ்வாசார்யார் காலத்தில் எவ்வித சிரமமும் இல்லாமல் ஸகல வைபவங்களுடன் அவர் விளங்கிவந்தார்.

तं सर्वभूताभयदं विभवैरन्वितं परम् ।
नारसिंहं गुरुं चापि नवं ज्ञानार्णवं भजे ॥

தம் ஸர்வபூதாபயதம் விபவைரந்விதம் பரம் |
நாரஸிம்ஹம் குரும் சாபி நவம் ஞாநார்ணவம் பஜே ||

என்று குருபரம்பரா ஸ்தோத்திரத்தில் இவ்விஷயம் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது. ஸ்ரீ அபிநவநரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளின் பூர்வாசிரம ஞாதிகள் மதுரைஜில்லா வத்தல குண்டு என்ற கிராமத்தில் இருந்துவந்ததாகத் தெரிவதால் அவரும் மதுரை ஜில்லாவைச் சேர்ந்தவரென்று தீர்மானிக்க இடம் கொடுக்கிறது. அவர் ஆந்திரர் என்றும், ஸகல சாஸ்திர பாரங்கதர் என்றும், அதி ஸுந்தர புருஷர் என்றும் ஸுவர்ணநிறமுள்ள சரீரமுடையவரென்றும் பந்துப்ரியர் என்றும் தெரிகிறது அவருடைய மந்திர ஸித்தியைப்பற்றி வேறொரு குருபரம்பரா ஸ்தோத்திரத்தில்

नृसिंहभारतीनाम्नेऽभिनवोपपदाय च ।
शिलास्तम्भेऽपि विघ्नेशदर्शिने योगिने नमः ॥

ந்ருஸிம்ஹபாரதீநாம்நேऽபிநவோபபதாய ச |
ஶிலாஸ்தம்பேऽபி விக்நேஶ தர்ஶிநே யோகிநே நம: ||

என்று வர்ணித்திருக்கிறது.

இம்மஹான் முதல்தடவை சிருங்கேரி ஊர் மத்தியில் உள்ள குன்றின்மேல் விபண்டக மஹரிஷி உபாஸித்துவந்த மலஹானிகரேசுவரர் தேவாலயத்திற்கு தர்சனத்திற்காகப் போன ஸமயத்தில் அவ்வாலயத்தில் விக்னேசுவரமூர்த்தி இல்லையென்று தெரிந்துகொண்டவுடன், மூலஸ்தான பூஜைக்காகக் கொண்டுவரப்பட்டிருந்த ஸாமக்ரிகளிலிருந்து ஒரு மஞ்சள் துண்டை எடுத்து ஸமீபத்தில் இருந்த கல்தூணில் ஒரு கணபதிஉருவம் வரைந்து அதற்குப் பூஜைசெய்துவிட்டே உள்ளே சென்றார். கர்ப்பக்ருஹம் சென்று மலஹானிகரேசுவரருடைய பூஜையை முடித்துக் கொண்டு வெளியில் வருவதற்குள், மஞ்சளினால் அடையாளமிட்டு கணபதியாக ஆவாஹனம் செய்தவிடத்தில் வெளியில் நன்கு தெரியும்படியாக அக்கல் தூணிலிருந்து பகவான் விக்ரஹரூபமாகவே தென்பட்டார். அம்மூர்த்திக்கு அதுமுதல் நித்யபூஜை செய்வதுடன், அவ்வாசார்யாரும் பின்வந்த ஆசார்யார்களும் ஆலயத்திற்கு வரும் போதெல்லாம் விசேஷ பூஜை செய்துவந்திருப்பதால், அம்மூர்த்தி இன்னம் தெளிவாக வளர்ந்துகொண்டே வருகிறது என்று சொல்லப்படுகிறது. இவ்வாசார்யாரின் சிஷ்யரான ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகளின் சரித்திரத்திலும் கல் தூணில் ஆவிர்பாவமடைந்து விருத்தியடைந்துவரும் கணேசரை வர்ணித்திருக்கிறது.

शिलास्तम्भोद्भवं तत्र गणेशं वरदायिनम् ।
क्रमेण वर्धमानं च दृष्ट्वोपास्त नमस्तते: ॥

ஶிலாஸ்தம்போத்பவம் தத்ர கணேஶம் வரதாயிநம் |
க்ரமேண வர்த்தமாநம் ச த்ருஷ்ட்வோபாஸ்த நமஸ்ததே: ||

இவர் தன் சிஷ்யருக்கு ஸந்யாஸம் கொடுத்த வரலாறும் இருவருமாக வெங்கடப்ப நாயக்கரின் ராஜஸபைக்கு விஜயம் செய்த விஷயமும் சிஷ்யருடைய சரித்திரத்திலேயே வருவதால் இங்கே தனியாக எடுத்துச்சொல்லவேண்டியது அவசியம் இல்லை.

## 2. ]ம்ப வரலாறும், பால பர்வமும்

நிலவளம் பொருந்திய பாண்டிய நாட்டில் புராணப் பிரஸித்தமான வேகவதீ என்ற வைகையாறு பல கிராமங்கள் வழியாகச் சென்று ஆங்காங்குள்ள நிலங்களை மிகச் செழிப்புள்ளதாகச் செய்து வருகிறதில் அநேகம் சிறிய ஆறுகள் அதில் வந்து கலந்துகொள்கின்றன. அவைகளில் ஹரித்ரா நதியென்ற மஞ்சளாறு மிகவும் முக்கியமானது. இவ்விரண்டு நதிகளும் சேரும் இடத்தில் அர்த்தநாரீசுவர புரம் என்று ஒரு பெரிய கிராமம் இருந்துவந்தது. அது மாதிராஜர் என்பவரால் ஏற்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது. அவ்வூரில் ஸாந்நித்தியமடைந்து கோவில் கொண்டிருக்கும் பரமசிவனுக்கு முக்தீசுவரர் என்று திருநாமம். ஊருக்கு ஸமீபத்தில் ஒரு ராமர் கோவிலும், பக்கத்திலுள்ள ஒரு சிறு குன்றின் அடிவாரத்தில் வரதராஜப்பெருமாளின் கோவிலும் இருந்தன. அவ்வூர் ஜனங்கள் ஒவ்வொரு துவாதசியிலும் விசேஷமாக பிராஹ்மண போஜனம் செய்துவைப்பதுடன் கார்த்திகை மாதத்தில் ஸ்ரீ ராமரையுத்தேசித்து மிக விமரிசையாக வன போஜனம் நடத்துவார்கள். அவ் வூருக்கே ஸ்ரீ கண்டேசுவரபுரம் என்றும், குன்றுவராங் கோட்டையென்றும், ஜாண்ட்ரப்பட்டியென்றும், ஜாந்த்ர பல்லேயென்றும், இப்பொழுது குன்னம்பட்டியென்றும் பல பெயர்கள் இருந்து வந்ததாகத்தெரிகிறது. ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் தாம் எழுதிய ஸ்ரீராம புஜங்க ஸ்தோத் திரத்தில் ஜாண்ட்ரப்பட்டி என்ற பெயரைக்குறிப்பிட்டிருக் கிருர்கள். சிவன் கோவிலிலுள்ள முக்தீசுவரரை கோடி முக்தீசுவரர் என்றும் சொல்வதுண்டென்று தெரியவருகிறது.

அவ்வூரில் விஸ்தாரமாகவும், நீளமாகவும் பல வீதிகளும் அவைகளில் ஐநூறு வரை வீடுகளும் இருந்தன. கிழக்கே ஹரித்ரா நதியும், வடகிழக்கில் வேகவதியும், பல வாய்க்கால் களும், குளங்களும் இருந்தபடியால் ஸ்நாநாதி ஸௌகர்யங் களுக்கோ, சாகுபடிக்கோ எவவிதக் குறைவுமன்னியில் அக்கிராமத்தார்கள் மிகுந்த திருப்தியுடன் காலக்ஷேபம் செய்துவந்தார்கள். அக்கிரஹாரத்திலுள்ள பிராஹ்மணர்கள் பெரும்பாலும் ஆந்திரர்கள். இதர ஜாதியார்களில் ரெட்டிகள் அதிகம். பிராஹ்மணர்கள் எல்லாருமே வேதாத்யயனம், கர்மானுஷ்டானம் ஆத்மகுணங்கள் பொருந்திய மஹான் களாக இருந்துவந்தார்கள். அத்யயனம் செய்யாதவரோ, ஆசார அனுஷ்டானமில்லாதவரோ, நிலமில்லாதவரோ அங்கு கிடையாது.

नात्रासीदनधीतयाजुषगणो नासीदनन्नप्रदो
नाप्यश्राद्धकरो न मोघनिरतो नासीद्‌कृष्यन्वितः ।
सर्वे स्नानपराः स्वदारनिरताः प्राप्तप्रजा विज्वराः
कर्तव्यैः शुभशोभनैश्च सहिता मित्रान्विता भोगिनः ॥

நாத்ராஸீதநதீதயாஜுஷகணோ நாஸீதநந்நப்ரதோ
நாப்யச்ராத்தகரோ ந மோகநிரதோ நாஸீ
தக்ருஷ்யன்வித: ।
ஸர்வே ஸ்னானபரா: ஸ்வதாரநிரதா: ப்ராப்தப்ரஜா
விஜ்வரா:
கர்தவ்யை: ஶுபஶோபனைச்ச ஸஹிதா மித்ராந்விதா
போகின: ॥

இந்த உத்தமமான கிராமத்தில் சதாவதானம், அஷ்டாவதானம், முதலான விசேஷ யோக்கியதையுள்ளவர் களாகவே பரம்பரையாய் இருந்துவந்ததினால் 'அவதானி வீடு' என்றே பிரஸித்தமாய் ஒரு குடும்பம் இருந்து வந்தது. அவர்களுக்கு கார்க்ய கோத்ரம், யஜுர் வேதம். அந்த வம்சத்தில் உதித்த காளஹஸ்தி பட்டர் என்பவருடைய

ஒரே புத்ரராகிய அஹோபல பட்டர் என்பவர் திருமலாம்பா என்ற மனைவியுடன் கிருஹஸ்த தர்மத்தை நடத்திவந்தார். அவர்களுக்கு ந்ருஸிம்ஹபட்டர், நரஹரிபட்டர், அளகாத்ரி பட்டர் என்று மூன்று புத்திரர்கள் ஜனித்தார்கள். ஸாவித்திரி என்று ஒரு பெண்ணும் இருந்ததாகத் தெரிகிறது. அம்மூன்று புத்திரர்களில் மூத்தவரான ந்ருஸிம்ஹபட்டர் வெங்கடாம்பா என்பவளை விவாஹம் செய்துகொண்டார். அவர்களுக்கு ஒன்பது பெண் ஸந்ததிகளேற்பட்டு குடும்பம் வெகு விஸ்தாரமாகிவிட்டது. அவர் தன் 80வது வயதில் ஆதுர ஸன்யாஸம் எடுத்துக்கொண்டு ராமசந்திராசிரமர் என்ற பெரியாரிடம் உபதேசம் பெற்று நாராயண ஆசிரமர் என்ற யோக பட்டத்துடன் விளங்கி வந்து ஸித்தியடைந்து விட்டார். இரண்டாவது குமாரரான நரஹரி பட்டர் 'பாப்பா' என்பவளை பத்னியாக அடைந்து நரஸிம்ஹன், சேஷன் என்ற இரண்டு புத்திரர்களை அடைந்தார்.

மூன்றுவது குமாரரான அளகாத்ரிபட்டர் விசேஷமான யோக்கியதை பெற்றிருந்ததுடன் ராமேசுவர லிங்கத்தில் விசேஷ பக்தியுள்ளவர். அவர் வர்துலகுண்டம் (வத்தல குண்டு) என்ற கிராமத்திலிருந்த திருமலபட்டர் என்பவரின் புத்திரி திம்மாம்பா என்ற ஸாத்வியை விவாஹம் செய்து கொண்டார். பரமசிவனிடத்தில் விசேஷமாக ஈடுபட்டிருந்த அவளுக்கு ஒருநாள் இரவு ஸ்வப்னத்தில் நல்ல வெண்ணிறமுள்ள சங்கம் கிடைத்ததாகத் தோற்றம் ஏற்பட்டது. பகவானுடைய அநுக்ரஹமென்றே தம்பதிகள் பாவித்தார்கள். அப்படியே அந்த மாது கர்ப்பிணியாகி கிரமமாக சிராவணமாஸம் கிருஷ்ணபக்ஷ நவமீ ரோகிணீ நக்ஷத்திரம் புதவாரம் கூடிய சுபதினத்தில் நடுப்பகலில் சிரமமன்னியில் பிரஸவித்து புருஷப்பிரஜை பிறந்தது.

सा देवी सुषुवे सुतं बुधदिने दीर्घायुषं रोहिणी-
राजच्छ्रावणकृष्णपक्षनवमीमध्यंदिने सद्गुणम् ॥

ஸா தேவீ ஸுஷுவே ஸுதம் புததினே தீர்க்காயுஷம் ரோஹிணீ
ராஜச்ச்ராவண க்ருஷ்ணபக்ஷ நவமீ மத்யந்தினே ஸத்குணம் ||

இந்த இடத்தில் வருஷம் சொல்லப்படவில்லை. ஆனால் பின்னால் வரும் சரித்திரத்தில் இப்பாலகரே ஸந்யாஸம் பெற்று ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகளாக ஆகும் ஸமயம் அவருக்கு 16 வயதுகூட முடியவில்லையென்று கண்டிருப்பதினாலும், அவர் சாலி சகம் 1544 துந்துபி வருஷம் பாத்ரபத கிருஷ்ண திருதீயை தினம் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டதாக ஸ்ரீமடம் குருபரம்பரை மூலமாகத் தெரிவதனாலும், அவர் ஜனித்தது பிலவங்க வருஷம் இங்கிலீஷ் கணக்குப்படி 1607 ஆகஸ்டு 5 என்று தெரிய வருகிறது. அன்று மேலே கண்ட திதி வார நக்ஷத்திரங்கள் பொருந்துகின்றன. அன்று காலையில் 9-நாழிகை வரை அஷ்டமியும், 11 நாழிகை வரை கிருத்திகையும் இருந்திருப்பதால் ஜனன காலமான நடுப்பகலில் நவமியும் ரோகிணியும்தான் என்பதில் ஸந்தேஹத்திற்கு இடமில்லை. பெற்றோர்கள் வெகு ஸந்தோஷத்துடன் ஜாதகர்மா செய்து தங்கள் குலதெய்வமான நரஸிம்ஹக் கடவுளின் பெயரையே இக்குழந்தைக்கு நாமகரணம் செய்தார்கள். பெற்றோர்களாலும் மற்றும் பந்துக்களாலும் மிகவும் அன்புடன் பாவிக்கப்பட்டு இப்பாலகர் வளர்ந்து வந்தார்.

சில வருஷங்கள் சென்றபிறகு ஏதோ பூர்வஜன்ம பாபத்தினால் திம்மாம்பாளை ஒரு பிரஹ்மரக்ஷஸ் பிடித்துக்கொண்டு மிகவும் ஆட்டிவைத்தது. அதை வெளிக்கிளப்புவதற்காக அளகாத்ரிபட்டர் சாஸ்திர ரீதியாய் செய்யவேண்டிய பரிஹாரங்களைச் செய்ததில் அது விலகிற்று. அது விலகும் போது தன் பெயரை இன்னொரு பையனுக்கு வைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டது. அதையனுஸரித்து இரண்டாவது புத்திரனுக்கு பிரஹ்மா என்ற வழக்கமில்லாத பெயரை வைத்தார்கள்.

இவ்விதம் இரண்டு புத்திரர்களையும் ரக்ஷித்துக்கொண்டு ஸந்தோஷமாக இந்த தம்பதிகள் குடித்தனம் நடத்தி வருகையில் அளகாத்திரி பட்டர் மதுரைக்குப்போயிருக்கும் சமயம் திம்மாம்பாளுக்கு ஜ்வரம் கண்டு காலமாகிவிட்டாள். உடனே பர்த்தாவிற்குச் சொல்லியனுப்பியதால் அவர் அன்று இரவிலேயே புறப்பட்டு வேகமாய் மறுநாள் காலையில் வந்து புத்திரன் பெயரால் எல்லா கிரியைகளையும் நடத்தினர். அப்பொழுது மூத்தகுமாரனுக்கு வயது ஐந்து, பிரஹ்மாவிற்கு ஒன்று. இனி இக்குழந்தைகளைச் சரியானபடி போஷித்துவர தகப்பனாரால் முடியாதென்று தோன்றினபடியால் திம்மாம்பா வின் ஸஹோதரரான யல்லாவதானிகள் என்பவர் அப்பொழுது தான் இருந்துவந்த வீரபூபால ஸமுத்திரம் என்ற ஊருக்கு அழைத்துச்சென்றார். பார்யையும் போய் குழந்தை களையும் விட்டுப் பிரியும்படி ஏற்பட்டதை நினைத்து நினைத்து மனம் நொந்து அளகாத்ரி பட்டரும் உத்தரதேச யாத்திரை யாகப் புறப்பட்டுவிட்டார்.

திம்மாம்பாவின் கூடப்பிறந்த ஸஹோதரர்கள் நான்கு பேர்கள். அக்குடும்பத்தாரை 'பரணி கிராமத்தார்' என்று சொல்லி வந்ததால் அவர்களுக்கு பூர்வீகம் 'பரணி' என்ற கிராமம் என்று தெரிகிறது. அவர்கள் கௌண்டின்ய கோத்ரத்தைச் சேர்ந்தவர்கள், யஜுர் வேதிகள். சிருங்கேரியில் அக்காலத்தில் பீடாதிபதியாக இருந்த ஸ்ரீ அபிநவ நரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகளுக்கு பூர்வாசிரம ஞாதிகள் என்றும் தெரிகிறது. அந்த நான்கு ஸஹோதரர் களில் மூத்தவரான வெங்கடாசலயஜ்வா நல்ல அனுஷ்டாதா, அக்னிஹோத்ரீ, சாஸ்திரக்ஞர். அவர் சிருங்கேரிக்கே போய் ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆதரவில் இருந்துகொண்டு தன்னுடைய கர்மானுஷ்டானங்களை சரிவர நடத்திவந்து, அங்குள்ளவர்களுடைய விசேஷ மதிப்பைப் பெற்று, கௌரவமாய் காலக்ஷேபம் செய்து வந்தார். அவர் தம்பிகளான வெங்கடாத்ரி சாஸ்திரிகள், யல்லாவ தானிகள், நரஸிம்ஹ பட்டர், இவர்கள் மூவரும்

ஊரிலேயே தங்கியிருந்தார்கள். இவர்களுடைய தாயாரும் இவர்களுடனேயே இருந்து வந்தாள். ஆகையால் இக்குழந்தைகளை மிக்க அன்புடன் மாதாமஹியும் மாமன் மார்களும் ஸம்ரக்ஷணை செய்து வளர்த்து வந்தார்கள். அவ் வூரிலிருந்த காசிபட்டர், கேசவபட்டர், என்ற இருவரைக் கொண்டு அக்ஷராப்யாஸம் முதல் படிப்பு சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்தார்கள்.

இவ்விதம் இருந்து வருகையில் உத்தரதேச யாத்திரை போயிருந்த அளகாத்ரிபட்டர் திரும்பி வந்து இக்குழந்தை களை தன்னுடனேயே தன் ஊருக்கு அழைத்துச்சென்றார். பிறகு தக்க வயது வந்தவுடன் மூத்த பையனுக்கு உபநயனம் செய்து வைத்து 'ராம' என்ற பெயருடைய இரண்டு தமிழர்களான வேதவித்வான்களிடம் அத்யயனம் செய்ய அனுப்பினார். அதி புத்திசாலியாயிருந்த இந்த பாலகரும் வெகு சீக்கிரமாக யஜுர்வேதம் அத்யயனம் செய்து அத்யயன சூரன் என்ற பிரஸித்தியை அடைந்தார்.

இதன் மத்தியில் அளகாத்ரிபட்டர் தன்னுடைய தமயனரின் அபிப்பிராயத்திற்கு இசைந்து நரஸிம்ஹபட்ட ரென்பவரின் புத்திரியை இரண்டாவது பத்னியாக விவாஹம் செய்துகொண்டார். மறுபடியும் அவர் உத்தர தேச யாத்திரை போய்வர நினைத்துப் புறப்பட்டபடியால் மறுபடியும் குழந்தைகள் அம்மான் வீட்டிலேயே இருக்கும்படி ஏற்பட்டது. அங்கே அத்யயனம் செய்துகொண்டிருக்கும் ஸமயம் நான்கு சாஸ்திரங்களிலும் பாரங்கதரான ஸ்ரீதர வெங்கடாத்ரி பட்டர் என்பவர் வந்து, இப்பாலகர் நல்ல ஸ்வரத்துடன் நன்கு வேதம் சொல்வதைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்து, ஒரு மந்திரத்தை உபதேசித்து ஜபம் செய்ய வேண்டிய கிரமத்தை எழுதிக்கொடுத்தார்.

दृष्टाः श्रीधरवेङ्कटाद्रिभणना भट्टाश्चतुश्शास्त्रिणः
श्रुत्वा तेन समीरितां श्रुतिममी हर्षं गताः सुस्वराम् ।

मन्त्रं ते प्रददुः विलिख्य वटवे तस्मै विशुद्धांशुको
नित्यं चोषसि भो पठेति पठितं तेनाप्यभूत् तत्तथा ॥

த்ருஷ்டா: ச்ரீதர வேங்கடாத்ரிபணு பட்டாச்சது: ஶாஸ்த்ரிண:
ச்ருத்வா தேந ஸமீரிதாம் ச்ருதிமமீ ஹர்ஷம் கதா: ஸுஸ்வராம் ।
மந்த்ரம் தே ப்ரதது: விலிக்ய வடவே தஸ்மை விஶுத்தாம் ஶுகோ
நித்யம் சோஷஸி போ படேதி படிதம் தேநாப்யபூத் தத் ததா ॥

[ இந்த ஸ்ரீதர வேங்கடாத்ரி பட்டர் இவருக்கு 100 வருஷங்களுக்குப் பின்னுல் வந்த அய்யாவாள் என்று மிகப் பிரஸித்தராயிருந்த ஸ்ரீதர வேங்கடேசர்தான் என்று நினைக்கக் கொஞ்சமும் இடமில்லை]. அதேமாதிரியாக இப்பாலகருடைய அத்யயனச் சிறப்பைக்கண்டு மதுரை, கீழ்மங்கலம் முதலிய கிராமங்களில் அக்காலத்தில் பிரஸித்தர்களாகவிருந்த பெரியோர்களும் மிகவும் சிலாகித்து ஆசீர்வதித்தார்கள்.

இப்படியிருக்கையில் அந்தக் கிராமம் திருடர்களால் மிகவும் பீடிக்கப்பட்டபடியால் அங்குள்ளவர்கள் வேறு கிராமங்களுக்குப்போய் குடியேறும்படி ஏற்பட்டது. யல்லாவதானி முதலான அம்மான்களின் குடும்பத்தார்கள் சிருங்கேரிக்கே போய்விடுவதாகத் தீர்மானித்துப் புறப்பட்டார்கள். அப்பொழுதுள்ள சிரமத்தில் இக்குழந்தைகளின் ஸம்ரக்ஷணையையும் தாங்கள் ஏற்றுக்கொள்வது ஸாத்தியமில்லை என்று தோன்றி அவர்களை தகப்பனுர் வீட்டிற்கே அனுப்பிவிட்டார்கள். இளைய தாயார் முதலான எல்லா பந்துக்களாலும் விசேஷமாக குழந்தைகள் ஆதரிக்கப்பட்டுவந்தன. அந்த ஸமயம் தேசாந்தரம் போயிருந்த அளகாத்ரிபட்டரும் ஊருக்குத் திரும்பிவந்து

சேர்ந்துவிட்டார். பெரிய பையன் வீரபூபால ஸமுத்திரத்தில் அம்மான் வீட்டிலிருக்கும்போது செய்து வந்த வித்யாப்யாஸ முறையைக் கேள்விப்பட்டுத் தானும் பாலகரை வேதம் சொல்லச்சொல்லிக் கேட்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்தார்.

### 3. மதுரை வாஸம்

இவ்விதம் ஊரிலேயே கொஞ்சகாலமிருந்துவருகையில் ஒருநாள் காலையில் அளகாத்ரிபட்டர் ஸ்நானத்திற்காகப் பெரிய பையனையும் அழைத்துக்கொண்டு போகும்போது, தன்னுடைய யாத்திரையின் மத்தியில் சிருங்கேரிக்குப் போயிருந்த ஸமயம் அங்குள்ள ஸ்ரீமத் ஆசார்யாருடைய தம்பி நரஸிம்ஹபட்டர் என்பவர் தன்னிடம் “நரஸிம்ஹனுக்கு ஸந்யாஸத்தில் நோக்கமிருக்குமா?” என்று கேட்டதாகவும், அதற்குத் தான் உடனே “அது அவனுக்கு சரியில்லை” என்று பதில் சொல்லிவிட்டதாகவும், சொன்னார். பாலகர் இதைக் கேட்டதும் தனக்கு ஸன்யாஸத்தில் அபிப்பிராயம் இல்லாமல் இருந்தபோதிலும் தைவகதியை யாராலும் மாற்றமுடியாதென்று நம்பினவரான தினால், தன் தகப்பனாரைப் பார்த்து “ஏன், அப்பா? ஸந்யாஸம் என்றால் ஸர்ப்பம்போல் நினைத்துக்கொண்டு வேண்டாமென்கிறீர்கள்” என்றார். பிற்பாடும் அநேக நாட்களில் நிலங்களையோ, தோட்டங்களையோ சுற்றிப் பார்க்கத் தகப்பனாருடன் செல்லும்போது அவர் சிருங்கேரி ஸம்பந்தமான வரலாறுகளை அடிக்கடி எடுத்துச் சொல்வதுண்டு.

இவ்வாறு சிறிது காலம் சென்றதும், அங்குள்ள அஸௌகரியத்தினால் அவ்வூரைவிட்டே மதுரைக்குப் போய்விடுவதாகத் தீர்மானம் செய்துகொண்டு அளகாத்ரி பட்டர் பத்நியையும் இரண்டு புத்ரர்களையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டார். அவருடைய மாமனாரும் தன் புத்திரர்களுடன்கூடவே புறப்பட்டார். அப்படியே

தமயனுர் நரஹரிபட்டரின் பார்யையும் இரு புத்திரர்களுடன் புறப்பட்டாள். எல்லோருமே மத்தியில் தங்கித் தங்கி மதுரை போய்ச்சேர்ந்தார்கள். அங்கே தன்னுடைய நண்பர் ஒருவருடைய கிருஹத்தில் தங்கிக்கொண்டு, ஆனல் தங்கள் சொந்தச் செலவிலேயே சமையல் செய்து போஜனம் செய்துகொண்டு குடித்தனம் நடத்திவந்தார்கள். அந்த ஸமயம் இப்பாலகருக்குப் பத பாடம் அத்யயனமாகிக் கொண்டிருந்தது. அத்யயனம் செய்துவைக்க மஹா புத்தி சாலியான வேங்கடாத்ரி என்பவர் கிடைத்தார். இளம் பர்வமாயிருத்த நாராயணபட்டர் என்பவரும் உதவினுர்.

அந்நகரத்தில் தங்கியிருக்கும்போது கடை வீதிகள், அரண்மனைகள், வீடுகள், மதில்கள் முதலான வைபவங்களை வெகு ஆனந்தமாக இப்பாலகர் பார்த்துக்கொண்டு வந்தார். மீனுக்ஷி ஸுந்தரேசர் ஆலயத்திற்குள் சென்று பொற்ருமரைக் குளத்தில் ஸ்நானம் செய்து,

कोटिसूर्यप्रतीकाशां भक्तेभ्योऽभीष्टदायिनीम् ॥

शंकरप्राणकान्तां तां शंकरीं शंकरीमपि ।
सर्वलोकस्य मीनाक्षीं पार्वतीं पाण्ड्यराजजाम् ॥

विलासान्मध्यवक्रस्थां बाहुं सव्येतरं कटौ ।
कृत्वा दक्षिणहस्तेन धृतपद्मां च चिन्मयीम् ॥

वाक्प्रदां वाक्स्वरूपां च जगत्पतिकुटुम्बिनीम् ।
जगदम्बां जगद्भद्रां जयन्तीं जगदीश्वरीम् ॥

दीप्यमानां महोभिश्च दीपावलिविराजिताम् ।
दिव्यज्ञानप्रदां देवीं सर्वमङ्गलदायिनीम् ॥

सर्वमङ्गलमाङ्गल्यां शिवां सर्वार्थदायिकाम् ।
शरण्यां त्र्यम्बकां देवीं नतो नारायणीं मुहुः ॥

கோடி ஸூர்ய ப்ரதீகாஶாம் பக்தேப்யோऽபீஷ்டதாயினீம் ‖

ஶங்கர ப்ராண காந்தாம் தாம் ஶங்கரீம் ஶங்கரீமபி ।
ஸர்வலோகஸ்ய மீநாக்ஷீம் பார்வதீம் பாண்ட்யராஜஜாம் ‖

விலாஸான் மத்ய வக்ரஸ்தாம் பாஹும் ஸவ்யேதரம்
கடௌ ।
க்ருத்வா தக்ஷிண ஹஸ்தேன த்ருதபத்மாம் ச சின்மயீம் ‖

வாக்ப்ரதாம் வாக்ஸ்வரூபாம் ச ஜகத்பதி குடும்பினீம் ।
ஜகதம்பாம் ஜகத்பத்ராம் ஜயந்தீம் ஜகதீச்வரீம் ‖

தீப்யமானும் மஹோபிச்ச தீபாவளி விராஜிதாம் ।
திவ்ய ஞான ப்ரதாம் தேவீம் ஸர்வ மங்கள தாயினீம் ‖

ஸர்வ மங்கள மாங்கள்யாம் ஶிவாம் ஸர்வார்த்த தாயிகாம் ।
ஶரண்யாம் த்ர்யம்பகாம் தேவீம் நதோ நாராயணீம்
முஹு: ‖

என்றெல்லாம் வர்ணிக்கக்கூடிய மீனாக்ஷியம்மனையும், அப்படியே,

जटिलं चन्द्रचूडं च नीलग्रीवं जगत्प्रभुम् ।
अप्रधृष्यमचिन्त्यं च ललाटाक्षं पिनाकिनम् ॥

कोटिसूर्यप्रतीकाशं कोटिचन्द्रसुशीतलम् ।
गङ्गाधरं महापुण्यं महापुण्यविधायकम् ॥

अनन्तवेदवेद्यं च वेदान्ते च प्रतिष्ठितम् ।
चिन्मयं परमानन्दं सत्यं नित्यं सदाशिवम् ॥

वृषयुक्तं महालिङ्गं मधुरापुरभूषणम् ।
शोषणं सर्वपापानां कामदं सर्वदेहिनाम् ॥

ஜடிலம் சந்த்ரசூடம் ச நீலக்ரீவம் ஜகத்ப்ரபும் ।
அப்ரத்ருஷ்யமசிந்த்யம் ச லலாடாக்ஷம் பிநாகினம் ‖

கோடி ஸூர்ய ப்ரதீகாஸம் கோடி சந்த்ர ஸுஸீதளம் |
கங்காதரம் மஹாபுண்யம் மஹாபுண்ய விதாயகம் ||

அனந்த வேதவேத்யம் ச வேதாந்தே ச ப்ரதிஷ்டிதம் |
சின்மயம் பரமானந்தம் ஸத்யம் நித்யம் ஸதாஸிவம் ||

வ்ருஷ யுக்தம் மஹாலிங்கம் மதுராபுர பூஷணம் |
ஸோஷணம் ஸர்வ பாபானும் காமதம் ஸர்வதேஹிநாம் ||

ஸ்ரீ ஸுந்தரேசுவரரையும் அடிக்கடி தர்சிப்பதுண்டு. ஸ்ரீ ஸுந்தரேசுவரருடைய தங்க ரதம் வெகு அழகாக இருந்தது. அதை முத்துவீரப்ப நாயக்கர் ஸமர்ப்பணம் செய்ததாகத் தெரிகிறது.

सौन्दरेशमहेशस्य रथं हेमविनिर्मितम् ।
यं समर्पितवान् वीरो मुद्दवीरप्पनायकः ॥

ஸௌந்தரேஸ மஹேஸஸ்ய ரதம் ஹேம விநிர்மிதம் |
யம் ஸமர்பிதவான் வீரோ முத்துவீரப்பநாயக: ||

இவ்விதமாக ஆலய தர்சனம், வேத ஆவிருத்தி, பித்ரு சுசுரூஷை முதலான கார்யங்களில் ஈடுபட்டிருந்த ஸமயம் போக அவகாசம் கிடைத்தபோது, அளகாத்ரி பட்டரின் மாமனூர் நரஸிம்ஹ பட்டர் ஸ்ரீராமருடைய திவ்ய சரித்திரத்தை இப்பாலகருக்கு விஸ்தாரமாக எடுத்துச் சொல்வார். அவர் சொன்னதிலிருந்து ஸ்ரீராமர் அவருடைய மாற்றுந்தாய்களிடம் எவ்விதம் நடந்துகொண்டாரென்ற விஷயம் நன்றாக மனதில் பதிந்துவிட்டபடியால், ஸ்ரீராமர் போல தானும் நடந்துகொள்ளவேண்டுமென்ற எண்ணம் மேலிட்டு, இளைய தாயாரை விசேஷ அன்புடன் பாவித்துப் பணிவிடை செய்து வந்தார்.

रामस्य सदृशीं वृत्तिं काङ्क्षमाणः स चात्मनः ।
सापत्न्यमातरं स्वां च गतासूयो न्यषेवत ॥

ராமஸ்ய ஸத்ருஸீம் வ்ருத்திம் காங்க்ஷமாண: ஸ சாத்மந: ।
ஸாபத்ன்ய மாதரம் ஸ்வாம் ச கதாஸூயோ ந்யஷேவத ॥

இவ்விதமாக மதுரையில் இருந்து வருகையில் ஸேது யாத்திரை போய்வர உத்தேசித்து அளகாத்ரிபட்டர் இப்பாலகரை அழைத்துக்கொண்டு புறப்பட்டு, 1 திருப்பணம் கிராமம் வழியாக ஸோமேச மதுரையில் தங்கி, அப்பொழுது செய்யவேண்டியதாயிருந்த திம்மாம்பாளின் சிராத்தத்தை முடித்துக்கொண்டு, கிரமமாக தர்ப்பசயனம், சக்ர தீர்த்தம் முதலான ஸ்தலங்களை தர்சித்தார்கள். இதுவே முதல் தடவையாக இப்பாலகர் ஸமுத்திரத்தைப் பார்க்கிறபடியால் வெகு ஆச்சர்யத்துடன் உத்ஸாகமாகப் பார்ந்து ஆனந்தமடைந்தார். உடனே ஸ்ரீ ராமபிரானுடைய பாததூளி பட்ட விடங்களல்லவா இவை என்ற ஞாபகம் வந்ததால் ஸ்ரீராமரையே அநுஸந்தானம் செய்து வந்தார். பிறகு ராமேசுவரம், பிரஹ்மகுண்டம், ஹனுமத் குண்டம், முதலான திவ்ய க்ஷேத்திரங்களிலெல்லாம் ஸ்நான தர்சனவந்தனுதிகள் செய்துவிட்டு, மறுபடியும் ஸோமேச மதுரை, திருப்பணம் மார்க்கமாக மதுரைக்குத் திரும்பிவந்தார்கள்.

ஊருக்குத் திரும்பிவந்தபிறகு அளகாத்ரிபட்டர் தன் இளைய குமாரரான பிரஹ்மாவிற்கு தன்னுடைய சக்திக்குத் தக்கபடி விமரிசையாக உபநயனம் செய்துவைத்தார். மூத்த பையன் நல்ல மேதாவியாக இருந்ததுடன் யஜுர் வேதத்தில் எந்த இடம் கேட்டாலும் கொஞ்சமேனும் தடையன்னியில், ஸ்பஷ்டமான உச்சரிப்புடன், அழகான கண்டத்துடன், சொல்வதைக்கேட்டு வேதத்தில் கரை கண்ட சூரர்கள் யாவரும் மிகவும் ஸந்தோஷித்தார்கள். அவ்வித்வான்களில் ஜடாந்தம் அத்யயனம் செய்து அக்காலத்தில் பிரஸித்தராயிருந்த வெங்கடகிருஷ்ணர் என்பவர்

1 இது இப்பொழுதுள்ள திருப்புவனமாகவும் ஸோமேச மதுரை என்பது மானுமதுரையாகவும் இருக்கலாம்.

ஒருவர். இந்தப் புத்திரன் தனக்குக் கிடைத்திருக்கும் பெரிய நிதி என்று கருதிக்கொண்டிருந்த அளகாத்ரிபட்டர் ஸந்தோஷப்பட்டாரென்று எடுத்துச்சொல்ல அவசியமே இல்லை.

नारसिंहस्तु मेधावी निशिताध्ययनान्वितः ।
अवधानिषु सर्वेषु पृच्छत्सु प्रावदद्यजुः ॥

गुणज्ञा वेदविद्वांसो ननन्दुः स्वरशोभनम् ।
अनर्गलप्रवक्तारं स्पष्टाक्षरमवेक्ष्य तम् ॥

पटुः वेङ्कटकृष्णाख्यो जटान्तश्रुतिपारगः ।
पृष्ट्वा तं वीक्ष्य वक्तारं हर्षाच्चुम्बनमाचरत् ॥

ननन्द च पिता तस्य निशिताध्ययनान्वितम् ।
अग्रजं पुत्रमालोक्य शश्वत्पुत्रनिधानवान् ॥

நாரஸிம்ஹஸ்து மேதாவீ நிஶிதாத்யயனான்வித: |
அவதானிஷு ஸர்வேஷு ப்ருச்சத்ஸு ப்ராவதத் யஜு: ||

குணக்ஞா வேதவித்வாம்ஸோ நநந்து: ஸ்வரஶோபநம் |
அநர்கள ப்ரவக்தாரம் ஸ்பஷ்டாக்ஷரமவேக்ஷ்ய தம் ||

படுர் வேங்கடக்ருஷ்ணாக்யோ ஜடாந்தச்ருதிபாரக: |
ப்ருஷ்ட்வா தம் வீக்ஷ்ய வக்தாரம் ஹர்ஷாத் சும்பனமாசரத் ||

நநந்த ச பிதா தஸ்ய நிஶிதாத்யயனான்விதம் |
அக்ரஜம் புத்ரமாலோக்ய ஶச்வத் புத்ரநிதானவான் ||

## 4, பிக்ஷாடனம்.

இவ்விதமாக அளகாத்ரிபட்டர் மதுரையில் இருந்துகொண்டு ஸந்தோஷமாய் காலக்ஷேபம் செய்துவருகையில், தேசத்திலேயே கடுமையான க்ஷாமதசை ஏற்பட்டுவிட்டது. வைதிக விருத்தியிலிருந்தோ வேறு எவ்விதத்திலோ

குடித்தனம் நடத்த ஸாத்தியப்படாமல் போய்விட்ட படியால் மதுரையை விட்டு வெளியே போகவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. வெளியூர்களிலும் யாசகம் எடுத்தே ஜீவிக்கவேண்டிய நிலை வரையில் வறுமை பீடித்தபடியால் அப்படியே ஒவ்வொரு கிராமமாய் அளகாத்ரிபட்டர் குடும்பத்துடன் அலைந்துகொண்டிருக்கும் ஸ்[illegible]ருந்தது. அந்த முறையில் தோகருமானு, சோழவந்தான், ராமநாதபுரம், கூலப்ப நாயக்கம், வீரபூபால ஸாகரம், கங்கவரம், கீழ்மங்கலம், மேல்மங்கலம் முதலிய கிராமங்களில் ஸஞ்சரித்துவந்தார்.

एवं ते वर्तमानास्तु दुष्कालक्षामपीडिताः ।
याच्ञावृत्तिमुपाश्रित्य ग्रामाद् ग्रामान्तरं ययुः ॥

ग्रामं तोगरुमानुं च चोलवन्दं ततः परम् ।
रामनाथपुरं चापि ग्रामं गूलप्पनायकम् ॥

आश्रयं मातुलानां च वीरभूपालसागरम् ।
वरं गङ्गवरं चापि मङ्गलं कीलुमङ्गलम् ॥

हृष्टं पुष्टं श्रिया जुष्टं मङ्गलं मेलुमङ्गलम् ।

ஏவம் தே வர்த்தமாநாஸ்து துஷ்கால க்ஷாம பீடிதா: ।
யாச்ஞா வ்ருத்தி முபாச்ரித்ய க்ராமாத் க்ராமாந்தரம் யயு: ॥

க்ராமம் தோகருமானும் ச சோளவந்தம் தத: பரம் ।
ராமநாதபுரம் சாபி க்ராமம் கூளப்பநாயகம் ॥

ஆச்ரயம் மாதுலாநாம் ச வீரபூபால ஸாகரம் ।
வரம் கங்கவரம் சாபி மங்களம் கீலுமங்களம் ॥

ஹ்ருஷ்டம் புஷ்டம் ச்ரியா ஜுஷ்டம் மங்களம்
மேலுமங்களம் ।

[இதில் கண்ட கிராமங்களில் சோழவந்தான், கீழ் மங்கலம், மேல்மங்கலம் என்ற கிராமங்கள் அதே பெயர் களுடன் விளங்கி வருகின்றன. தோகருமானு என்பது இப்பொழுது துவரிமான் என்றும், கங்கவரம் என்பது கொடைக்கானலுக்குப் போகும் வழியில் இப்பொழுது கங்குவார்ப்பட்டியென்றும் சொல்லப்படுகின்றன. ராமநாத புரம் என்பது மதுரைக்கு கிழக்கேயிருக்கும் பிரஸித்தமான ராமநாதபுரமாகத் தோன்றவில்லை. கூலப்ப நாயக்கம் குள்ளப்புரம் என்று இப்பொழுது விளங்கிவருகிறது. அளகாத்ரிபட்டருடைய மைத்துனர்கள் இருந்து வந்த வீரபூபால ஸாகரம் என்பது மேல்மங்கலத்திற்கும் பெரிய குளத்திற்கும் மத்தியில் இருந்த செழிப்பான கிராமம். அவ்வூரில் அத்யயன ஸம்பன்னர்களாகத் தெலுங்கர்கள் முன்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது. இப்பொழுது அங்கே பிராஹ்மணர்களே கிடையாது. ஊரின் பெயரும் நந்தியாவரம் என்று இப்பொழுது வழங்கிவருகிறது. அளகாத்ரிபட்டர் காலத்தில் இந்த கிராமங்களில் எல்லாம் வருந்தி வருபவர்களுக்கு ஆதரவு கொடுத்து போஷிக்கக் கூடிய ஆஸ்திகராயுள்ள தனவான்கள் க்ஷாம காலத்திலும் உதாரமாய் உதவி வந்தார்களென்று தெரிகிறது. மேலும் இந்தக் கிராமங்களைக் குறிப்பிடும்போது விசேஷமான அடைமொழிகள் மேல்மங்கலத்திற்குக் கொடுக்கப்பட்டிருக் கிறதை அனுஸரித்து அக்கிராமம் இன்னமும் தன் பெருமையைக் காப்பாற்றி வருகிறது.]

இவ்விதம் ஸஞ்சரித்துவிட்டு சிரமம் தீராமலே அளகாத்ரிபட்டர் தன் ஜனன பூமியான ஸோமேச மதுரை என்ற மானுமதுரைக்கே திரும்பிவிட்டார். அங்கே அவருடைய தாயாரின் பந்துக்கள் இருந்து வந்தார்கள். அவ்வூரில் அதிகமாக இருந்த திராவிட பிராமணர்கள் வித்வான்களாகவும் ஸம்பன்னர்களாகவும் இருந்தார்கள். தெலுங்கர்களான அளகாத்ரிபட்டரின் பந்துக்கள் பத்து வீட்டுக்காரர்கள் அங்கு வஸித்துவந்தனர்.

साक्षरैः सप्रतिष्ठैश्च पूर्णं द्रविडपुङ्गवैः ।
आन्ध्रैर्दशगृहैश्चापि स्थितैः स्वस्यैव बान्धवैः ॥

ஸாக்ஷரை: ஸப்ரதிஷ்ட்டைச்ச பூர்ணம் த்ரவிட புங்கவை: ।
ஆந்த்ரைர் தசக்ருஹைச்சாபி ஸ்திதை: ஸ்வஸ்யைவ
பாந்தவை: ॥

அளகாத்ரிபட்டர் தன் பார்யையையும் இளைய பையனையும் மாத்திரம் தன்னுடன் அழைத்துக்கொண்டு அவ்வூர் சென்றார்.

மூத்த குமாரர் தன் மாமன் இருந்துவந்த வீரபூபால ஸாகரத்திலேயே தங்கிக்கொண்டு, பந்துக்களின் உதவியின் பேரில் காலம் கடத்திவந்தபோதிலும், வறுமை காலத்தில் அங்குள்ள மாமனை அதிக சிரமப்படுத்த இஷ்டமில்லாமல் அன்னபூர்ணை என்ற ஒரு ஸாத்வியின் வீட்டில் இருந்து கொண்டு, பிரஹ்மசாரியின் நியமப்படி பந்துக்கள் முதலானவர்களின் கிருஹங்களில் பிக்ஷை எடுத்தே ஆஹாரம் செய்து வந்தார். தானே ஸ்வாதீனமாய் பிக்ஷையெடுத்து சாப்பிடுவதில் உள்ள ஸுகம் வேறொருவர் விருந்து போட்டாலும் வருமா என்று நினைத்து இவ்விதம் செய்தார்.

स भुङ्क्ते स्वार्जितं चान्नं भैक्ष्यमेव समाचरन् ।
स्वार्जितं विगुणं चापि परस्वात्तु विशिष्यते ॥

यथा प्रीणन्ति गात्राणि स्वार्जितेनान्नलेशतः ।
न तथा परदत्तेन षड्रसान्नेन वा यतः ॥

ஸ புங்க்தே ஸ்வார்ஜிதம் சான்னம் பைக்ஷ்யமேவ
ஸமாசரன் ।
ஸ்வார்ஜிதம் விகுணம் சாபி பரஸ்வாத்து விசிஷ்யதே ॥
யதா ப்ரீணந்தி காத்ராணி ஸ்வார்ஜிதேநாந்நலேசத: ।
ந ததா பரதத்தேன ஷட்ரஸான்னேன வா யத: ॥

இக்காலத்திலுள்ள சிலர்களுக்கு பிக்ஷை எடுப்பதும் இன்னொருவர் கொடுத்துத்தானே யாகவேண்டும், அது எப்படி ஸ்வார்ஜிதமாகுமென்று ஸந்தேஹம் வரலாம். கிருஹஸ்தனுக்கு ஆதித்யம் அவசியமான தர்மம் என்ப துடன் அதிதிகளுக்குக்கொடாமல் இவன் சாப்பிட்டால் இவனை திருடன் என்று சொல்லுகிறது சாஸ்திரம். அதிலும், அரிசியாக இருக்கும்வரையில் இவனுக்கு சொந்தமென்ற வியவஹாரம் இருந்தபோதிலும், அவ்வரிசியே பாகம் செய்து அன்னமாகிவிட்டால் அதற்கு ஸன்யாஸிகளும் பிரஹ்மசாரிகளும் பாகஸ்தர்களாகி விடுகின்றனர்.

"यतिश्च ब्रह्मचारी च पक्वान्नस्वामिनावुभौ ॥"

யதிச்ச ப்ரஹ்மசாரீ ச பக்வான்ன ஸ்வாமிநாவுபௌ ॥

என்று வற்புறுத்துகிறபடியால் இவர்கள் பிக்ஷைக்குப் போகும்போது தன் சொத்தையே தான் கேட்கிறார்கள். ஆகையால் பிக்ஷான்னம் ஸ்வார்ஜிதமென்பதில் ஸந்தேஹிக்க இடமில்லை.

இவ்விதமாக இவ்வளவு சிரமமிருந்தபோதிலும்தன் ஸ்வா தந்திரியத்தை விட்டுக்கொடுக்காமலே நடந்துவந்ததால் மனதில் எவ்விதக்கவலையுமற்று திருப்தியாயிருந்து வந்தார். மனக்கவலையற்று இருந்தபடியால் தான்கற்றிருந்த வேதம் பூராவையும் ஆவிருத்தி செய்துகொண்டு வந்ததுடன் காசி பட்டரென்பவரிடம் அமரம் முதலானதுகளையும் பாடம் செய்துவந்தார்.

परां निर्वृतिमागाच्च स्वातन्त्र्यगुणवैभवात् ।
आवर्तयति तच्छन्दः पठितं तु यदादितः ॥

काशिभट्टमुखात् स्वर्गवर्गादिकमपीपठत् ।

பராம் நிர்வ்ருதிமாகாச்ச ஸ்வாதந்த்ர்ய குணவைபவாத் ।
ஆவர்தயதி தச்சந்த: படிதம் து யதாதித: ॥

காம்பீபட்டமுகாத் ஸ்வர்கவர்காதிகமபீபடத் |

இவ்விதமாக ஒரு வருஷ காலம் வீரபூபால ஸாகரத்தி லேயே இருந்துவிட்டார். சிருங்கேரிக்குப் போகாமல் அங்கேயே இருந்த தாய்மாமனுக்கு ஒரு பெண் ரூபவதி யாகவும் விவாஹ வயது வந்தவளாகவும் இருந்தாள். அந்தப்பெண்ணை இவருக்கு விவாஹம் செய்துகொடுக்க அவர் உத்தேசித்துபிரஸ்தாவம் செய்திருக்கலாம். ஆனாலும் இப்பாலகருக்கு அப்பெண்ணை விவாஹம் செய்துகொள்ள நோக்கமில்லை. சிருங்கேரியில் இருந்துவந்த மூத்த மாமன் வெங்கடாசல யஜ்வா தன் பெண்ணைக் கொடுப்பதாக முன்னமேயே சொல்லியிருந்தபடியால் அந்தப் பெண் ணிடத்திலேயேதான் இவருக்கு நோக்கமிருந்தது.

मातुलस्य सुतां तत्र वैवाहिकवयस्विनीम् ।
सुरूपां वीक्षमाणोऽपि तस्यां वै नाकरोन्मनः ॥

श्रुत्वा कामयते सोऽयं ज्येष्ठमातुलकन्यकाम् ।
शृङ्गेर्यां विद्यमानां तु प्रतिज्ञातां च तेन ह ॥

மாதுலஸ்ய ஸுதாம் தத்ர வைவாஹிகவயஸ்வினீம் |
ஸுரூபாம் வீக்ஷமாணோபி தஸ்யாம் வை நாகரோன்மந: ||

ச்ருத்வா காமயதே ஸோऽயம் ஜ்யேஷ்டமாதுலகன்யகாம் |
ச்ருங்கேர்யாம் வித்யமாநாம் து ப்ரதிக்ஞாதாம் ச தேந ஹ ||

இந்த விவாஹப் பிரஸ்தாவ மேற்பட்டதினாலேயோ வேறு காரணத்தினாலேயோ இனி அங்கேயிருப்பது நியாய மில்லையென்று புறப்பட்டு மதுரைக்கே போய்ச் சேர்ந்து விட்டார். அங்கே தகப்பனார் இல்லாததினால் ஒரு கிருஹஸ்தரைத் துணையாகக் கூட்டிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டு திருப்பணம் மார்க்கமாக ஸோமேச மதுரைக்கே போய் தகப்பனார் இருந்த வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தார். உடனே தம்பி ஓடிவந்து தமயனை வீட்டிற்குள் அழைத்துச்

சென்று தகப்பனுரையும் இளைய தாயாரையும் கூப்பிட்டான். இத்தனை நாளாகப் பிரிந்திருந்த புத்திரன் திரும்பி வந்து விட்டதில் அவர்களுக்கு இருந்த ஸந்தோஷத்திற்கு அளவே யில்லை. இவரும் அவ்விருவர்களையும் வணங்கினுர். அவ் வூரில் அநேக சிஷ்யர்களுக்கு வேதாத்யயனம் செய்து வைத்திருந்த திம்மாவதானி என்பவரும் அந்த ஸமயம் வீட்டிற்குள் வந்தார். அவரையும் பாலகர் நமஸ்கரித்தார். அந்த பிராஹ்மணர் யோக க்ஷேமம் கூடக் கேட்காமல் உடனே பாலகரை வேதத்திலேயே பரீக்ஷித்தார். அழகான ஸ்வரத்துடன் ஸ்பஷ்டமாக உச்சரித்து பதில் சொன்னது யாருக்குமே காதுக்கு இனிமையைக்கொடுத்தது. வித்வானுன அவர் ஸந்தோஷமடைந்தார் என்று சொல்ல வேண்டுமா ?

स विप्रः प्राप्तमात्रं तं छन्द एव हि पृष्टवान् ।
स स्वरो योऽभवत् तत्र स्वर्गलोकेऽपि दुर्लभः ॥

तस्योच्चारणमासीच्च श्रवणानन्ददायकम् ।
सर्वेषामपि भूतानां किमु हन्त विपश्चिताम् ॥

ஸ விப்ர: ப்ராப்தமாத்ரம் தம் சந்த ஏவ ஹி ப்ருஷ்டவான் ।
ஸ ஸ்வரோ யோऽபவத் தத்ர ஸ்வர்க்கலோகேऽபி துர்லப: ॥

தஸ்யோச்சாரண மாஸீச்ச ச்ரவணுநந்ததாயகம் ।
ஸர்வேஷாமபி பூதாநாம் கிமு ஹந்த விபச்சிதாம் ॥

இவர் மாத்திரமல்ல வேதாத்யயனத்தில் பிரஸித்தராக யார் யார் வந்தாலும் இப்பாலகரை வேதம் சொல்லச் சொல்லிக்கேட்டு ஸந்தோஷமடைவார்கள்.

यो यः प्रतिष्ठितस्तत्र तस्य तस्य समागमे ।
पप्रच्छैनं वटुं भूयः तदुक्तैस्तानतोषयत् ॥

யோ ய: ப்ரதிஷ்ட்டிதஸ்தத்ர தஸ்ய தஸ்ய ஸமாகமே ।
பப்ரச்சைநம் வடும் பூய: ததுக்தைஸ்தானதோஷயத் ।

ஸோமேச மதுரையில் வைகையாற்றின் மேல்கரையில் கிராமமும் கீழ்கரையில் அரசனுடைய அரண்மனையும் இருந்தன. அவ்வூர் சிவாலயத்திலுள்ள லிங்கம் பால்போல் வெண்ணிறமுள்ளது. சந்திரனால் பிரதிஷ்டை செய்யப் பட்டது. அவ்வூரே பிதாவின் மாதாமஹரின் ஊராக இருந்தபடியால் பந்துக்கள் தங்கள் தங்கள் வீட்டுக்கு இவரை அபிமானத்துடன் அழைப்பார்கள்.

स्वपितुर्जननाधारं जननीवत् सुखप्रदम् ॥

ஸ்வபிதுர் ஜனனாதாரம் ஜனனீவத் ஸுகப்ரதம் ॥

அங்கிருந்த ஸமயம் இவர் பதபாடமும் இவர் தம்பி ஸம்ஹிதாபாடமும் செய்துவந்தார்கள். இவ்விதமாக பார்யையுடனும் இரு குமாரர்களுடனும் ஸோமேச மதுரையிலேயே ஸௌக்கியமாய் ஒருவருஷகாலம் கழிந்தது.

## 5. சிருங்கேரி யாத்திரை.

இவ்விதம் ஸோமேச மதுரையில் இருக்கும்போது இப்பாலகருக்கு 16-வது வயதுகூட வராமலிருந்தும் விவாஹ விஷயமான ஆலோசனை ஏற்பட்டது. பெரிய மாமா இருக்கையில் அவர் பெண்ணைத் தவிர வேறு பெண்ணை கிரஹிக்க இஷ்டமில்லை. அவரோ தூரதேசமான சிருங்கேரியில் இருக்கிறார். அவ்வளவு தூரம் போய் வருவதும் ஸாத்தியமில்லை. அவ்வளவு தூரம் போயும் மாமா பெண்ணைக்கொடுக்க ஸம்மதிக்கவில்லையானால் வீண் அலைச்சலாக ஆகிவிடும். இவ்விதமெல்லாம் நினைத்து வந்த ஸமயம், மிகவும் நெருங்கிப் பழகிவந்த திம்மாவதானி என்பவர் "ஸந்தேஹமே வேண்டாம். எப்படியும் உன் மாதாமஹி விவாஹத்தை நடத்திக்கொடுப்பாள்" என்று தைர்யம் சொன்னார். அதைக்கேட்டு சிருங்கேரிக்குத் தானாகவே போகவேண்டுமென்று இப்பாலகர் தீர்மானித்துக் கொண்டார்.

இந்த ஸந்தர்ப்பத்தில் சிருங்கேரியிலிருந்து அப்பாள பட்டர், கொண்டபட்டர் என்ற இரு ஸஹோதரர்கள் ஸேது யாத்திரையாகப் புறப்பட்டுப்போகும் வழியில் ஸோமேச மதுரைக்கு வந்தார்கள். கொண்டபட்டருக்குப் பெண் கொடுத்த மாமனும், இப்பாலகருடைய மாதாமஹனும் ஸஹோதரர்களானபடியால் இவர்களும் பந்துக்களே யாவார்கள். அவர்கள் சிருங்கேரியிலிருந்த பெரிய மாமன் வெங்கடாசல யஜ்வாவிடமிருந்து ஒரு கடிதம் கொண்டு வந்து அளகாத்ரிபட்டரிடம் கொடுத்தார்கள். அக் கடிதத்தில் தன் பெண்ணை நரஸிம்ஹனுக்கே கொடுக்க உத்தேசித்திருப்பதாக எழுதியிருந்தார். கொண்டபட்ட ருடைய பார்யைக்கு அந்த யஜ்வா தமயன் முறையான தினால் அவளும் இவ்விஷயத்தை வெகு உறுதியாகவே சொன்னாள். இதைக்கேட்டு அளகாத்ரிபட்டர் மிகவும் ஸந்தோஷத்துடன் ஒப்புக்கொண்டார். எல்லோரும் புறப்பட்டு சிருங்கேரிக்குப் போவது மிகவும் சிரமமானதினால் நரஸிம்ஹனை மாத்திரம் இவர்கள் கோஷ்டியில் சிருங்கேரிக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தார்.

அப்படியே அவர்களுடன் கிருஹத்தை விட்டுப் புறப்படும்போது நிமித்தங்கள் சரியாக இல்லாததினால் கொஞ்சம் கலக்கம் ஏற்பட்டபோதிலும் அதைப் பொருட் படுத்தாமல் பாலகர் தைர்யப்படுத்திக்கொண்டு புறப்பட்டு விட்டார். அளகாத்ரிபட்டருக்கு மாத்திரம் இந்த நிமித்தங் களினால் சிருங்கேரிக்குப்போய் விவாஹம் நடக்காமல் ஸந்யாஸமேற்பட்டுவிடுமோ என்ற கவலை வந்தது. அவருடைய தமக்கை ஸாவித்திரியின் குமாரரும், தமயனாரின் பெண்ணை விவாஹம் செய்துகொண்டிருப்பவரு மான கங்காதரபட்டர் என்பவர் "சிருங்கேரியில் சிஷ்யருக் காக வேறு இடத்தில் தீர்மானமாகிவிட்டது ஒன்றும் பயப் படவேண்டாம்" என்று சொன்னார். அதைக்கேட்டு அளகாத்ரிபட்டர் கொஞ்சம் ஸமாதானம் அடைந்தார்.

ஆனாலும் தானும் சிருங்கேரிக்குப் போய்வருவதே நல்லது என்று தீர்மானித்துக்கொண்டு புறப்பட்டுவிட்டார்.

அப்பாளபட்டருடைய கோஷ்டியுடன் பாலகர் மறுபடியும் திருப்பணம், தர்ப்பசயனம், ராமேசுவரம் முதலான ஸ்தலங்களுக்குப் போய்விட்டுத் திரும்பி ஸோமேச மதுரைக்கு வந்ததும் அளகாத்ரிபட்டரும் பார்யையுடனும் இளைய குமாரனுடனும் சிருங்கேரிக்கே புறப்பட்டுவிட்டார் என்று தெரிந்தது. இவர்களும் வேகமாகவே போய் அளகாத்ரிபட்டருடன் சேர்ந்துகொண்டு எல்லோருமே யாத்திரையை நடத்தினர்கள். மத்தியில் அநேக இடங்களில் தங்கித் தங்கி கற்கோட்டையினுல் சூழப்பட்டிருந்த திருச்சிராப்பள்ளிக்குப் போய்ச்சேர்ந்தார்கள். அங்கே காவேரியில் ஸ்நானம் செய்துகொண்டும், மலைக்கோவிலில் தர்சனம் செய்துகொண்டும், கடைவீதிகளைப் பார்த்துக்கொண்டும், அங்கு நடந்துவந்த பாகவதப் பிரவசனத்தை சிரவணம் செய்துகொண்டும், ஏதேனும் மரத்தடியில் சமையல் செய்து ஆஹாரம் செய்துகொண்டும் ஸந்தோஷமாக ஒருமாஸ காலம் திருச்சிராப்பள்ளியிலேயே தங்கிவிட்டார்கள். அங்கிருக்கும்போது சிதம்பர தீக்ஷிதர் என்ற பெரியாரையும் பார்த்தார்கள்.

பிறகு ஜம்புகேசுவரம் போய் ஸ்வாமி தர்சனம் செய்துகொண்டு அப்படியே ஏழு பிராகாரங்கள் சூழ்ந்த ஸ்ரீரங்கநாதர் ஆலயம் சென்று,

कोटिसूर्यप्रतीकाशं पवित्रं परमं हरिम् ।
विष्णुं प्रणवगम्यं च वासुदेवमनामयम् ॥

वामभद्रोरुविन्यस्तवामबाहुं धृताङ्गदम् ।
लक्ष्मीभूधृतपादाब्जं हस्तविन्यस्तमस्तकम् ॥

कैवल्यपददातारं ज्ञानमुद्रासमन्वितम् ।
आधारं सर्वजगतां स्तुत्यं स्तोतृस्वरूपिणम् ॥

तमादौ ब्रह्मणा लब्धं इक्ष्वाकुनृपपूजितम् ।
स्थिरीभूतं च रङ्गेऽत्र कावेरीद्वयमध्यमे ॥

கோடி ஸூர்ய ப்ரதீகாஸம் பவித்ரம் பரமம் ஹரிம் ।
விஷ்ணும் ப்ரணவ கம்யம் ச வாஸுதேவமநாமயம் ॥

வாமபத்ரோரு விந்யஸ்த வாம பாஹும் த்ருதாங்கதம் ।
லக்ஷ்மீ பூ த்ருத பாதாப்ஜம் ஹஸ்த விந்யஸ்த மஸ்தகம் ॥

கைவல்யபத தாதாரம் ஞானமுத்ரா ஸமந்விதம் ।
ஆதாரம் ஸர்வ ஜகதாம் ஸ்துத்யம் ஸ்தோத்ரு
ஸ்வரூபிணம் ॥

தமாதௌ ப்ரஹ்மணா லப்தம் இக்ஷ்வாகு ந்ருப பூஜிதம் ।
ஸ்திரீபூதம் ச ரங்கேऽத்ர காவேரீத்வய மத்யமே ॥

சேஷசாயியான பகவானை தர்சித்துக்கொண்டார்கள். அங்குள்ள விமானங்கள், கோபுரங்கள், சந்திரபுஷ்கரிணீ முதலிய எல்லாவற்றையும் பார்த்து ஸந்தோஷித்தார்கள். அங்கு கோவிலிலேயே விநியோகம் செய்யப்படும் தத்யன்ன பிரஸாதத்தை இப்பாலகர் இருவரும் இளைய தாயாரும் புஜித்தார்கள். பிறகு நதியில் இறங்கி சிந்தாமணிப் படித் துறையில் ஏறி அங்கிருக்கும் ஸந்தியாவந்தன மண்டபத் திற்கு ஸமீபத்திலிருந்த மரத்தடியில் தங்கிக்கொண்டும், அப்பாளபட்டர் கோஷ்டியார் கொண்டுவந்திருந்த நான்கு குதிரைகளையும் பக்கத்திலேயே கட்டிவைத்துக்கொண்டும், காவேரீ ஸ்நானம் கிடைப்பதிலுள்ள ஸந்தோஷத்தினால் அங்கேயே இன்னம் இரண்டு மாஸ காலம் தங்கிவிட்டார்கள்.

அப்பாளபட்டருக்கு சீக்கிரம் சிருங்கேரிக்குப் போக வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டது. அப்பொழுதுதான் திருமலைநாயக்கர் அரசனாக ஏற்பட்டு திருச்சிராப்பள்ளியில் தாமஸித்துவருவதால் அவரைக்கண்டு ராஜஸன்மானம் பெறவேண்டுமென்று கொண்டபட்டருக்குத் தோன்றிற்று. அளகாத்ரிபட்டருக்கும் யாத்திரைச் செலவை உத்தேசித்

தாவது அரசனைப் பார்த்துவிட்டுப்போவதே நல்லதென்று தோன்றியிருக்கலாம். அவரும் கொண்டபட்டருடன் திருச்சிராப்பள்ளியில் தாமஸித்துவிடலாமென்று நினைத்தார். அவ்விதஸஹாயம் எதிர்பார்க்கவேண்டிய அவசியம் அப்பாளபட்டருக்கு இல்லை. மூவரும் கருப்பு நிறமாக இருந்தாலும் அப்பாளபட்டரிடம் பணச்செழிப்பு இருந்த படியால் கம்பீரமான தோற்றத்துடன் பிரபுவாக விளங்கினர்.

श्यामलः कोण्डनामाऽस्य भ्राता चाप्पालनामकः ।
अलकाचलभट्टाश्च लसच्छ्यामलवर्चसः ॥

अप्पालः प्रभुरायाति गाम्भीर्येण परेण च ।
स्वामिनां कृपया भुक्त्वा प्रहृष्टः तुन्दिलोदरः ॥

ச்யாமளः கொண்டநாமாऽஸ்ய ப்ராதா சாப்பாள நாமக: ।
அளகாசல பட்டாச்ச லஸச்ச்யாமள வர்ச்சஸ: ॥

அப்பாள: ப்ரபுராயாதி காம்பீர்யேண பரேண ச
ஸ்வாமிநாம் க்ருபயா புக்த்வா ப்ரஹ்ருஷ்டஸ்துந்தி லோதர: ॥

ஆகையால் அவர் தன் பரிவாரங்களுடன் உடனே புறப்படுவதாகத் தீர்மானித்துவிட்டார். விவாஹத்துக்குரிய காலமான வஸந்தருது கடந்துவிடாமலிருக்கவேண்டுமென்று நினைத்து பாலகரும் அப்பாள பட்டருடன் புறப்பட்டுவிடுவதாகத் தீர்மானித்துக்கொண்டார். தகப்பனர் "போக வேண்டுமா?" என்று கேட்டுவிட்டு கொஞ்சதூரம் கூடவே வந்து வழியனுப்பினர். அப்போது 'சிருங்கேரியில் மடத்திற்கு ஸமீபத்தில் நதியில் ஒரு பெரிய மடு இருக்கிறது. அதில் தவறி காலை வைத்துவிடாதே" என்று எச்சரித்துவிட்டுத் திரும்பினர்.

वैवाहिकमुहूर्त्तांश्च श्रुत्वा माधवसंभवान् ।
अनतिक्रमणं तेषां इच्छन् गच्छद्भिरेव तैः ॥

आमन्त्र्य पितरं चापि गन्तुमेव समुद्यतः ॥

गमिष्यसि किमित्येव पित्राऽऽभाष्य प्रियं सुतम् ।
गच्छन्तं नरशार्दूलं अन्वगच्छत् दयान्वितः ॥

गत्वा शतपदं तद्वत् कावेरीतटगे सुते ।
आकार्य नारसिंहेति दयानिधिरभाषत ॥

शृङ्गेर्यां मठपर्यन्ते तुङ्गभद्रान्तरे महान् ।
ह्रदोऽस्ति तत्र मा पादं आवेशय कदाचन ॥

வைவாஹிக முஹூர்த்தாம்ச்ச ச்ருத்வா மாதவ ஸம்பவான் I
அநதிக்ரமணம் தேஷா மிச்சன் கச்சத்பிரேவ தை: II

ஆமந்த்ர்ய பிதரம் சாபி கந்துமேவ ஸமுத்யத: II

கமிஷ்யஸி கிமித்யேவ பிதாSSபாஷ்ய ப்ரியம் ஸுதம் I
கச்சந்தம் நரசார்தூலம் அன்வகச்சத் தயாந்வித: II

கத்வா சதபதம் தத்வத் காவேரீ தடகே ஸுதே I
ஆகார்ய நாரஸிம்ஹேதி தயாநிதிரபாஷத II

ச்ருங்கேர்யாம் மட பர்யந்தே துங்கபத்ராந்தரே மஹான் I
ஹ்ரதோSஸ்தி தத்ர மா பாதம் ஆவேசய கதாசன II

[அந்த மடுவை இப்பொழுதும் சிருங்கேரியில் பார்க்கலாம். சமீபத்தில் 2 வருஷ காலம் மறைந்து இது மறுபடியும் தோன்றிவிட்டது.] பையனை ஜாக்கிரதையாய் அழைத்துச் செல்லும்படி மற்றவர்களையும் வேண்டிக்கொண்டார். இவ்விதமாக அப்பாளபட்டர் இப்பாலகரையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார். ஒரு குதிரையில் அப்பாளபட்டரும் மற்ருென்றில் அவர் பார்யை லக்ஷ்மியும் ஏறிக்கொள்வார்கள். அவர்கள் கோஷ்டியில் வந்த அன்னபூர்ணை யென்பவளும் பாலகரும் நடந்தே செல்வார்கள். அந்த அன்னபூர்ணை பாலகரின் மாதாமஹருடைய ஸஹோதரரின் புத்திரி என்று

தெரிவதால் கொண்ட பட்டரின் பார்யை பானு என்பவளுக்கு தமக்கையென்று தோன்றுகிறது. எப்படியும் பாலகரின் தாயாருக்கு ஸஹோதரி முறையானபடியால் யாத்திரை பூராவிலும் இவரை வெகு அபிமானத்துடன் பாதுகாத்துக் கொண்டு உத்ஸாஹமாகப் பேசிக்கொண்டு அதிக சிரமம் தெரியாமல் செய்து வந்தாள். எல்லோரும் மெதுவாகவே போய்க்கொண்டு அவசியமானபோது மரத்தடிகளில் தங்கி சமயல் செய்து ஆஹாரம் செய்துகொண்டு சென்றார்கள். போகும் வழியில் காவேரிக்கரையிலுள்ள மஹாதானபுரம் என்ற கிராமம் மிகவும் செழிப்பாக இருந்தபடியால் அங்கே மாத்திரம் ஐந்தாறு நாட்கள் தாமஸித்தார்கள்.

महादानपुरं प्राप्य ग्रामं लोकोत्तरोत्तरम् ।
श्रीमद्भिर्गृहिभिर्व्याप्तं श्रीमद्भिर्भवनैरपि ॥

नारिकेलैरसंख्यातैः फलपूर्णैः गृहे गृहे ।
शोभमानं नदीतीरे रामारत्नैरलंकृतम् ॥

पञ्चषान् दिवसान् स्थित्वा ग्रामान्तरमथाव्रजन् ।

மஹாதானபுரம் ப்ராப்ய க்ராமம் லோகோத்தரோத்தரம் ।
ஸ்ரீமத்பிர் க்ருஹிபிர் வ்யாப்தம் ஸ்ரீமத்பிர் பவனைரபி ॥

நாரிகேளை ரஸங்க்யாதை: பலபூர்ணைர் க்ருஹே க்ருஹே ।
ஶோபமாநம் நதீ தீரே ராமா ரத்னைரலங்க்ருதம் ॥

பஞ்சஷான் திவஸான் ஸ்தித்வா க்ராமாந்தரமதாவ்ரஜன் ।

[அப்பொழுதிருந்த செழிப்பும் தென்னந்தோட்டங் களும் இன்றைக்கும் அங்கே இருந்துவருவது குறிப்பிடத் தக்கது.]

அங்கிருந்து புறப்பட்டுப் பல கிராமங்கள் வழியாக "வேங்கம்புரம்" சென்று, ஈரோடு தாண்டி, மரங்களடர்ந்த வழியாகப்போய்க்கொண்டிருக்கையில் ஒரு முயல் குறுக்கே

ஓடிற்று. அந்தக் கோஷ்டியில் வந்த திம்மபட்டர் என்பவர் இதைப் பாலகருக்குச் சுட்டிக்காட்டினுர். இது ஒரு அப சகுனமாகத் தோன்றி அன்னபூர்ணையிடம் கேட்டதில் அவளும் திரும்பிவிடுவதே நல்லதென்று சொன்னுள். அப்பொழுது அப்பாளபட்டர் இது மரணத்தையே குறிக்கும் என்று விளையாட்டாகச் சொன்ன வார்த்தை பாலகருடைய மனதை மிகவும் கலக்கிவிட்டது. ஆனுல் குழந்தைப்பர்வம் முதற்கொண்டு சிருங்கேரிக்குப் போகவேண்டுமென்ற ஆவல் மிகுதியாக இருந்துவந்ததினுலும், அங்குள்ளவர்கள் தன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்களே என்ற எண்ணத்தினுலும், தான் போகாமலிருந்த காரணத்தினுல் மாமன் தன் பெண்ணை வேறு யாருக்காவது கொடுத்து விட்டால் பிற்பாடு போவதில் என்ன பிரயோஜனம் என்ற கவலையினுலும், சிருங்கேரிக்கு அவசியம் போகவேண்டியது தான் என்று தீர்மானித்துக்கொண்டார். மஹாகணபதியின் அநுக்ரஹத்தினுல் எவ்வித இடையூறுகளையும் வென்று விடலாமென்று மனதைத் தைர்யப்படுத்திக்கொண்டார்.

அப்படியே காவேரீ நதியில் பவானி நதி ஸங்கமமாகும் ஸ்தலம் சென்று ஸ்நான போஜனுதிகளைச் செய்துகொண்டு அங்கிருந்து மறுநாள் புறப்பட்டு கிரமமாக ஸத்யமங்கலம் போய்ச்சேர்ந்தார்கள். இனி மலையேறும்படியிருக்குமாதலால் பாலகர் கடையில் கொஞ்சம் வெல்லமும் ஏலமும் வாங்கிக் கொண்டார். வழியில் ஜலம் அகப்படாது. காடுகள் வழியாகப் போகவேண்டும். மலைகளில் ஏறி இறங்கவேண்டும். நாக்கு உலரும்போது ஏலத்தையும் வெல்லத்தையும் வாயில் போட்டுக்கொண்டு, அன்னபூர்ணையுடன் உத்ஸாஹமாகப் பேசிக்கொண்டே வழிநடந்தார். இவ்விதமாகப் பங்குனி மாஸத்திய வெய்யிலைப் பொறுத்துக்கொண்டு இரண்டு யோஜனை தூரம் போய் அங்கு ஜலம் கிடைத்தபடியால் அங்கேயே சமையல் செய்து சாப்பிட்டு ஒரு இரவு தங்கி இளைப்பாறினுர்கள்.

## 6. சிருங்கேரி போய்ச்சேர்தல்

மறுநாள் காலையில் அங்கிருந்து புறப்பட்டு வழியில் தங்கித் தங்கி 'அபிசவாடு' என்ற கிராமத்தை அடைந்தார்கள். அங்கே ஒரு பெரிய குளமும் அதன் ஸமீபத்தில் ஹனுமார் கோவிலும் இருந்தன. ஜனங்களும் ஏராளமாக இருந்தார்கள். ஸௌகர்யமாயிருந்தபடியால் இதுவரை வந்த சிரமம் தீருவதற்காக அங்கேயே ஒரு மாதம்வரை தங்கிவிட்டார்கள். பிறகு கபினீ நதி காவேரியில் ஸங்கமமாகும் திருமுகக்கூடலு நாரஸபுரம் என்ற ஸ்தலத்திற்குச் சென்றார்கள். அங்கு ஆலயத்திலுள்ள லிங்கம் அகஸ்திய முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அந்த கிராமத்திலும் அடுத்த 'முத்தத்தி' என்ற கிராமத்திலும் இவர்களுடைய பந்துக்களேயிருந்துவிட்டபடியால் சமயலுக்கு அவசியமில்லை. அங்கிருந்து புறப்பட்டு 'பன்னூர்' கிராமம் சென்றதிலும் அங்குள்ள பந்துக்களால் மிகவும் ஆதரிக்கப்பட்டு நான்கு நாட்கள் தங்கிவிட்டு 'யடத்தூர்' கிராமம் சென்றார்கள். அங்கே பிரவஹித்த காவேரியின் மத்தியில் 'ஸூர்ய புஷ்கரிணீ' என்ற தீர்த்தமுண்டு. அதில் ஸ்நானம் செய்துகொண்டு ஐந்து நாட்கள் அங்கே தங்கினார்கள். பிறகு ஸ்ரீரங்கபட்டணம் போய் ஸ்ரீரங்கநாதரை தர்சித்துவிட்டு 'ராமநாதபுரம்' போய்ச்சேர்ந்தார்கள். அங்கேயும் காவேரியின் நடுவிலுள்ள 'அக்னி புஷ்கரிணி' யில் ஸ்நானம் செய்து 'காயத்ரீசிலை' என்ற க்ஷேத்திரத்தில் 'கோகர்ப்பம்' என்கிற பிரதேசத்தில் நுழைந்து வெளி வந்து அவ்வூரில் ஐந்தாறு நாட்கள் இருந்தார்கள். அந்த க்ஷேத்திரத்தில் விசேஷமாக அக்ஷய திருதீயை தினம் நானா திக்குகளிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வந்து ஸ்நானம் செய்து தானாதி தர்மங்களைச் செய்வார்கள்.

அங்கிருந்து இரண்டு யோஜனை தூரம் சென்று "வேலாபுர"த்திலுள்ள அழகான கோவிலில் ஸாந்நித்யமடைந்திருக்கும் கேசவப் பெருமாளைத் தர்சித்தார்கள்.

सरसः सरसं देवं तत्र पश्यति केशवम् ॥

नारायणमनाद्यन्तं शिलासुकृतविग्रहम् ।
महामूर्तिं महाबाहुं महात्मानं सुपूजितम् ॥

काञ्चनाभरणैर्युक्तं दीपावलिविराजितम् ।

ஸரஸ: ஸரஸம் தேவம் தத்ர பச்யதி கேஶவம் ॥

நாராயணமநாத்யந்தம் ஶிலாஸுக்ருத விக்ரஹம் ।
மஹாமூர்த்திம் மஹாபாஹும் மஹாத்மாநம் ஸுபூஜிதம் ॥

காஞ்சநாபரணைர் யுக்தம் தீபாவளிவிராஜிதம் ।

அங்கு பத்து நாட்கள் தங்கினார்கள். பிறகு அநேக குன்றுகள் ஏறி இறங்கி பலாச மரங்கள் அடர்ந்த காடு வழியாகப் போய்க்கொண்டிருந்தார்கள். அப்பொழுது சிலர் எதிர்ப்புறத்திலிருந்து வந்தார்கள். அவர்கள் மூலமாக, சிருங்கேரியில் பாலகருடைய பெரிய மாமன் வேங்கடாசல தீக்ஷிதர் வெகு விமர்சையாக ஒரு யாகம் செய்தார் என்றும், பிராஹ்மணர்களுக்கு ஏராளமாய் ஸம்பாவனை செய்யப்பட்டதென்றும், நூற்றுக்கணக்கான பந்துக்களும் மற்றவர்களும் தர்சனம் செய்துகொண்டு போய்க்கொண்டிருந்தார்கள் என்றும், கேள்விப்பட்டார்கள். பாலகரும் மிகவும் ஸந்தோஷத்தையடைந்தார். அப்படியே கொஞ்ச தூரம் சென்று பத்ராவதீ நதியின் ஸமீபம் வந்துசேர்ந்தார்கள்.

दर्शनादेव पापघ्नीं प्राणिनां सुकृतप्रदाम् ।
तटच्छायासुसंछन्नां प्रवहन्तीं जवेन च ॥

वराहदंष्ट्राप्रभवां सेवितां दैवतैरपि ।
वेगविध्वस्तकूलां च वेणुकक्षोपशोभिताम् ॥

साक्षाद्रुद्रस्वरूपां च प्रस्तुतामच्युतेन च ।
यत्र तीरे महापुण्ये मृकण्डुतनयो महान् ॥

महादेवं समासाद्य मृत्युं विजितवान् किल ।

தர்ஶநாதேவ பாபக்னீம் ப்ராணினும் ஸுக்ருதப்ரதாம் ।
தடச்சாயா ஸுஶஞ்ச்சந்நாம் ப்ரவஹந்தீம் ஜவேன ச ॥

வராஹ தம்ஷ்ட்ரா ப்ரபவாம் ஸேவிதாம் தைவதைரபி ।
வேக வித்வஸ்த கூலாம் ச வேணு கக்ஷோப ஶோபிதாம் ॥

ஸாக்ஷாத் ருத்ர ஸ்வரூபாம் ச ப்ரஸ்துதாமச்யுதேந ச ।
யத்ர தீரே மஹாபுண்யே ம்ருகண்டு தநயோ மஹான் ॥

மஹா தேவம் ஸமாஸாத்ய ம்ருத்யும் விஜிதவான் கில ।

இப்புண்ணிய நதியைத் தாண்டி "பொக்குஞ்ஜீ" என்ற ஊருக்குச் சென்றார்கள். அங்கே ஒரு ஸாத்வியின் ஆதித்யத்தில் ஒருநாள் தங்கிவிட்டு அநேக காடுகள் வயல்கள் மலைகள் எல்லாவற்றையும் கடந்து சிருங்கேரி ஸம்ஸ்தான எல்லைக்கு வந்து சேர்ந்தார்கள். பாக்குமரங்கள் அடர்ந்த வழியாகப்போய் 'வைகுண்டபுரம்' அடைந்தார்கள். அவ்வூரில் விட்டலர் என்ற பெயரில் மஹாவிஷ்ணுவும் விரூபாக்ஷர் என்கிற பெயரில் பரமேசுவரரும் கோவில் கொண்டிருக்கிறார்கள். அவ்வூரில் யாசகம் செய்ய அவசியமில்லாதவராக 'அயாசிதர்' என்றே பிரஸித்தரான ஒரு பந்து விளங்கி வந்தார். அவருக்கு இசைந்த பதிவிரதையாக ராமா என்ற பத்னியும் இருந்தாள். அவள் இவர்களைப் பார்த்தவுடன் வெகு மரியாதையாகத் தன் கிருஹத்திற்கு அழைத்து விருந்து செய்துவைத்தாள். பின்னர் ஒரு சிறு மலையிலேறி இறங்கிப்பார்க்கையில் வெகு பள்ளத்தில் துங்கா நதி தென்பட்டது.

महारण्यैः परिवृतां विद्यारण्यनिषेविताम् ।
विश्वामित्रवसिष्ठाभ्यां सेवितां शुभदर्शनाम् ॥

वराहदंष्ट्राप्रभवां देवमानुषदीर्घिकाम् ।
प्रस्तुतां कृष्णदेवेन रामदेवेन सेविताम् ॥

ऋश्यशृङ्गेण मुनिना सेवितां परमौजसा ।
साक्षान्नारायणाकारां नारायणनिषेविताम् ॥

नारदादिमुनीन्द्रैश्च सेव्यमानां महोज्ज्वलाम् ॥

மஹாரண்யை: பரிவ்ருதாம் வித்யாரண்ய நிஷேவிதாம் ।
விச்வாமித்ர வஸிஷ்டாப்யாம் ஸேவிதாம் ஸுப தர்ஸநாம் ॥

வராஹ தம்ஷ்ட்ரா ப்ரபவாம் தேவ மானுஷ தீர்கிகாம் ।
ப்ரஸ்துதாம் க்ருஷ்ணதேவேன ராமதேவேன ஸேவிதாம் ॥

ருச்யச்ருங்கேண முநிநா ஸேவிதாம் பரமௌஜஸா ।
ஸாக்ஷாத் நாராயணாகாராம் நாராயண நிஷேவிதாம் ॥

நாரதாதி முநீந்த்ரைச்ச ஸேவ்யமாநாம் மஹோஜ்வலாம் ।

இந்தத் திவ்ய நதியில் ஸ்நானம் செய்து ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு அந்த பந்துவின் கிருஹத்திலேயே தங்கினார்கள்.

சிருங்கேரி ஸமீபித்துவிட்டபடியால், அங்கிருந்து புறப்பட்டுப்போகையில் இப்பாலகருக்கு "முன்னால் வீர பூபாலஸாகரத்தில் இருக்கும்போது சிருங்கேரியைப்பற்றிக் கேட்டிருப்பதுண்டு. தகப்பனாரும் சொல்வதுண்டு. அன்ன பூர்ணையும் மாதாமஹியும் விசேஷமாக அடிக்கடி சொல்லி வந்திருக்கிறார்கள். காதால் மாத்திரம் கேட்டிருந்த ஊரை இப்பொழுது நேரில் பார்க்கும்படி கிடைத்திருக்கிறது. ஊர் எப்படியிருக்குமோ? நதிக்கரையிலேயே அக்கிரஹாரமாம். மடம் எப்படியிருக்குமோ? மடத்திற்கும் தெருவிற்கும் எவ்வளவு தூரமோ? அம்மான்கள் என்ன ஸௌகர்யத்தில் இருந்துவருகிறார்களோ? ஸ்ரீ ஸ்வாமிகள் நல்ல ஸுந்தர மான புருஷர் " என்று கேள்வி. மற்ற விஷயங்கள் எப்படியோ? மாமாவின் கிருஹம் எப்படியிருக்கும்? அம்மாமி எப்படியிருப்பாள்? அவள் பெண் எப்படியோ?" என்றெல்லாம் யோஜனைசெய்துகொண்டே வெகு உத்ஸா

ஹத்துடன் வந்தார். ஒரு பெரிய மேடு ஏறி அங்குள்ள துங்காநதியின் தீர்த்தத்தைத் தொட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டு, இதுவரை நடந்துவந்த சிரமத்தை மறந்து, நதியைத் தாண்டிக் கொஞ்சதூரம் மணலில் நடந்துவந்தார். அங்கேயே அநேக ஸ்திரீகளுடன் வந்திருந்த மாமியைக் கண்டு பாலகர் நமஸ்கரித்தார். அவளும் தன் ஸந்தோஷத்தைக் காட்டிவிட்டு அப்பாளபட்டரிடம் யோகக்ஷேமம் விசாரித்துவிட்டு தன் கிருஹம் சென்றாள். அப்பாள பட்டருடனேயே பாலகர் வந்திருப்பதால் இவரும் அவருடன் அவர் வீட்டிற்கே போகவேண்டியிருந்தது. அவருடைய விசாலமான கிருஹத்தையும் ஏராளமான பாக்குத் தோட்டங்களையும் ஸந்தோஷமாய்ப் பார்த்துக் கொண்டு இரண்டு நாட்கள் அவருடனேயே தங்கிவிட்டுப் பிறகு மாமன் கிருஹத்திற்கு வந்துசேர்ந்தார்.

## 7. மாமனுடன் வாஸம்.

வெங்கடாசல யஜ்வாவின் கிருஹத்தில் அக்னிஹோத்ர சாலை விளங்கிவந்தது. அவர் லௌகிக வைதிக ஸம்பத்துக்கள் இரண்டையும் பெற்றிருந்தார். பாலகர் அங்கே இருக்கும்போது அக்னி ஹோத்ர மந்திரங்களையெல்லாம் இவருக்கு நரஸிம்ஹ தீக்ஷிதர் என்ற விருத்தர் ஒருவர் அத்யயனம் செய்து வைத்தார். கிழவியான மாதாமஹியும் சிறிய மாமனையல்லாவதானியும் மிகவும் ஆதரவுடன் அபிமானித்து வந்தார்கள். பெரியவரிடத்தில் கொஞ்சம் ஸங்கோசமிருந்தபடியால் சின்ன மாமாவின் வீட்டில்தான் அதிக ஸ்வாதீனமாய் பழகிவந்தார். அவரும் இப்பாலகருக்கு விசேஷமாக வேதாத்யயனம் செய்துவைத்தார். வெகு சீக்கிரத்தில் அக்னி ஹோத்திர மந்திரங்களைக் கற்றுக் கொண்டுவிட்டபடியால், தீக்ஷிதர் கிருஹத்தில் ஒவ்வொரு பர்வாவிலும் மற்றும் ஸமயங்களிலும் அநேக இஷ்டிகள் நடக்கும்போது இப்பாலகரும்

ஹோதாஸ்தானமோ வஹித்து தானும் ஒரு ரித்விக்காகவிருந்து நடத்திவைப்பார். காலையும் மாலையும் மாமாவிற்கு அக்னிஹோத்ரம் செய்யவேண்டியதற்குள்ள உதவிகளையும் செய்துவந்தார் சிலசமயம் அவருடைய சிஷ்யன் என்கிற முறையில் இவரே ஆஹுதிகளையும் செய்வதுண்டு. இவருக்கு ஸ்ரீதர கிருஷ்ணபட்டர் என்பவர் ரகுவம்ச காவிய பாடம் சொல்லிவந்தார்.

மாமாவுடன் அடிக்கடி ஸ்ரீமடத்திற்குப்போய் ஸ்ரீ சாரதாம்பாளை தர்சித்து வருவார்.

चाटुः श्रीमठमेत्य तं पुनरसौ दीपावलीराजितां
देवीमैक्षत शारदेन्दुसमसद्भद्राननां शारदाम् ।
कल्याणीं कनकोज्ज्वलाभरणसत्सर्वाङ्गसंशोभितां
काञ्चीमत्तनुमध्यमां गिरिलसत्तुङ्गस्तनीमम्बिकाम् ॥

सौन्दर्यं चतुराननेन गदितुं किं शक्यमस्या भवेत्
किं वा पञ्चमुखेन षड्वदनतः किं वा दशास्येन च ।
किं वा वक्त्रसहस्रसंयुतमहाशेषेण साक्षात् तथा
किं वल्मीकभवेन सुष्टु कविना द्वैपायनेनापि वा ॥

சாடு: ஸ்ரீ மடமேத்ய தம் புனரஸௌ தீபாவளீ ராஜிதாம்
தேவீமைக்ஷத ஶாரதேந்து ஸம ஸத்பத்ராநநாம் ஶாரதாம் ।
கல்யாணீம் கநகோஜ்ஜ்வலாபரண ஸத் ஸர்வாங்க ஸம்ஶோபிதாம்
காஞ்சீமத் தனுமத்யமாம் கிரிலஸத் துங்கஸ்தனீமம்பிகாம் ॥

ஸௌந்தர்யம் சதுராநநேந கதிதும் கிம் ஶக்யமஸ்யா பவேத்
கிம் வா பஞ்சமுகேன ஷட்வதநத: கிம் வா தஶாஸ்யேன ச ।
கிம் வா வக்த்ர ஸஹஸ்ர ஸம்யுத மஹாஶேஷேண ஸாக்ஷாத் ததா
கிம் வல்மீகபவேன ஸுஷ்டு கவிநா த்வைபாயனேனாபி வா ॥

அப்படியே ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயத்தில் தர்சனம் செய்து அந்த அத்புதமான ஆலயத்தில் உள்புரமும், வெளிப்புரமும் உள்ள விசேஷ வைபவங்களைக்கண்டு ஸந்தோஷிப்பார். வெளிச்சுவரிலுள்ள ஒவ்வொரு மூர்த்தியுமே தனித்தனியாக கோவில் கட்டி ஆராதிக்க வேண்டியதாகவே இருந்தது.

बहिरेव शिलाभित्तौ एकैका मूर्त्तिरुत्तमा ।
एकैकदेवसदने युक्ता स्थापयितुं द्विजैः ॥

பஹிரேவ ஶிலா பித்தெள ஏகைகா மூர்த்திருத்தமா ।
ஏகைக தேவஸதநே யுக்தா ஸ்தாபயிதும் த்விஜை: ॥

மலஹானிகரேசுவரர் தேவஸ்தானத்திற்கும் சென்று பகவானையும், தூணில் ஆவிர்பாவமடைந்திருந்த மஹாகணபதியையும் அடிக்கடி தர்சனம் செய்து வருவார்.

மடத்திற்கு மாமாவுடன் போகும்போதெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிகளவர்களையும் தர்சனம் செய்துவருவார். அவ்வாசார்யருடைய சரீரம் ஸ்வர்ணம் போலும் பழுத்த எலுமிச்சம்பழம் போலும் பிரகாசித்தது.

तेषां तु यतिराजानां जाम्बूनदसमं वपुः ।
परिपक्वं सुजम्बीरफलं चेद्यादृशं भवेत् ॥

தேஷாம் து யதிராஜாநாம் ஜாம்பூநத ஸமம் வபு: ।
பரிபக்வம் ஸுஜம்பீர பலம் சேத் யாத்ருஶம் பவேத் ॥

அத்துடன் ஸகல கல்யாண குணங்களும் அமைந்து ஸகல சாஸ்திர பாரங்கதராயிருந்து சிருங்கேரி தர்ம ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து ஆளுகை செலுத்திவந்தார்.

कारुण्यरससंपन्नान् शमादिभिरलंकृतान् ।
हेमद्युतिद्योतमानान् हेमराशिमिव स्थितान् ॥

मनोज्ञरूपान् वाचश्च मनोज्ञा वदतः स्वनैः ।
सर्वशास्त्रेषु निष्णातान् राजराजप्रपूजितान् ॥

शंकरान् शंकराकारान् शंकराचार्यसत्कुले ।
उदितान् मुदितान् नित्यं अर्थिकल्पद्रुमानपि ॥

दुर्वादिगर्वसर्वस्वहारिणो हारिणस्तथा ।
चारिणो धर्मचक्रे च धर्मचक्रप्रचारिणः ॥

शास्त्रिभिः संवृतान् नित्यं शास्त्रवादपरानपि ।
सर्वशास्त्रेश्वरांश्चापि महाराजान् भुवः पतीन् ॥

योगिभिर्वन्द्यचरणान् मन्त्रशास्त्रविदस्तथा ।
योगशास्त्ररहस्यज्ञान् शब्दशास्त्रविशारदान् ॥

वैदिकाचारनिरतान् वेदमार्गप्रवर्तकान् ॥

காருண்ய ரஸ ஸம்பந்நான் ஶமாதிபிரலங்க்ருதான் ।
ஹேமத்யுதி த்யோதமாநான் ஹேமராஶிமிவ ஸ்திதான் ॥

மநோக்ஞரூபான் வாசச்ச மநோக்ஞா வதத: ஸ்வநை: ।
ஸர்வ ஶாஸ்த்ரேஷு நிஷ்ணாதான் ராஜராஜ ப்ரபூஜிதான் ॥

ஶங்கரான் ஶங்கராகாரான் ஶங்கராசார்ய ஸத்குலே ।
உதிதான் முதிதான் நித்யம் அர்த்திகல்பத்ருமானபி ॥

துர்வாதி கர்வ ஸர்வஸ்வ ஹாரிணோ ஹாரிணஸ்ததா ।
சாரிணோ தர்மசக்ரே ச தர்மசக்ர ப்ரசாரிண: ॥

ஶாஸ்த்ரிபி: ஸம்வ்ருதான் நித்யம் ஶாஸ்த்ரவாதபரானபி ।
ஸர்வ ஶாஸ்த்ரேச்வராம்ச்சாபி மஹாராஜான் புவ: பதீன் ॥
யோகிபிர் வந்த்யசரணான் மந்த்ர ஶாஸ்த்ரவித ஸ்ததா ।
யோக ஶாஸ்த்ர ரஹஸ்யக்ஞான் ஶப்த ஶாஸ்த்ர
விஶாரதான் ॥

வைதிகாசார நிரதான் வேதமார்க ப்ரவர்தகான் ।

அவ்வாசார்யாரை தர்சனம் செய்யச் செய்ய இன்னமும் தர்சனம் செய்யவேண்டுமென்றே பாலகருக்குத் தோன்றிற்றே தவிர போதுமென்ற திருப்தி ஏற்படவில்லை. அப்படியே ஆசார்யாரும் இவரைப்பார்த்து வெகு ஸந்தோஷப்பட்டார்.

अवलोक्य महाबुद्धिः आलोकनपरोऽभवत् ।
आलोकनेऽतिसक्तश्च नातृप्यदवलोक्य च ॥

अवलोक्य च तं तेऽपि मुदमायान्ति केवलाम् ॥

அவலோக்ய மஹாபுத்தி: ஆலோகநபரோऽபவத் ।
ஆலோகநேऽதிஸக்தச்ச நாத்ருப்யதவலோக்ய ச ॥

அவலோக்ய ச தம் தேऽபி முதமாயாந்தி கேவலாம் ॥

பாலகர் சிருங்கேரியில் அம்மான் கிருஹத்தில் இருந்து வருகையில் நவராத்ரி மஹோத்ஸவம் நடைபெற்றது. அப்பொழுது ஸர்வாலங்கார பூஷிதராக ஸகல ராஜசின்னங்களுடனும் ஸ்ரீசாரதாம்பாள் ஸன்னிதியில் ஸ்ரீ ஸ்வாமிகள் ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து ஸபை நடத்தும் ஸம்பிரதாயத்தை அனுஸரித்து அவ்வருஷமும் நடந்தது. அதில் வீணை முதலிய வாத்தியங்களை வாசிப்பவர்கள், வாய்ப்பாட்டு பாடுகிறவர்கள் எல்லாரும் வந்திருந்தார்கள். அப்படியே அவ்வருஷம் திக்கஜங்கள் போலுள்ள மஹா வித்வான்களும் வந்திருந்தார்கள். ருக், யஜுஸ், ஸாமம், சாஸ்திரங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள் முதலானவைகளில் மிகவும் பிரஸித்தர்களாயிருந்த பண்டிதர்கள் வந்திருந்தார்கள்.

शारदासंनिधाने च मङ्गले सुमहोन्नते ।
उपविष्टा महात्मानो मुक्तामयमहासने ॥

तानावृत्य व्यराजन्त तथा दिग्गजसंनिभाः ।
महामेरुमुपाश्रित्य समस्ता विबुधा यथा ॥

ऋक्पारगैः यजुर्विद्भिः सामविद्भिश्च शास्त्रिभिः ।
पौराणिकैः स्मृतिज्ञैश्च साऽशोभत सभा शुभा ॥

वैणिका यत्र राजन्ते शतशोऽथ सहस्रशः ।
पाठका बहुरूपाश्च पटवः पद्यभाषणे ॥

ஶாரதா ஸந்நிதானே ச மங்களே ஸுமஹோந்நதே ।
உபவிஷ்டா மஹாத்மானோ முக்தாமய மஹாஸநே ॥

தாநாவ்ருத்ய வ்யராஜந்த ததா திக்கஜ ஸந்நிபா: ।
மஹாமேருமுபாச்ரித்ய ஸமஸ்தா விபுதா யதா ॥

ருக்பாரகைர் யஜுர்வித்பி: ஸாமவித்பிச்ச ஶாஸ்த்ரிபி: ।
பௌராணிகை: ஸ்ம்ருதிக்ஞைச்ச ஸாऽஶோபத ஸபா ஶுபா ॥

வைணிகா யத்ர ராஜந்தே ஶதஶோऽத ஸஹஸ்ரஶ: ।
பாடகா பஹுரூபாச்ச படவ: பத்யபாஷணே ॥

அந்த ஸபையில், கௌடதேசத்திலிருந்து, சிரோமணி என்ற மேலான நியாய கிரந்தத்தில் மிகவும் பாரங்கதரான பட்டாசார்யார், ஸோமநாதர் என்பவரும் வந்திருந்தார். எல்லா சாஸ்திரங்களிலும் பாரங்கதரான பாலகரின் மாமனுன வெங்கடாசல தீக்ஷிதரும் இருந்தார். மற்றும் வியாகரணம், தர்க்கம், வேதாந்தம் முதலான சாஸ்திரங்களில் கியாதி பெற்றிருந்தவர்களும் வந்திருந்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகளோ மஹாவித்வான். இவ்விதம் கூடியிருந்த மஹாஸபையில் இப்பாலகரை யஜுர்வேதம் சொல்லச் சொன்னுர்கள். அப்படியே இவர் சொல்லும்போது ஸ்ரீ ஸ்வாமிகள் மிகவும் ஸந்தோஷத்துடன் இவரையே பார்த்துக்கொண்டிருந்தார்.

नारसिंहो महाबाहुः अभाषत वचःपटुः ।
तत्र विद्वत्सभामध्ये यतीन्द्राग्रे यजुस्ततिम् ॥

तमेव समवैक्षन्त यतीन्द्रास्ते मुदाऽन्विताः ॥

நாரஸிம்ஹோ மஹாபாஹு: அபாஷத வச: படு: ।
தத்ர வித்வத் ஸபாமத்யே யதீந்த்ராக்ரே யஜுஸ்ததிம் ॥

தமேவ ஸமவைக்ஷந்த யதீந்த்ராஸ்தே முதான்விதா: ॥

ஸ்ரீமத் ஆசார்யருக்கு இவரிடம் விசேஷப் பிரீதி ஏற்பட்டது. அக்காலத்தில் மடத்தில் மந்திரி பதவி வகித்துவந்த வெங்கடபட்டர் என்பவரும் இப்பாலகர் அளகாத்ரிபட்டரின் குமாரர் என்று தெரிந்து விசேஷ அபிமானம் செலுத்திவந்தார்.

இப்பாலகருடைய அத்யயன ஸாமர்த்தியத்தையும் உத்தமமான ஸ்வபாவத்தையும் தேஜஸ்ஸையும் கண்டு அவ்வூரில் சிலர் தங்கள் தங்கள் பெண்ணை இவருக்கு விவாஹம் செய்துகொடுக்க நினைத்தார்கள். அவர்களில் முக்யமாக நாகபட்டர் என்பவரின் பார்யை நாகம்மாள் இவரைப் பார்த்துத் தன் ஸஹோதரனுடைய பெண்ணைக் கொடுக்கலாமென்று நினைத்தாள். ஆனால் மாமாவின் பெண் இருக்கையில் இது ஸாத்தியமாகாது என்று உணர்ந்து அந்தப் பெண்ணுக்கு வேறு கல்யாணம் செய்து விட்டாள். அதே காரணத்தினால் மற்றவர்களும் தங்கள் ஆசையை விட்டுவிடும்படி ஏற்பட்டது. ஸ்ரீ ஸ்வாமிகளின் குரு அவருடைய குருவின் ஞாபகார்த்தமாக வஸிஷ்டாசிரமம் என்கிற பிரதேசத்தில் நரஸிம்ஹபுரம் என்ற ஒரு கிராமத்தை ஸ்தாபித்திருந்தார். அங்கே நடக்கும் உத்ஸவத்தை தர்சனம் செய்வதற்காக இப்பாலகர் போயிருந்த ஸமயம் வெங்கடாசல தீக்ஷிதரின் மாப்பிள்ளை என்றே மதித்து அவ்வூர்க்காரர்கள் விசேஷமாக இவருக்கு மரியாதை செய்தார்கள்.

வெங்கடாசல தீக்ஷிதர் போஜனம் செய்யும்போது இப் பாலகரைத் தன்னுடன் உட்காரவைத்துக்கொள்வார். அவர் பார்யை வெகு பிரீதியுடன் இவருக்குப் பரிமாறுவாள். ஒரே கிருஹத்தில் இருந்தபடியால் அவர்கள் பெண்ணையும் இவர் அடிக்கடி பார்ப்பார். ஆனால் ஸாதாரணமாக அத்தானும் அம்மங்காரும் எவ்வளவு ஸ்வாதீனமாய் உத்ஸாகமாய் பேசிக்கொண்டும் விளையாடிக்கொண்டும் இருப்பார்களோ, அப்படியிருப்பதற்கில்லாமல் கல்யாண உத்தேசத்தினால் ஏற்பட்ட ஸங்கோசம் காரணமாக இருவரும் ஒதுங்கியே இருந்து வந்தார்கள். கல்யாணம் அவசியம் நடக்குமென்பதில் இப்பாலகருக்கு ஸந்தேஹத்திற்கு இடமேயில்லை. அம்மானும் பெண்ணைக் கொடுக்க உத்தேசிக்கிறார், பெண்ணும் பிரீதியாய் இருக்கிறாள், ஏற்கனவே நெருங்கிய உறவு, என்று நிச்சயமாகவே இருந்தார். பார்க்கிறவர்களும், ஏதோ இன்னும் கன்யாதானம் ஆகவில்லையே தவிர இவர்கள் மாப்பிள்ளையும் பெண்ணும்தான் என்றே நிச்சயித்தார்கள்.

मातुलत्वात्तु कार्यस्य भावाभावविनिर्णयम् ।
कर्तुं नेच्छति योऽयं च भविष्यत्वविनिश्चयात् ॥

दित्सया च महत्याऽस्य कन्यायाश्चानुरागतः ।
अत्यन्तश्लिष्टसंबन्धात् कार्यं सिद्धं हि मन्यते ॥

उभौ वधूवरौ सिद्धौ विना दानक्रियामपि ।
जातमित्येव तत्कार्यं अमन्यन्त परीक्षकाः ॥

மாதுலத்வாத்து கார்யஸ்ய பாவாபாவ விநிர்ணயம் ।
கர்த்தும் நேச்சதி யோऽயம் ச பவிஷ்யத்வவிநிச்சயாத் ॥

தித்ஸயா ச மஹத்யாऽஸ்ய கன்யாயாச்சானுராகத: ।
அத்யந்த ச்லிஷ்ட ஸம்பந்தாத் கார்யம் ஸித்தம் ஹி
மன்யதே ॥

உபௌ வதூவரௌ ஸித்தௌ விநா தானக்ரியாமபி ।
ஜாதமித்யேவ தத் கார்யம் அமந்யந்த பரீக்ஷகா: ॥

இவ்விதமாக கொஞ்சம் கொஞ்சமாக ஒருவருஷத்திற்கு மேல் ஆகிவிட்டது.

## 8. ஸந்யாஸம்.

இவ்விதம் இருந்துவருகையில் ஸ்ரீமத் ஆசார்யார் சிஷ்யபரிக்ரஹம் செய்துகொள்ளவேண்டுமென்று எண்ணம் கொண்டார். வெங்கடாசல தீக்ஷிதரைத் தருவித்து இப் பாலகரைத் தனக்கு சிஷ்யராகக் கொடுக்கவேண்டுமென்று கேட்டார். அவரும் அவர் தம்பி யல்லாவதானியும் எவ்வளவோ சொல்லியும் பிரயோஜனப்படவில்லை. பால கரையே வரவழைத்து நேரில் கேட்டபோது அவரும் ஸம்மதிக்கவில்லை. ஆனாலும் இவருடைய ரூபம், தேஜஸ், புத்தி, தைர்யம் முதலான குணங்களைப் பார்த்துவந்த ஸ்ரீ ஸ்வாமிகளுக்குத் தன் அபிப்பிராயத்தை விட்டுவிட இஷ்டமில்லை.

रूपं तेजो मतिं दाक्ष्यं शौर्यधैर्यादिकान् गुणान् ।
ते तस्य वीक्ष्य संहृष्टाः तत्यजुर्नैव तां मतिम् ॥

ரூபம் தேஜோ மதிம் தாக்ஷ்யம் ஸௌர்ய தைர்யாதிகான் குணான் ।
தே தஸ்ய வீக்ஷ்ய ஸம்ஹ்ருஷ்டா: தத்யஜுர் நைவ தாம் மதிம் ॥

மேலும் மேலும் ஸ்ரீமத் ஆசார்யார் வற்புறுத்தினபோது இனி ஆக்ஷேபிப்பது நியாயமில்லை என்ற எண்ணத்தினாலும், அவர்களுடைய அதிருப்தியை ஸம்பாதித்துக்கொள்ள இஷ்டப்படாததினாலும், தைவகதியை யாராலும் மீறமுடியா தென்ற உறுதியினாலும், பாலகர் கடைசியில் ஸம்மதித்து விட்டார். அவர்களுக்கு வாக்குக் கொடுத்தபிறகு ஸ்திரமாக வும் தைர்யமாகவும் இருந்துவந்தார். சூரனுயுள்ள ஒரு

பாலகன் அஸ்திரப் பயிற்சி இல்லாமல்போனாலும் அவசியம் வந்தபோது எப்படி தைர்யமாக யுத்தத்தில் இறங்குவானோ அப்படியே இவரும் நடந்துகொண்டார்.

महद्भ्यो दत्तवाक्यस्तु स नो चलति सत्यतः ।
महामेरुरिव स्थानात् हिमवान् मन्दरोऽपि वा ॥

विक्रान्तः सोऽभवत् तत्र धीरः कर्मणि दुष्करे ।
अकृतास्त्रश्च बालश्च शूरः प्राप्त इवाहवे ॥

மஹத்ப்யோ தத்தவாக்யஸ்து ஸ நோ சலதி ஸத்யத: ।
மஹாமேருரிவ ஸ்தானாத் ஹிமவான் மந்தரோऽபி வா ॥

விக்ராந்த: ஸோऽபவத் தத்ர தீர: கர்மணி துஷ்கரே ।
அக்ருதாஸ்த்ரச்ச பாலச்ச ஶூர: ப்ராப்த இவாஹவே ॥

விவாஹம் செய்துகொள்ளும் உத்தேசத்துடன் வந்த இடத்தில் ஸன்யாஸத்திற்கு ஸம்மதிக்கவேண்டுமானால் மனோதைர்யம் மிகவும் திடமாக இருக்கவேண்டுமென்பதில் என்ன ஸந்தேஹம்? ஸ்ரீமத் ஆசார்யார் பொது ஜனங்களுடைய ஸம்மதத்தையும் தெரிந்துகொண்டார். பிறகு ஒரு சுபதினத்தில் இப்பாலகருக்கு ஸன்யாஸம் கொடுத்து கிரமப்படி உபதேசம் செய்தார். [அந்த தினம் சாலி 1544 துந்துபி பாத்திரபத கிருஷ்ண திருதீயை என்று ஸ்ரீ சிருங்கேரி குருபரம்பரை விவரத்திலிருந்து தெரிகிறது. அதாவது கி. பி. 1622 செப்டம்பர் 12, வியாழக்கிழமை]

மஹாவாக்யம் உபதேசமானவுடன் விசேஷமான தேஜஸ் ஏற்பட்டது. சரத்காலத்தில் காலையில் உதயமான ஸூர்யன்போல் பிரகாசித்தார்.

उपदिष्टमहामन्त्रो महसा समशोभत ।
उदयाचलमारूढः शरदीव दिवाकरः ॥

உபதிஷ்ட மஹாமந்த்ரோ மஹஸா ஸமஶோபத ।
உதயாசலமாரூட: ஶரதீவ திவாகர: ॥

இவருக்கு ஸ்ரீ ஸச்சிதாநந்த பாரதீ என்ற யோக பட்டமும் அளிக்கப்பட்டது. பிரஜைகள் யாவரும் வெகு ஸந்தோஷப்பட்டார்கள். ஸகல வாத்தியங்களும் முழங்க பெரிய உத்ஸவமாகவே எல்லோரும் பாவித்தார்கள்.

नेदुर्दुन्दुभयस्तत्र जहृषुः सकलाः प्रजाः ।
जातं शृङ्गपुरस्थानां सर्वं तत् खलु मङ्गलम् ॥

நேதுர் துந்துபயஸ்தத்ர ஜஹ்ருஷு: ஸகலா: ப்ரஜா: ।
ஜாதம் ச்ருங்கபுரஸ்த்தாநும் ஸர்வம் தத் கலு மங்களம் ॥

ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் ப்ரஹ்மநிஷ்டர்களாக இருந்த போதிலும் இந்த உத்தம சிஷ்யர் கிடைத்ததால் அவருக்கு ஏற்பட்ட ஆனந்தம் அளவிட முடியாததாகவே இருந்தது. இதன்மூலம் ப்ரஹ்மாநந்தத்தையே அவர் அடைந்து விட்டார். இந்த ஸம்பவம் தன் பிரயத்னத்தால் ஏற்பட்ட தாக அவர் கருதவில்லை. பகவானுடைய கருணையினால் ஏற்பட்டதாகவே எண்ணினர்.

यतीन्द्रा ब्रह्मनिष्ठास्ते ब्रह्मानन्दं प्रपेदिरे ।
तादृशं शिष्यमासाद्य साक्षात् कृष्णमिवापरम् ॥

नात्मानं मेनिरे तत्र कर्तारं शिष्यसंभवे ।

யதீந்த்ரா ப்ரஹ்மநிஷ்டாஸ்தே ப்ரஹ்மாநந்தம் ப்ரபேதிரே ।
தாத்ருஶம் ஶிஷ்யமாஸாத்ய ஸாக்ஷாத் க்ருஷ்ண மிவாபரம் ॥

நாத்மாநம் மேநிரே தத்ர கர்தாரம் ஶிஷ்ய ஸம்பவே ।

பிறகு குருநாதரின் ஆக்ஞையின் பேரில் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்த தங்கப்பல்லக்கில் ஏறிக்கொண்டு

ஸகல உத்யோகஸ்தர்களும் சத்திரம், சாமரம் முதலிய எல்லா பிருதுகளும், ஏராளமான ஜனங்களும் கூடவர, வீதிவழியாய்ச் சென்று மலஹானிகரேசுவரரை தர்சனம் செய்துகொண்டு அவ்விதமாகவே திரும்பி வந்து மடத்தில் இறங்கி ஸ்ரீ சாரதாம்பாளை தர்சித்துக்கொண்டு பிறகு மடத்திற்குள் சென்றார்.

அங்கே இவருக்காக ஏற்படுத்தியிருந்த இடத்தில் இருந்துகொண்டு பிரதிதினம் குருநாதருடைய பாதார விந்தங்களில் நமஸ்கரித்துக்கொண்டும், வித்வான்களாலும் பாமரர்களாலும் போற்றப்பட்டுக்கொண்டும், குருநாதரால் பரிபாலிக்கப்பட்டு அவருடைய ஸமீபத்திலேயே மிகவும் சோபையுடன் ஸந்தோஷமாக இருந்து வந்தார்.

आवासार्थं विनिर्दिष्टं गुरुभिः शिष्यवत्सलैः ॥

वन्दमानो गुरूणां च चरणौ प्रत्यहं जपन् ।
सायं प्रातश्च मध्यान्हे गुरूणामन्तिकेऽवसत् ॥

नमस्कृतः समस्तैश्च विद्वद्भिः प्राकृतैरपि ।
पाल्यमानश्च गुरुभिः मोदते परमश्रिया ॥

ஆவாஸார்த்தம் விநிர்திஷ்டம் குருபி: ஶிஷ்யவத்ஸலை: ॥

வந்தமானோ குரூணாம் ச சரணௌ ப்ரத்யஹம் ஜபன் ।
ஸாயம் ப்ராதச்ச மத்யாஹ்னே குரூணாமந்திகேऽவஸத் ॥

நமஸ்க்ருத: ஸமஸ்தைச்ச வித்வத்பி: ப்ராக்ருதைரபி ।
பால்யமானச்ச குருபி: மோததே பரமச்ரியா ॥

ஸ்ரீமடத்தில் ஸஞ்சரித்துவந்த பால ஸ்வாமிகளைப் பார்த்துக் கண்ணில் ஆனந்தபாஷ்பம் சொரிய அவரை ஆசீர்வதித்துக்கொண்டு ஸ்ரீமத் ஆசார்யார் மிகவும் ஸந்தோஷப்படுவார்கள். ஸ்ரீ குருநாதரைக் கண்டவுடன்

இவரும் வேகமாய்ப்போய் வந்தனம் செய்வார். இவருக்குக் காவ்ய பாடம் முதலானதுகளைக் கிழவரான க்ருஷ்ண சாஸ்திரிகள் மூலமாய் ஏற்பாடு செய்துவிட்டு சாஸ்திரபாடம் தானே சொல்லவாரம்பித்தார்.

इतस्ततः संचरन्तं मठे शिष्यमवेक्ष्य तम् ।
सुनासं सुन्दराङ्गं च ननन्दुर्गुरवो मुहुः ॥

आनन्दबाष्पयुक्तास्ते वर्धयन्ति तमाशिषा ।
तानुपाधावदेषोऽपि गुरुवन्दनतत्परः ॥

वृद्धेभ्यः कृष्णशास्त्रिभ्यः कालिदाससरस्वतीम् ।
पाठयित्वा यतिक्ष्मेशाः शास्त्रमारेभिरे मुदा ॥

ते मत्तगजसंकाशाः शिष्यः कलभसंनिभः ।
गुरुशिष्यावशोभेतां मत्तेभकलभाविव ॥

இதஸ்தத: ஸஞ்சரந்தம் மடே ஶிஷ்யமவேக்ஷ்ய தம் ।
ஸுநாஸம் ஸுந்தராங்கம் ச நநந்துர் குரவோ முஹு: ॥

ஆனந்த பாஷ்ப யுக்தாஸ் தே வர்த்தயந்தி தமாஶிஷா ।
தானுபாதாவதேஷோऽபி குரு வந்தன தத்பர: ॥

வ்ருத்தேப்ய: க்ருஷ்ண ஶாஸ்த்ரிப்ய: காளிதாஸ
ஸரஸ்வதீம் ।
பாடயித்வா யதிக்ஷ்மேஶா: ஶாஸ்த்ரமாரேபிரே முதா ॥

தே மத்தகஜ ஸங்காஶா: ஶிஷ்ய: கலப ஸந்நிப: ।
குருஶிஷ்யாவஶோபேதாம் மத்தேப கலபாவிவ ॥

இவ்விதமாக குரு சிஷ்யர்கள் இருவரும் சோபித்து வந்தார்கள். ஆனாலும் இந்த ஸம்பவம் பந்துக்களுக்கு மாத்திரம் வெகுகாலம் வரை மனஸ் ஸமாதானமாகாமலே இருந்தது. வெங்கடாசல தீக்ஷிதர் தன் துக்கத்தை

வெளியிடமுடியாமல், முன்னமே விவாஹம் செய்துகொடுத்திருக்கலாமே என்று உள்ளூர வருந்தினர். அப்படியேயல்லாவதானியும் துக்கித்தார். மாதாமஹி மிகவும் வருந்தினள். மாமாவின் பெண்ணும் தன் தகப்பனர் இந்த ஸன்யாஸத்திற்கு எப்படி இடம் கொடுத்தார் என்று நொந்து கொண்டாள். அவளுடைய தாயார் துக்கப்படும்போது "இப்பாலகர் தன் பெண்ணை விவாஹம் செய்துகொள்ளப் போகிறார் என்ற பிரமத்தில் அல்லவா இருவரும் ஸ்வாதீனமாய் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாமலே இருந்து விட்டார்கள்" என்று புலம்பினர். பாலகருக்கு ஸமான வயதுள்ள யாவரும் சோகமடைந்தார்கள்.

यत्पुत्र्याः तस्य च पुरा द्वन्द्वभावित्वविभ्रमात् ।
नान्योन्यं भाषणमभूत् मातुली तेन साऽतपत् ॥

ये स्युः सवयसः तस्य तेऽपि शोकवशं गताः ॥

யத் புத்ர்யா: தஸ்ய ச புரா த்வந்த்வ பாவித்வ விப்ரமாத் ।
நாந்யோந்யம் பாஷணமபூத் மாதுலீ தேந ஸாऽதபத் ॥

யே ஸ்யு: ஸவயஸஸ் தஸ்ய தேபி ஶோகவஶம் கதா: ॥

பாலஸ்வாமிகளுக்கு மாத்திரம் எவ்வித சோகமோ பச்சாத்தாபமோ ஏற்படவில்லை. ஸ்வபாவத்திலேயே தீரராகவும் கம்பீரத்தன்மை முதலிய குணங்கள் பொருந்தியுள்ளவராகவும் இருந்ததால் மனதில் எவ்வித விகாரமுமற்று விளங்கிவந்தார்.

एवं वृत्तमभूत् तस्य नारसिंहस्य धीमतः ।
आगतस्य विदूराच्च संन्यासप्रतिपादने ॥

एवं वृत्ते च संन्यासे नाशोचत् गुरुलालितः ।
धीरत्वाच्च स्वभावेन गाम्भीर्यौदार्यवैभवात् ॥

ஏவம் வ்ருத்தமபூத் தஸ்ய நாரஸிம்ஹஸ்ய தீமத: ।
ஆகதஸ்ய விதூராச்ச ஸந்யாஸ ப்ரதிபாதனே ॥

ஏவம் வ்ருத்தே ச ஸந்யாஸே நாஶோசத் குருலாளித: ।
தீரத்வாச்ச ஸ்வபாவேன காம்பீர்யௌதார்ய வைபவாத் ॥

## 9. தகப்பனாரின் துயரம்

சிருங்கேரியில் இவ்விதம் நடந்த ஸம்பவத்தைப்பற்றி வெங்கடாசல தீக்ஷிதர் உடனே கடிதம் எழுதி திருச்சிராப்பள்ளியில் இருந்துவந்த அளகாத்ரிபட்டருக்கு ஒரு தூதர் மூலமாகக் கொடுத்தனுப்பினர். அதைப் பார்த்ததும் அவருக்கு ஏற்பட்ட துயரத்திற்கு அளவேயில்லை. பிராண த்யாகம் செய்துவிடலாமா என்று கூட நினைத்தார். "விவாஹத்திற்காக வந்த பையனுக்கு ஸ்வாமிகள் தான் எப்படி ஸன்யாஸம் கொடுத்தார்? பெண்ணைக்கொடுக்கிறேனென்று சொல்லி வரவழைத்துவிட்டு ஸன்யாஸியாக ஆக்கினரே அவர் ஒரு மாமனா?" என்று பலவாருகப் புலம்பினர்.

அவருடன் கூடவிருந்த கொண்டபட்டர் எவ்வளவோ ஸமாதானப்படுத்திப்பார்த்தார். "கார்யம் நடந்துவிட்டது. இனி சோகப்படுவதில் என்ன பிரயோஜனம்? ஸ்வாமிகளையாவது, மாமனையாவது குற்றம் சொல்வது நியாயமில்லை. பகவத் ஸங்கல்பம் இவ்விதம் இருக்கும்போது அவர்கள் என்ன செய்யமுடியும்? உலக க்ஷேமத்திற்காக அவதாரம் எடுத்தவர் உங்கள் குமாரர். எதற்காக ஜனித்தாரோ அதிலேயே ஈடுபட்டுவிட்டார். மஹான்கள் தங்கள் சொந்த ஸுகத்தை கவனியாமல் உலக க்ஷேமத்தையே கருதுவார்கள். மரங்களில் பழங்கள் பழுப்பது மரங்களின் பிரயோஜனத்திற்காகவல்ல. நீங்கள் அவர் ஜனிப்பதற்கு நிமித்தமாயிருந்தீர்களே தவிர அவருக்கும் உங்களுக்கும் என்ன ஸம்பந்தம்? உலகத்தை ரக்ஷிக்கக்கூடிய ஒரு மஹானைப் புத்திரராக அடைந்ததில் ஸந்தோஷப்படுங்கள்.

ஸ்ரீ ஸ்வாமிகள் இதற்குமுன் நல்ல லக்ஷணமுள்ள அநேகம் பையன்களை கவனித்தார்கள். அவர்களில் யாரையேனும் சிஷ்யராக எடுத்துக்கொண்டாரா? அவருக்கு யாரிடத்தில் நன்கு திருப்தி ஏற்படுகிறதோ அவரைத்தானே சிஷ்யராக ஏற்றுக்கொள்வார்? பெண்ணை உத்தேசித்து சிருங்கேரிக்குப் போனாலும் அதைவிட மஹத்தான ஸாம்ராஜ்யம் கிடைக்கும் போது வேண்டாமென்று சொல்ல நியாயமென்ன? இதை உணர்ந்தே புத்திசாலிகளான மாமன்கள் ஸம்மதித்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. நூறு பொன் கிடைக்குமென்று போனவிடத்தில் ஆயிரம் பொன் கிடைத்தால், நூறு பொன் கிடைக்கவில்லையேயென்று யாரேனும் துக்கப்படுவதுண்டா? உத்தமமான பீடாதிபத்யம், ஏராளமான செல்வம், கிடைத்திருக்கும்போது ஸந்தோஷப்படல்லவா வேண்டும்" என்று சொல்லிப்பார்த்தார்.

"புத்திரனை இழந்து கிடைக்கும் செல்வம் வேண்டவே வேண்டாம். அவன் என்னுடன் இருந்தால் தாரித்ர்யமே சிலாக்கியம். என்னைக் கேட்காமல் ஸ்வாமிகள் இவ்விதம் செய்யலாமா? நான் நாமகரணம் செய்து இட்ட பெயரை மாற்றிவிட்டார். நான் சௌள ஸம்ஸ்காரம் செய்து வைத்த சிகையை எடுத்துவிட்டார். நான் உபநயனம் செய்து யக்ஞோபவீதம் போட்டுவிட்டதையும் காயத்ரீ உபதேசம் செய்ததையும் வீணாக்கி விட்டுவிடும்படி செய்துவிட்டார். கல்யாணத்தை உத்தேசித்து வந்தவனுக்கா ஸன்யாஸம் கொடுக்கிறது? ஒரு வருஷ காலம் வீட்டிலேயே வைத்துக்கொண்டிருந்தும் விவாஹம் செய்துகொடுக்காமலே மாமன் காலதாமதம் செய்திருக்கிறாரே? ஸ்வாமிகள் எவ்வளவு சொன்னாலும் கூட அவர் பாதத்தைப் பிடித்துக்கொண்டு முடியாதென்று கண்டிப்பாய் சொல்லியிருக்கவேண்டாமா? அவரை நம்பி நான் பையனைத் தனியாக அனுப்பினது பிசகு. நானும் கூடவே போயிருக்கவேண்டும். வேத சாஸ்திரங்களையெல்லாம் நன்றாகக் கற்று என் பையன் கிருஹஸ்தனாகவிருந்து அக்னிஷ்டோமம், அதிராத்ரம்,

பௌண்டரீகம், பசுபந்தம், வாஜபேயம் முதலானவைகளை யெல்லாம் செய்துகொண்டு ஆஹிதாக்னியாக விளங்கப் போகிருனென்று எவ்வளவு ஆசை வைத்துக்கொண்டிருந் தேன்? அவ்வளவையும் வீணுக்கிவிட்டாரே?" என்று அளகாத்ரிபட்டர் மறுபடியும் புலம்பினுர்.

அதற்குக் கொண்டபட்டர் "கார்யம் நடந்துவிட்ட பிறகு அதுவிஷயமாய் சோகப்படுவதில் என்ன லாபம்? விவேகத்தைக் கைக்கொள்ளுங்கள். உங்கள் பையன் ஆயிரம் அக்னிஹோத்ரம் செய்யட்டும், நூற்றுக்கணக்காக வாஜபேயம்தான் செய்யட்டும், இந்தப் பிரதிஷ்டை கிடைக்குமா? ஆத்மஞானமேற்பட்டு ப்ரஹ்மநிஷ்டராக உங்கள் புத்திரர் ஆகும்போது காமஸ்வகத்தை அவர் பொருட்படுத்துவாரா?" என்று சொன்னுர்.

இதைக்கேட்டு மிகவும் கோபமடைந்து அளகாத்ரி பட்டர் "இவ்வளவு விவேகம் எனக்கு போதிக்கிற நீர் ஏன் ஸன்யாஸியாகப் போகவில்லை? இப்பொழுது யோஜிக்கும்போது, நீரே ஸ்ரீ ஸ்வாமிகளிடத்திலும் மாம ஞிடத்திலும் இவ்விஷயத்தைப் பற்றிப்பேசித் தீர்மானம் செய்துகொண்டு, வஞ்சகமாக கல்யாணத்திற்காக சிருங்கேரிக்கு வரவேண்டுமென்று கடிதம் வாங்கிக்கொண்டு வந்தீர் என்று தோன்றுகிறது" என்ருர்.

இவ்வார்த்தையைக் கேட்ட கொண்டபட்டர் மிகவும் மனம் வருந்தி "நீங்கள் என்னைப்பற்றி அவ்விதம் நினைக்கக் கூடாது எனக்குத் தெரிந்திருந்தால் வாஸ்தவத்தையே உங்களிடம் சொல்லியிருப்பேன். தவிரவும் உங்கள் பையன் சிருங்கேரி பீடாதிபதியாக ஆகப்போகிருரென்று எனக்குத் தெரிந்திருந்தால் அவரை நடத்தி அழைத்து வந்திருப்போமா? என் தமயனுர்தான் இங்கிருந்து சிருங்கேரி வரை அவரை நடந்து வரும்படி செய்திருப்பாரா? தான் இறங்கிக்கொண்டாவது இவரைக் குதிரையில் ஏற்றிக்

கொண்டு போயிருக்கமாட்டாரா? நடத்தி அழைத்துக் கொண்டு போனால் அது பெரிய அபசாரமாகாதா? தைவத்தினால் ஏற்படும் கார்யங்கள் விஷயமாய் யாருக்கும் பொறுப்புக் கிடையாது தவிரவும், உங்கள் புத்திரர் அவருக்குத் தக்க பதவியையே அடைந்திருக்கிறார். ராஜ ராஜர்களுக்கும் குருவாகவும் ஜகத்திற்கே குருவாகவும் ஏற்பட்டுவிட்டார். அந்த குருவிற்கும் குருவாகவிருக்கும் ஸ்தானம் உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. ஆகையால் நீங்கள் ஸந்தோஷத்தையே அடையவேண்டும்" என்றார்.

என்ன சொல்லியும் மனஸ் ஸமாதானமாகாமலே அஹோராத்திரம் புலம்பிக்கொண்டிருந்துவிட்டுப் பிறகு எப்படியும் புத்திரனைப் பார்க்கவேண்டுமென்ற வேகத்தினால் அளகாத்ரிபட்டர், தன் பார்யை, இளைய குமாரன், கொண்டபட்டர் முதலானவர்களுடன் திருச்சிராப்பள்ளியை விட்டுப் புறப்பட்டு வேகமாகவே பல ஊர்கள், மலைகள், காடுகள், நதிகள் இவைகளைத் தாண்டிக்கொண்டு சிருங்கேரிக்கே போய்ச்சேர்ந்தார். உடனே சின்னப் பையனை அழைத்துக்கொண்டு மடத்திற்குப் போய் ஸ்ரீ சாரதாம்பாளையும் ஸ்ரீ ஸ்வாமிகளையும் தர்சித்துவிட்டு பாலஸ்வாமிகள் இருக்கும் இடம் போனார். இருவரும் சோகத்தை அடக்கிக்கொண்டு நமஸ்கரித்துவிட்டு நின்றார்கள். பேசுவதற்கு நா எழவில்லை. கண்களில் நீர் சொரியப் பார்த்துவிட்டுத் திரும்பிவிட்டார்கள்.

शोकं संस्तभ्य परमं रत्नकम्बलमास्थितम् ॥

सपुस्तकं सुनिर्विण्णं दृष्ट्वा नत्वा स्थितौ च तौ ।
ददर्श बाष्पसंयुक्तः सपुत्रो ब्राह्मणोत्तमः ॥

संन्यासेन यतीन्द्रैस्तैः अन्यथाकृतमात्मजम् ।
उपसर्गवशाद्धातुं अर्थान्तरमिवागतम् ॥

संप्रेक्ष्य शोकनिर्विण्णो ब्राह्मणस्तनयान्वितः ।
न कांचिदपि वाचं च प्रत्यपद्यत विह्वलः ॥

निर्मुच्य शोकसलिलं दृग्भ्यां नासापुटादपि ।
तथाकृतं निरीक्ष्यैव द्विजः शोकाद्विनिर्गतः ॥

ஶோகம் ஸம்ஸ்தப்ய பரமம் ரத்னகம்பளமாஸ்த்திதம் ॥

ஸபுஸ்தகம் ஸுநிர்விண்ணம் த்ருஷ்ட்வா நத்வா
ஸ்திதௌ ச தௌ ।
ததர்ஶ பாஷ்ப ஸம்யுக்த: ஸபுத்ரோ ப்ராஹ்மணோத்தம: ॥

ஸந்யாஸேன யதீந்த்ரைஸ்தை: அந்யதாக்ருதமாத்மஜம் ।
உபஸர்கவஶாத் தாதும் அர்த்தாந்தரமிவாகதம் ॥

ஸம்ப்ரேக்ஷ்ய ஶோக நிர்விண்ணோ ப்ராஹ்மணஸ்
தனயான்வித: ।
ந காஞ்சிதபி வாசம் ச ப்ரத்யபத்யத விஹ்வல: ॥

நிர்முச்ய ஶோக ஸலிலம் த்ருக்ப்யாம் நாஸா புடாதபி ।
ததாக்ருதம் நிரீக்ஷ்யைவ த்விஜ: ஶோகாத் விநிர்கத: ॥

அந்த ஸமயம் குமார ஸம்பவம் என்ற காவ்யம் பால ஸ்வாமிகள் வாசித்துக்கொண்டிருந்தார். பிறகு நைஷதம் நடந்தது. சப்த சாஸ்திரத்தில் மிகவும் பாரங்கதராயிருந்த ஸ்ரீமத் ஆசார்யரே இவருக்கு வியாகரணம் முதலான சாஸ்திரங்களை ஆரம்பித்துவைத்துப் பாடம் சொன்னார். குரு சிஷ்யர்கள் இருவரும் பல்லக்கில் வீதிகளில் போவதையும், ஆலய தர்சனத்திற்காகச் சேர்ந்து போவதையும் பார்த்தால் பரமேசுவரனும் முருகனும்போல் தோற்றமளித்தார்கள்.

कुमारशंकरप्रख्यौ काशमानौ गुणैः शुभैः ।
अन्योन्यमनुरूपौ तौ शंकराचार्यसत्कुले ॥

குமார ஶங்கர ப்ரக்யௌ காஶமானௌ குணை: ஶுபை: ।
அந்யோந்யமனுரூபௌ தௌ ஶங்கராசார்ய ஸத்குலே ॥

அவ்வருஷம் இரண்டு ஸ்வாமிகளும் சேர்ந்து வெகு அழகாக நடத்தின நவராத்திரி உத்ஸவத்தில் இருவரும் விசேஷ அலங்காரத்துடன் ஸபையில் வீற்றிருந்து தர்சனம் கொடுத்ததைக் கண்டு எல்லோரும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள்.

## 10. ராஜஸபைக்கு விஜயம்.

இவ்விதம் சிஷ்ய பரிக்ரஹம் நடந்ததைக் கேட்டு கௌதி மஹாராஜா வெங்கடப்ப நாயக்கர் பட்டாடைக ளெல்லாம் கொடுத்தனுப்பியிருந்தார். அவர் மிகவும் பிரீதியை அடைந்தார். அவருடைய வேண்டுகோளின்படி அவருடைய பிரதானப் பட்டினமான இக்கேரி என்ற நகரத்திற்குப் போய்வரவேண்டுமென்று ஸ்ரீ ஸ்வாமிகள் உத்தேசித்து சிஷ்ய ஸ்வாமிகளையும் கூடவே அழைத்துக் கொண்டு புறப்பட்டார்கள். வித்வான்கள், உத்தியோகஸ் தர்கள், வேலைக்காரர்கள் முதலானவர்கள் ஏராளமாகக் கூடவே வந்தார்கள். வேகமாய்ப் போனாலும் சரீரத்திற்கு அசைவு கொடுக்காமல் இவர்கள் பல்லக்குகள் சென்றன. இரண்டு ஸ்வாமிகளும் சேர்ந்து போவது மிகவும் சோபை யுடன் விளங்கிற்று.

இரண்டு ஸ்வாமிகளும் வேதம் சாஸ்திரம் இவைகளி லேயே வாஸம் செய்பவர்கள், உலகத்திற்கு க்ஷேமம் செய்வ தற்காகவே எல்லாம் விட்டு துறவியானவர்கள், உலகத்திற் காகவே இப்பெரிய தர்மராஜ்ய நிர்வாஹத்தை ஏற்றுக் கொண்டவர்கள். இரண்டுபேர்களும் மனோஹரமாயும் திடமாயுமுள்ள சரீரமுடையவர்கள், அப்படியே இந்திரியங் களை ஜயித்தவர்கள்.

कम्बुग्रीवौ वृषस्कन्धौ महोरस्कौ वराननौ ।
वेदशास्त्रकृतावासौ धर्मनित्यौ जितेन्द्रियौ ॥

राजयन्तौ तमध्वानं चन्द्रसूर्याविवाम्बरम् ।
राजलक्षणसंपन्नौ राजानौ भूसुरोत्तमौ ॥

अनुग्रहाय लोकस्य त्यक्तसर्वपरिग्रहौ ।
लोकस्यानुग्रहायैव कृतराज्यपरिग्रहौ ॥

கம்புக்ரீவௌ வ்ருஷஸ்கந்தௌ மஹோரஸ்கௌ
வராணனௌ ।
வேத சாஸ்த்ரக்ருதாவாஸௌ தர்மநித்யௌ
ஜிதேந்த்ரியௌ ॥

ராஜயந்தௌ தமத்வானம் சந்த்ர ஸூர்யாவிவாம்பரம் ।
ராஜலக்ஷண ஸம்பந்நௌ ராஜாநௌ பூஸுரோத்தமௌ ॥

அனுக்ரஹாய லோகஸ்ய த்யக்த ஸர்வ பரிக்ரஹௌ ।
லோகஸ்யாநுக்ரஹாயைவ க்ருத ராஜ்ய பரிக்ரஹௌ ॥

[ "गुरवो हेमगौराङ्गाः सुन्दरायतबाहवः ।"

"குரவோ ஹேமகௌராங்காः ஸுந்தராயத பாஹவः ।"
என்றெல்லாம் குருநாதருடைய சரீர காந்தி தங்கம் போலிருந்தது, பழுத்த எலுமிச்சம்பழம் போலிருந்தது, என்று வர்ணிக்கையில் சிஷ்ய ஸ்வாமிகளுடைய வர்ணத்தைப் பற்றி வர்ணிக்கப்படவில்லை. ஆனாலும் ஏற்கனவே அவர் தகப்பனார் நல்ல கருப்பு जलदच्छविः (ஜலதச்சவி:) மேகம் மாதிரி பிரகாசிப்பார் என்று வியக்தமாகக் கண்டிருப்பதால், சிஷ்ய ஸ்வாமிகள் குருநாதர்மாதிரி சிகப்பாக இருந்திருக்கவில்லையென்று தெரிகிறது. அவருடைய பால பர்வத்தில் அவரை வர்ணிக்கும்போது அவர் சிகப்புமில்லை, கருப்புமில்லை, என்று சொல்லியிருப்பதினாலும் இவ்விஷயம் தெரிந்து கொள்ளலாம். श्यामो नो न च रक्तकः (ச்யாமோ நோ ந ச ரக்தக: ]

ஸ்ரீ ஸ்வாமிகள் பரிவாரங்களுடன் அநேக காடுகளையும் மலைகளையும் தாண்டி இக்கேரி போய்ச்சேர்ந்தார்கள். மஹாராஜர் வெகு மரியாதையுடன் ஸந்தோஷமாய் எதிர் கொண்டு அழைக்க வந்து ஸ்ரீ ஸ்வாமிகளையும் சிஷ்ய ஸ்வாமிகளையும் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். அவர்களை உத்தமமான ஆஸனங்களில் வீற்றிருக்கச்செய்து தானும் ஒரு ஆஸனத்தில் உட்கார்ந்தார். கொஞ்ச நாழிகை நேரம் அன்யோன்யம் வெகு பிரீதியுடன் ஸ்ரீ ஸ்வாமிகளும் மஹாராஜரும் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு ஸ்ரீ ஸ்வாமிகள் விலையுயர்ந்த பட்டு வஸ்திரங்களை அரசனுக்குக்கொடுத்து ஆசீர்வதித்தார்கள். அப்படியே குருவின் ஆக்ஞையின்பேரில் பால ஸ்வாமிகளும் தனியாக ஸன்மானம் செய்ததுடன் ஆசீர்வாத ரூபமாக ஒரு சுலோகமும் சொன்னார். அதற்கு அர்த்தம் சொல்கிற முறையில் விஸ்தாரமாக பிரஸங்கமும் செய்தார். வியா கரணத்தில் சில விஷயங்களை எடுத்து வெகு அழகாக விவரித்தார். ஸ்ரீமத் ஆசார்யார் தான் இயற்றியிருந்த (சிவ) கீதாபாஷ்யத்திலிருந்து சில விஷயங்களைக் குறிப் பிட்டுச் சொல்லி மஹாராஜரை ஸந்தோஷப்படுத்தினார். சிஷ்ய ஸ்வாமிகளின் பிரஸங்கத்தை மஹாராஜர் முதல் அங்குள்ள எல்லோரும் கேட்டு ஆச்சரியப்பட்டு வெகு ஸந்தோஷப்பட்டார்கள். அந்த ஸபையில் ஸ்ரீ மடம் உத்யோகஸ்தர்கள், பண்டிதர்கள் முதலானவர்கள் தவிர அரசாங்கத்தைச் சேர்ந்த புட்டப்பா, வியாஸப்பா என்ற அதிகாரிகள், சங்கரநாராயண பட்டர், கணேசதீக்ஷிதர், சங்கரநாராயணதீக்ஷிதர், பட்டாசார்யார், முதலான மஹா பண்டிதர்களும் கூடியிருந்தார்கள்.

ராஜஸபை கலைந்து ஸ்ரீ ஸ்வாமிகள் தம் ஜாகைக்குப் பரிவாரங்களுடன் புறப்பட்டுப் போகும்போது துக்கப்பா என்ற கன்னடக்கவி ஒருவர் தனக்கு ஏற்பட்ட ஸந்தோஷத்தை அடக்கிக்கொள்ள முடியாமல் பால ஸ்வாமிகளின் பல்லக்கிற்கு ஸமீபத்தில் வந்து "தாங்கள்

ராஜஸபையில் செய்த பிரஸங்கம் ஸாக்ஷாத்தாக ஸரஸ்வதீ தேவியே செய்தாற்போலிருந்தது" என்று சொன்னார்.

आनन्दधारणाशक्तो दुग्गप्पः कानड कविः ॥

शिबिकोपान्तमागत्य तरुणस्वामिनोऽभणत् ।
राजाग्रतः सभामध्ये युष्माभिर्यत् प्रसञ्जितम् ॥

सरस्वत्या तया साक्षात् प्रसञ्जितमिवाभवत् ।

ஆநந்த தாரணாசக்தோ துக்கப்ப: காநட: கவி: ॥

சிபிகோபாந்தமாகத்ய தருண ஸ்வாமிநோऽபணத் ।
ராஜாக்ரத: ஸபாமத்யே யுஷ்மாபிர் யத் ப்ரஸஞ்ஜிதம் ॥

ஸரஸ்வத்யா தயா ஸாக்ஷாத் ப்ரஸஞ்ஜிதமிவாபவத் ।

மறுநாள் காலையிலும் அநேக வித்வான்கள் பால ஸ்வாமிகளிடம் வந்து தங்கள் ஸந்தோஷத்தைத் தெரிவித்துக்கொண்டார்கள். இவ்விதம் எல்லாரும் புகழும் படி ஏற்பட்டது தன்னுடைய பெருமையென்று கொஞ்சமேனும் எண்ணம் கொள்ளாமல், எல்லாம் குருநாதரின் அனுக்ரஹமென்றும், அவர் திருப்தியடைவதே தனக்கு ஸன்மானமென்றுமே பாவித்தார்.

संतुष्टा गुरवो यस्मात् प्रसंगेन स्वकेन तु ।
तेनैव च कृतार्थत्वं आत्मनः सोऽप्यमन्यत ॥

सच्चिदानन्दयोगीन्द्रो गुरुभक्तिपरायणः ।
गुरूणामेव माहात्म्यं तच्च सर्वममन्यत ॥

गुरूणामेव संतोषं प्रसङ्गस्य प्रयोजनम् ।
अमन्यत स मेधावी स्तूयमानोऽखिलैश्च वा ॥

ஸந்துஷ்டா குரவோ யஸ்மாத் ப்ரஸங்கேன ஸ்வகேன து ।
தேநைவ ச க்ருதார்த்தத்வம் ஆத்மந: ஸோऽப்யமந்யத ॥

ஸச்சிதானந்த யோகீந்த்ரோ குருபக்தி பராயண: ।
குருணமேவ மாஹாத்ம்யம் தச்ச ஸர்வமமந்யத ॥

குருணமேவ ஸந்தோஷம் ப்ரஸங்கஸ்ய ப்ரயோஜனம் ।
அமந்யத ஸ மேதாவீ ஸ்தூயமாநோऽகிலைச்ச வா ॥

அவ்வூரில் அநேக பிரமுகர்கள் பாத பூஜை, பிக்ஷை முதலிய ஸத்காரங்கள் செய்து தீர்த்தப்பிரஸாதம் பெற்றுக் கொண்டார்கள். அவர்களில் புட்டப்பா என்ற அதிகாரி ஸ்ரீ ஸ்வாமிகளிடம் "தங்கள் சிஷ்யர் வித்யாரண்யருக்கு ஸமமாயிருப்பார்" என்று அடிக்கடி சொன்னார். அதைக் கேட்டு குருநாதரும் மிகவும் ஸந்தோஷப்பட்டார்.

भवच्छिष्या भविष्यन्ति विद्यारण्यसमा इति ॥

मम भातीति भूयोऽपि तमेवार्थमुदाहरत् ।
ननन्दुर्गुरवस्ते च शिष्योत्कर्षप्रशंसनात् ॥

பவச்சிஷ்யா பவிஷ்யந்தி வித்யாரண்யஸமா இதி ॥

மம பாதீதி பூயோபி தமேவார்த்தமுதாஹரத் ।
நநந்துர் குரவஸ்தே ச ஶிஷ்யோத்கர்ஷப்ரஶம்ஸனாத் ॥

அப்படியே துக்கப்பா, திம்மரஸ ஜோஸ்யர், சங்கர நாராயண சாஸ்திரி, கணேச தீக்ஷிதர், சங்கரநாராயண தீக்ஷிதர், போச்சய்யா, ராமபண்டிதர், மறுபடியும் புட்டப்பா இன்னும் அநேகம் பேர்கள் வெகு பக்தியுடன் ஸத்காரம் செய்தார்கள். மஹாராஜரும் விசேஷமாக ஸத்காரம் செய்ததுடன் தனக்கும் நல்ல பாண்டித்யமிருந்தபடியால், குருநாதரையும் சிஷ்யரையும் பிரதிதினம் ராஜஸபைக்குத் தருவித்து கீதா பாஷ்யத்தை பிரவசனம் செய்யும்படி பிரார்த்தித்தார். அதற்கிணங்கி ஸ்வாமிகள் செய்த பிரவசனத்தைக் கேட்டு மிக்க ஸந்தோஷமடைந்தார். கடைசியில் அவர்களை மிகவும் சிலாகித்துத் தன் பக்தியைக் காட்ட, பட்டு முதலான காணிக்கைகளை இருவருக்கும்

தனித்தனியே ஸமர்ப்பித்தார். வித்வான்களுக்கும் தக்கபடி ஸன்மானம் செய்தார். குருநாதர் இருக்குமிடம் வந்து பலதடவை நமஸ்கரித்து வழியனுப்பினுர்.

ஸ்ரீமத் ஆசார்யார் சிஷ்யருடன் அங்கிருந்து ஸகல பரிவாரங்களோடு புறப்பட்டு அன்றிரவு நதீதீரத்திலுள்ள புட்டகுப்பா என்பவரின் தோட்டத்தில் தங்கி, மறுநாள் ஸ்ரீகிராமம் போய், அங்கிருந்து மறுபடியும் புறப்பட்டு காடு மலைகளைக்கடந்து சிருங்கேரி ஸம்ஸ்தான எல்லைக்கு வந்து சேர்ந்தார்கள். இவர்களுடைய வரவை உத்தேசித்து வாழை, மாவிலை தோரணங்கள் இவைகளால் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்த சிருங்கேரி நகரத்தில் பிரவேசித்தார்கள். அங்குள்ள பாக்குத் தோட்டக்காரர்கள், வியாபாரிகள், மற்றும் கிராம ஜனங்கள் யாவரும் வெகு உத்ஸாகத்துடன் எதிர்கொண்டு ஒவ்வொரு கிருஹத்திலும் நீராஜனம் செய்து வரவேற்ருர்கள். ஸ்ரீமத் ஆசார்யர் பால ஸ்வாமிகளுடன் மலஹானிகரேசுவரர் ஆலயம் சென்று தர்சனம் செய்துவிட்டு, பல்லக்கு ஏறி சங்கத்வானம் வாத்ய கோஷம் சத்திரம் சாமரம் முதலிய எல்லா ராஜ சின்னங்களுடன் வீதிகளில் பவனி வந்தார்கள். அப்படியே ஸ்ரீமடம் சேர்ந்து உடனே ஸ்ரீ சாரதாம்பாளை வெகு நாழிகை வரை தர்சனம் செய்துகொண்டிருந்துவிட்டு பிறகு மடத்திற்குள் பிரவேசித்தார்கள்.

## 11. பீடாரோஹணம்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் முந்தின ஆசார்யார் ஸ்ரீ வித்யா சங்கரருடைய ஆலயத்தில் பெரியதாக சிகரம் செய்து வைக்க உத்தேசித்து ஏராளமாக செலவழித்து வேலை நடந்துகொண்டிருந்ததை இவர் பூர்த்தி செய்து வைத்து விமர்சையாக உத்ஸவம் நடத்தினுர்.

இவ்விதமாக சிஷ்யருடன் வெகு ஸந்தோஷமாக இருந்துவருகையில் ஒருநாள் ஸ்ரீமத் ஆசார்யார் ஸ்ரீமடம்

விஷயமான ஸகல பொறுப்புகளையும் சிஷ்ய ஸ்வாமிகளிடம் ஒப்பித்து விட்டு, பிரஹ்மதத்வானுஸந்தானம் செய்து கொண்டே எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும்போது, விதேஹமுக்தியடைந்தார்கள்.

[சிருங்ககிரி குரு பரம்பரைப்படி சகம் 1544 துந்துபி பால்குன கிருஷ்ணஸப்தமி 1623 மார்ச்சு 13 தேதி வியாழக் கிழமை என்று தெரிகிறது.]

शिष्ये राज्यधुरं त्यक्त्वा मठीयां सकलां श्रियम् ।
कृतकृत्याश्च सर्वत्र पश्यत्सु सकलेषु ते ॥

बालसूर्यप्रतिस्पर्धिप्रभाशोभितविग्रहाः ।
भूत्युद्धूलितसर्वाङ्गाः रुद्राक्षैः समलंकृताः ॥

ध्यातारो ब्रह्मतत्त्वस्य विमुक्ताः कालयोगतः ।
गुरवः पूज्यचरणा यतीन्द्रा लोकविश्रुताः ॥

ஶிஷ்யே ராஜ்யதுரம் த்யக்த்வா மடீயாம் ஸகலாம் ச்ரியம் ।
க்ருதக்ருத்யாச்ச ஸர்வத்ர பச்யத்ஸு ஸகலேஷு தே ॥

பால ஸூர்ய ப்ரதிஸ்பர்த்தி ப்ரபா ஶோபித விக்ரஹா: ।
பூத்யுத்தூளித ஸர்வாங்கா: ருத்ராக்ஷை: ஸமலங்க்ருதா: ॥

த்யாதாரோ ப்ரஹ்மதத்வஸ்ய விமுக்தா: காலயோகத: ।
குரவ: பூஜ்யசரணா யதீந்த்ரா லோகவிச்ருதா: ॥

இவர்கள் மறைந்தார் என்று தெரிந்து எல்லோரும் மிகவும் வருந்தினார்கள். வெங்கடப்ப மஹாராஜரும் மிகவும் வருந்தினார். மேல் நடக்கவேண்டிய கார்யங்களெல்லாம் முறைப்படி நடந்து முடிந்தன.

பிறகு பால ஸ்வாமிகளுக்கு பட்டாபிஷேகம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஜோஸ்யரைக் கொண்டு நல்லதினம் பார்த்து அன்று மடத்துப்

புரோஹிதர் தேவரு பட்டர் என்பவர் புண்யாஹம் செய்து, மாவிலைகளுடன் கலசங்கள் ஸ்தாபித்து, பிரஹ்மா, வருணன், விஷ்ணு, லோக பாலர்கள், துர்க்கை, சூர்யன், சந்திரன், முதலான தேவதைகளை ஆவாஹனம் செய்து, அந்தந்த தேவதைகளுக்குரிய திரவியங்களால் அக்னியில் ஆஹுதிகள் செய்து, பூர்ணாஹுதி ஸ்விஷ்டகிருத் எல்லாம் முறைப்படி செய்தார். பிறகு ஸிம்ஹாஸனத்திற்குப் பூஜையும் செய்தார். மங்களஸ்நானம் செய்து ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு அலங்கார பூஷிதராக ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளவர்கள் வாத்ய கோஷத்துடன் உள்ளே பிரவேசித்து, ஸிம்ஹாஸனத்திற்கு ஸமீபத்தில் வந்து, வலது பாதத்தை முதலில் வைத்து ஆரோஹணம் செய்து, கீழ்திசை நோக்கி உட்கார்ந்துகொண்டார்கள். உடனே புரோஹிதர் மற்ற பிராஹ்மணர்களுடன் சேர்ந்துகொண்டு, வேத கோஷம் முழங்க, கலசங்களிலுள்ள தீர்த்தத்தினால் ஸ்ரீ ஸ்வாமிகளின் சிரஸில் அபிஷேகம் செய்தார்கள். பிறகு வெண்குடை, சாமரம், தங்க தண்டம் முதலான ராஜ மரியாதைகள் செய்யப்பட்டன. பஞ்ச வாத்யங்கள் முழங்கின. வெங்கடப்ப மஹாராஜர், கோபாலன் என்ற தன் அதிகாரி மூலமாக அனுப்பியிருந்த விலையுயர்ந்த பட்டு வஸ்திரங்கள் முதலான காணிக்கைகள் வந்தன புரஸ்ஸரமாக ஸமர்ப்பிக்கப்பட்டன. பிறகு மற்ற அதிகாரிகளும், வித்வான்களும், மற்றும் பக்தர்களும் ஏராளமாக முன்வந்து தங்களால் இயன்ற காணிக்கைகளைச் செலுத்தி நமஸ்கரித்தார்கள். கூட்டத்தை சமாளிக்க அரசருடைய அதிகாரியின் உதவி தேவையாயிருந்தது. ஸ்ரீமத் ஆசார்யாரின் பாத கமலங்களில் ஸுவர்ணம் குவிந்துவிட்டது.

பிறகு மேல்மேல் குழுமிக்கொண்டிருக்கும் பக்தர்களுக்கு தர்சனம் கொடுப்பதற்காக அந்த ஸிம்ஹாஸனத்திலேயே வெகு நாழிகை வீற்றிருந்துவிட்டு ரத்ன பாதுகை தரித்து ராஜாலங்காரத்துடனேயே தேவாலய தர்சனத்திற்காகப்

புறப்பட்டார்கள். ஸகலவிதமான பிருதுகளும் கூடவர, வாத்தியங்கள் முழங்க, வந்திகள் கட்டியங்கூற, ஸ்ரீ சந்த்ர மௌளீசுவரரை தர்சனம் செய்துகொண்டு, ஜனார்த்தனர் ஆலயம் சென்று தர்சனம் செய்து, ஸ்ரீ வித்யாசங்கரரையும் தர்சனம் செய்துகொண்டு, வெளியில் வந்தார்கள். பிறகு வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்த தங்கப்பல்லக்கில் அமர்ந்து வீதி வழியாக மலஹானிகரேசுவரர் ஆலயம் சென்றார்கள். நகரம் பூராவும் தோரணங்களாலும் கொடிகளாலும் வாழைகளாலும் விசேஷமாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. இந்த மஹோத்ஸவத்தை உத்தேசித்து ஸ்திரீ புருஷர்கள் யாவரும் நல்லுடை தரித்து அலங்காரம் செய்துகொண்டு வெகு உத்ஸாஹத்துடன் விளங்கினார்கள். அவ்வூர் ஜனங்களும் பக்கத்து கிராமங்களிலிருந்து வந்திருந்த ஜனங்களும் ஏராளமாகக் கூடிவிட்டபடியால் எள்ளுப்போட்டால் கீழே விழாது என்கிறபடியே இருந்தது.

द्रष्टृभिर्नागरैर्भद्रं जनैर्जानपदैरपि ।
तिलमात्रप्रपातस्य नावकाशोऽभवत् पुरे ॥

த்ரஷ்ட்ருபிர் நாகரைர் பத்ரம் ஜனைர் ஜானபதைரபி ।
திலமாத்ரப்ரபாதஸ்ய நாவகாசோऽபவத் புரே ॥

அப்பொழுதிருந்த கூட்டத்தினாலும் உத்ஸாஹத்தினாலும் பல்லக்கு மிக மெதுவாகத்தான் செல்ல வேண்டியிருந்தது. மலஹானிகரேசுவரர் ஆலயத்திற்குக் குன்றின் படிகள் வழியாகச் சென்று தர்சனம் நமஸ்காரம் முதலானதுகளைச் செய்து பிரஸாதம்பெற்று கீழே இறங்கி மறுபடியும் வீதி வழியாக வந்தார்கள். ஒவ்வொரு கிருஹத்திலும் தட்டில் வெகு அழகாக பல வர்ணங்களில் கோலம் போட்டு அதில் மாவிளக்கு வைத்து நெய் தீபம் கற்பூரம் ஏற்றி பெண்டுகள் ஆரத்தி எடுத்தார்கள். ஒவ்வொரு தட்டிலும் ஸ்ரீமத் ஆசார்யார் பொன் காசு போட்டுக்கொண்டே வந்தார்கள்.

भुजकल्पलता तस्य ददती काञ्चनं परम् ।
स्त्रीभ्यो न श्रममागच्छत् रामबाहुरिवाहवे ॥

புஜகல்பலதா தஸ்ய தததீ காஞ்சநம் பரம் I
ஸ்த்ரீப்யோ ந ச்ரமமாகச்சத் ராமபாஹுரிவாஹவே II

மெள்ள மெள்ளத் திரும்பி வந்து ஸ்ரீமடம் வாசலில் பல்லக்கிலிருந்து இறங்கி ஸ்ரீ சாரதாம்பாளை நமஸ்கரித்து விட்டு, அங்கு விரித்திருந்த ரத்ன கம்பளத்தில் அமர்ந் தார்கள். அங்கு கூடியிருந்த வித்வான்களும் மஹாஜனங் களும் "தாங்கள் நீடூழி காலம் எங்களை ஸம்ரக்ஷித்து வரவேண்டும். துங்கபத்ராநதி, ஸகல தேவதைகள், வேதங்கள், ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதல் பரமேசுவர ருடைய அம்சங்களான பூர்வாசார்யார்கள், மஹரிஷிகள், தேவரிஷிகள், முதலான யாவரும் தங்களை ரக்ஷிக்கட்டும்" என்று பலவாறாக மனமார வாழ்த்தினார்கள்.

युष्माकं गुरवस्तावत् शिष्यं प्राप्येदृशं परम् ।
गतवन्तो महात्मानः कृतकृत्या महाधियः ॥

भवन्तोऽत्रभवन्तस्तु पालयन्तु च नः सदा ।
प्राप्तेयं शारदादेवी मल्लिकार्जुन एव च ॥

चन्द्रमौलिर्महादेवो याश्चान्याः स्थलदेवताः ।
तुङ्गभद्रा महाभागा रक्षन्तु भवतः सदा ॥

नारायणः सलक्ष्मीको ब्रह्मा वाणीसमन्वितः ।
शम्भुर्गौरीविशिष्टश्च रक्षन्तु भवतः सदा ॥

वेदाः साङ्गाश्च चत्वारो रक्षन्तु भवतः सदा ।
शंकराचार्यमुख्याश्च गुरवः शिवरूपिणः ॥

विश्वामित्रवसिष्ठाद्याः ऋषयो ये च विश्रुताः ।
सुरर्षयो नारदाद्याः रक्षन्तु भवतः सदा ॥

इयं च वसुधादेवी सूर्याचन्द्रमसावपि ।
देवेन्द्रमुख्या देवाश्च रक्षन्तु भवतः सदा ॥

एवमादीनि भद्राणि वचांस्याशीःपदानि च ।
उक्त्वा तूष्णीं स्थिताः सर्वे बाष्पानन्दप्रपूरिताः ॥

யுஷ்மாகம் குரவஸ்தாவத் ஶிஷ்யம் ப்ராப்யேத்ருஶம் பரம் ।
கதவந்தோ மஹாத்மாநః க்ருதக்ருத்யா மஹாதிய: ॥

பவந்தோऽத்ர பவந்தஸ்து பாலயந்து ச நஃ ஸதா ।
ப்ராப்தேயம் ஶாரதாதேவீ மல்லிகார்ஜுந ஏவ ச ॥

சந்த்ரமௌளிர் மஹாதேவோ யாச்சாந்யா: ஸ்தலதேவதா:।
துங்கபத்ரா மஹாபாகா ரக்ஷந்து பவத: ஸதா ॥

நாராயண: ஸலக்ஷ்மீகோ ப்ரஹ்மா வாணீஸமன்வித: ।
ஶம்புர் கௌரீ விஶிஷ்டச்ச ரக்ஷந்து பவத: ஸதா ॥

வேதா: ஸாங்காச்ச சத்வாரோ ரக்ஷந்து பவத: ஸதா ।
ஶங்கராசார்யமுக்யாச்ச குரவ: ஶிவரூபிண: ॥

விச்வாமித்ரவஸிஷ்டாத்யா: ருஷயோ யே ச விச்ருதா: ।
ஸுரர்ஷயோ நாரதாத்யா: ரக்ஷந்து பவத: ஸதா ॥

இயம் ச வஸுதாதேவீ ஸூர்யாசந்த்ரமஸாவபி ।
தேவேந்த்ரமுக்யா தேவாச்ச ரக்ஷந்து பவத: ஸதா ॥

ஏவமாதீனி பத்ராணி வசாம்ஸ்யாஶீ:பதானி ச ।
உக்த்வா தூஷ்ணீம் ஸ்திதா: ஸர்வே பாஷ்பாநந்த
ப்ரபூரிதா: ॥

பட்டாபிஷேகத்திற்கு முகூர்த்தம் பார்த்துக்கொடுத்த ஜ்யோதிஷருக்கும், பட்டாபிஷேகத்தை எவ்விதக் குறைவு

மன்னியில் சிரத்தையாய்க் கவனித்து நடத்திவைத்த புரோஹிதர் ஸ்ரீ தேவரு பட்டருக்கும் பட்டு வஸ்திரங்கள் முதலானவை கொடுத்து ஸன்மானம் செய்யப்பட்டது. வெங்கடப்ப நாயக்கரிடமிருந்து வந்திருந்த கோபாலன் என்ற அரசாங்க அதிகாரிக்கும் விசேஷமாக மரியாதை செய்யப்பட்டது. ஸ்ரீமத் ஆசார்யாரவர்கள் எல்லாருக்கும் அனுமதி கொடுத்து அனுப்பிவிட்டு மடத்திற்குள் பிரவேசித்து ஸ்நாநம் ஆஹ்நிகாதிகளைச் செய்துகொண்டு விசேஷமாக லக்ஷ்மீநாராயணரை ஆராதித்து அவருக்கு நிவேதனம் செய்ததையே அன்று ஆஹாரமாகக் கிரஹித்தார்கள். இரவில் ஸ்ரீமடம் வெகு அழகாக தீபங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இவ்விதமாக அதிவிமர்சையாக பட்டாபிஷேக மஹோத்ஸவம் நடந்தது.

இந்த வைபவத்தையெல்லாம் நேரிலிருந்து பார்த்த பிறகுதான் தகப்பனார் அளகாசல பட்டருக்கு மனஸ் ஸமாதானம் ஏற்பட்டது. மாதாமஹியும் தன் தௌஹித்ரனுக்கு நடந்த இவ்வுத்ஸவத்தைக் கண்டு களித்தாள். அன்றிரவு ஸ்ரீ ஸ்வாமிகள் மடத்திற்குள் விசிராந்திக்காகப் போயிருக்கும் ஸமயம் பூர்வாசிரம பந்துக்களாகிய தகப்பனார் அளகாத்ரி பட்டர், வேங்கடாசல தீக்ஷிதர், யல்லாவதானிகள் என்ற அம்மான்கள், தம்பி பிரஹ்மா பட்டர், சிறிய தாயாரின் பர்த்தா என்ற முறையான கொண்டபட்டர், ஸஹோதரி புருஷன் என்ற முறையுள்ள கங்காதரபட்டரின் குமாரர், முதலானவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை தர்சனம் செய்து நமஸ்கரித்து தங்களுக்குள்ள ஸந்தோஷத்தைத் தெரிவித்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள்.

வெங்கடாசல தீக்ஷிதர் தன் பெண்ணுக்காக உத்தேசித்திருந்தவர் இவ்விதம் ஸன்யாஸம் பெற்று பீடாதிபதியாக ஆகிவிட்டபடியால், அவளுக்கு வேறு வரன் பார்க்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. அவளை இவர்

தம்பி பிரஹ்மா பட்டருக்கே கொடுத்துவிடுவதாக அவளுக்கு ஸமாதானம் சொல்லியும் கூட, உத்தேசம் செய்த விவாஹத்தைச் செய்யாமல் தாமஸித்ததினால் அளகாத்ரி பட்டருக்கு இருந்துவந்த அதிருப்தியின் காரணமாக இவராக இவ்விஷயத்தைப் பிரஸ்தாபிக்கப் பின்வாங்கினார். அளகாத்ரிபட்டரும் அதே காரணத்தினால் உதாஸீனமாய் இருந்துவிட்டார். சில நாட்கள் சென்று வெங்கடாசல தீக்ஷிதரே மனதைத் தைர்யப்படுத்திக்கொண்டு, ஏதோ தெய்வாதீனமாய் நடந்துபோய்விட்டதென்று ஸமாதானம் சொல்லி அளகாத்ரிபட்டரை திருப்தி செய்து, அவருடைய இளைய புத்திரர் பிரஹ்மா பட்டருக்கே தன் பெண்ணை விவாஹம் செய்துவைத்தார். இந்த தம்பதிகள் ஸ்ரீமடம் சென்று ஸ்ரீமத் ஆசார்யாரவர்களை நமஸ்கரித்தார்கள். இவ்விதம் விவாஹம் நடந்ததில் அவர்களும் வெகு திருப்தி யடைந்து ஆசீர்வதித்தார்கள்.

पार्वतीशंकरौ यद्वत् दाम्पत्यं ययतुः परम् ।
दाम्पत्यं तद्वदेवास्तु युवयोः प्रिययोः स्थिरम् ॥

पुत्रा वां बहवः सन्तु सौमनस्यमखण्डितम् ।
लक्ष्मीनृसिंहः कल्याणं दिशताद्वां कृपार्णवः ॥

பார்வதீஶங்கரௌ யத்வத் தாம்பத்யம் யயது: பரம் ।
தாம்பத்யம் தத்வதேவாஸ்து யுவயோ: ப்ரியயோ: ஸ்திரம் ॥

புத்ரா வாம் பஹவ: ஸந்து ஸௌமனஸ்யமகண்டிதம் ।
லக்ஷ்மீந்ருஸிம்ஹ: கல்யாணம் திஶதாத் வாம் க்ருபார்ணவ:

பிரஹ்மா பட்டரும் வேதத்தில் பாரங்கதராக ஆகி வியாகரணத்தில் பெரிய வித்வானாகவிருந்து பிதாவிற்கு சுச்ரூஷை செய்துவந்தார். மூத்த குமாரருக்கு சிருங்கேரி பீடாதிபத்ய ஸாம்ராஜ்யமும் இளையவருக்கு வெங்கடாசல

தீக்ஷிதரின் புத்திரியே பார்யையாகவும் ஏற்பட்டுவிட்டதில் அளகாத்ரிபட்டர் வெகு ஸந்தோஷமடைந்தார்.

प्राप्तं ज्येष्ठेन तद्राज्यं कनिष्ठेन च कन्यका ।
उभयस्मिन् उभाभ्यां च प्राप्तेऽमोदत तत्पिता ॥

ப்ராப்தம் ஜ்யேஷ்டேன தத் ராஜ்யம் கனிஷ்டேன ச கன்யகா ।
உபயஸ்மின் உபாப்யாம் ச ப்ராப்தேऽமோதத தத்பிதா ॥

இங்கு நடந்த பட்டாபிஷேக மஹோத்ஸவ வைபவங்களையெல்லாம் இங்கு வந்திருந்த அதிகாரி மூலமாகக் கேட்டுக்கொண்டு கௌதிமஹாராஜர் வெங்கடப்ப நாயக்கரும் வெகுவாக ஸந்தோஷப்பட்டார். வீரனயிருந்த அவ்வரசர் ஸ்ரீமடத்தில் விசேஷ அபிமானமுள்ளவரா யிருந்துவந்தபடியால், அவருடைய ஆதரவு ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு விசேஷமாக இருந்து வந்தது. இவ்விதமாக ஸ்ரீ ஸச்சிதாநந்த பாரதீஸ்வாமிகள் தக்ஷிணாம்னாய பீடாதிபதியாய் வியாக்யான ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து, அவர்களால் ஆராதிக்கப்பட்டுவந்த ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவரர் முதலான தேவதைகளுடையவும் பூர்வாசார்யார்களுடையவும் அனுக்ரஹத்தினால் இந்த பெரிய ஸம்ஸ்தான ஸாம்ராஜ்யத்தை நடத்திக்கொண்டு விளங்கி வந்தார்.



அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

உ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ விஜயம்

ஸ்ரீ தக்ஷிணாம்நாய
சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி
ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் – I
(கி. பி. 1622—1663)
அவர்களின் திவ்யசரித்திரம்

இரண்டாம் பாகம்

(பீடாரோஹணம் முதல் விதேஹகைவல்யம் வரை)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1965

# அட்டவணை

அத்யாயம் பக்கம்

# முகவுரை

ஸ்ரீராமசந்திரமஹோதயம் என்ற காவ்யத்தைப்பார்க்க வேண்டும் என்று ஸ்ரீ சிருங்கேரி மடம் புஸ்தக கோசத்தில் கவனித்தபோது இரண்டு சுவடிகள் அகப்பட்டதில் ஒன்று தான் ஸ்ரீராமசந்திர மஹோதயம் என்றும், மற்றொன்று "ஸ்ரீ ராமசந்திர மஹோதய காவ்ய கர்த்ரு ஸ்வரூப பிரகாசம்" என்றும் தெரிந்தது. அதில் காவ்ய கர்த்தா வான ஸ்ரீ ஸச்சிதாநந்த பாரதீ ஸ்வாமிகளின் வரலாறு விஸ்தாரமாகக் காணப்பட்டது. அதன் ஸாராம்சத்தை யாவது தமிழில் எழுதி பிரஸித்தப்படுத்த வேண்டுமென்று தோன்றி ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் விக்ஞாபனம் செய்த தில் அவர்கள் மிகக்கருணையுடன் அனுமதி கொடுத்தார்கள். பட்டாபிஷேகம் வரை முதல் பாகமாகவும், மேல் சரித்திரம் இரண்டாம் பாகமாகவும் பிரசுரிக்கப் பட்டிருக்கிறது. கிரந்தம் பூர்த்தியாக இல்லாததினால் கடைசியில் ஸ்வல்ப பாகம் குருவம்ச காவ்யத்திலிருந்து சேர்க்கும்படி ஏற்பட்டது. ஸம்ஸ்கிருத ரஸிகர்களுக்காக சில இடங்களில் மூல சுலோகங்கள் உதாஹரிக்கப்பட்டிருக் கிறது. ஸம்ஸ்கிருதம் தெரியாதவர்கள் அந்த சுலோகங் களை விட்டு விட்டே வாசித்தாலும் சரித்திரத்தின் போக்குக்கோ, ஸ்வாரஸ்யத்திற்கோ பங்கம் ஏற்படாது. இந்த மஹானின் பூர்வாசிரம சரித்திரத்தையறிந்துகொண்ட தற்காலம் பீடாதிபத்யம் வஹித்துவரும் ஸ்ரீ ஜகத்குரு அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் வெகு ஆர்வத்துடன் இச்சரித்திரத்தில் கண்ட ஹரித்ரா நதியும் வேகவதீ நதியும் ஸங்கமமாகும் ஸ்தலத்திற்கு 15—6—65ல் நேரில் விஜயம் செய்து அவ்விடத்திலுள்ள ஸ்ரீ முக்தீச்வராலயத்தை யும் தர்சனம் செய்து ஸங்கமத்திலும் வேகவதியிலும் ஸ்நாநாதிகளைச் செய்து ஸமீபத்திலுள்ள குன்றுவாரங் கோட்டை என்ற சன்னுப்பட்டி என்ற கிராமத்தில் ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவர பூஜை நடத்தி அக்கிராமத் தார்களிடம் ஸ்தலத்தின் மஹிமையை எடுத்துச்சொல்லி அனுக்ரஹித்துவிட்டு வந்தார்களென்பது குறிப்பிடத்தக்கது.

R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்.

# முன்னுரை

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளின் பீடாதிபத்ய காலத்தின் முதல் பகுதி மிகவும் குழப்பமான காலம். கலகம், சேனைகளின் நடமாட்டம், போர்கள், பஞ்சம், கொள்ளை, நாச வேலை இவைகள் தாண்டவ மாடின. முதலாம் வேங்கடப்பநாயக்கர் தன் பேரன் வீரபத்திரனை அரியணையில் வைக்கவேண்டுமென்று ஆவல் கொண்டு தன் தமையன் மகன் வீரனை சிறையிலடைத்து வைத்தான். ஆனால் அவன் இறந்ததும் கர்நாடகத்தில் உள்ள சிற்றரசர்கள் பல்லாளர்கள் ஒன்று சேர்ந்து வீரபத்திரனுக்கு விரோதமாகக் கலகம் செய்தார்கள். வீரனும் சிறையிலிருந்து வெளிவந்து கலகக்காரர்களின் உதவியைப் பெற்று 1630-ம் ஆண்டில் இக்கேரி ராஜ்யத்தின் பெரும் பகுதியை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டான். ஸதாசிவய்யா, ஸோடே, பிலிகி மன்னர்கள் வீரனுக்கு உதவியாக இருந்தார்கள். இத்தருணத்தைப் பயன் படுத்திக்கொண்டு கலச நாட்டின் சிற்றரசன் பைரவன், இக்கேரி ராஜ்யத்தில் சில பகுதிகளைப் பிடித்துக்கொண்டு சிருங்கேரி மடத்தைக் கொள்ளையடிக்க எல்லா முயற்சிகளையும் செய்தான். எங்கும் மூண்ட கலகங்கள் அடங்கி நாட்டில் அமைதி நிலவ ஆறு ஆண்டுகள் ஆயின. அதாவது 1635 வரை. இதுவரை நடந்த விருத்தாந்தங்கள்தான் இந்த நூலில் இடம் பெற்றிருக்கின்றன. மைசூர் அரசாங்க பிரசுரங்களிலிருந்து வேறு சில விஷயங்களைக் கவனிப்போம்.

இக்கேரிக்கு பலம் குன்றியதைக் கண்ட பீஜாபூர் (விஜயாபுரி) சுல்தான் தன் சேனாபதி ரந்தாவுலாகானை கன்னட ராஜ்ஜியங்களை ஜயிக்கும்படி அனுப்பினான். ரந்தாவுலாவுடன் சிவாஜியின் தகப்பன் சஹாஜி (ஷாஜி)யும் சென்றான். 1637 முதல் 1640 வரை மேற்கு கர்னாடகச் சீமை இவர்கள் வசம் சென்றது. 1637-ல் இக்கேரி நகரம் தகர்க்கப்பட்டது. வீரபத்திரன் சரண் புகுந்தான். தன் ராஜதானியை பெட்னூருக்கு (நகர்) மாற்றிக்கொண்டான்.

பல கோவில்களும் ஹிந்து ஸ்தாபனங்களும் அழிந்தன. இதற்கெல்லாம் உடந்தையாக சஹாஜி இருந்தது, அவன் தர்ம பத்னீ ஜீஜாபாயுக்கும், மகன் சிவாஜிக்கும் மன வேதனையை அளித்தது. இந்தக் கலவரத்தில் சிருங்கேரி ஸம்ஸ்தானத்துக்குச் சொந்தமான சில கிராமங்கள் பாது காப்பு இல்லாமல் பிறர்வசம் சென்றுவிட்டன. ஸ்ரீ ஸச்சிதா னந்த பாரதீ ஸ்வாமிகள் நிருபமூலமாக ரந்தாவுலாகானிடம் முறையிட்டார்கள். இதற்குப் பதிலாக ரந்தாவுலா ஒரு ஸந்நதை ஸமர்ப்பித்தான். "ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜ காசார்யரப்ப ஸ்ரீ சிருங்கேரி மடத ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமி ஸ்ரீ பாதங்களிக்கே ரந்தவுலாகானர ஸலாமு" என்று பணிவுடன் எழுதியிருக்கும் ஸந்நது மூலம் சிமோகா சீமையி லுள்ள மடத்துக் கிராமங்களை ஸ்ரீமடத்துக்குத் திரும்பக் கொடுக்கவேண்டுமென்று தன் அதிகாரிகளுக்கு உத்தரவு பிறப்பிவித்தான். அத்துடன் நில்லாமல் இந்த கிராமங்கள் விஷயமாக சிருங்கேரி ஸ்வாமிகளின் ஆக்ஞைகளைத் தன் அதிகாரிகள் நிறைவேற்றவேண்டும் என்றும் உத்தரவிட்டு தானும் ஸ்ரீ ஸ்வாமிகள் கோரும் உதவிகளை செய்யத் தயா ராக இருப்பதாகவும் தெரிவித்துக்கொண்டான். இது நடந்தது 1640-ம் ஆண்டில்.

1630ல் வீரபத்திரன் ஸ்ரீமடத்துக்கு ஏற்பட்டிருந்த சாவடி செட்டி கொப்பா கிராமசாஸனத்தை ஊர்ஜிதப் படுத்தி கொருகுடே (Gorugude) என்ற கிராமத்தையும் ஸ்ரீமடத்துக்கு அளித்தான். சிவப்ப நாயக்கரின் (1645-60) பணிகள் மிகவும் போற்றத்தக்கன. ஸ்ரீமடத்து நிலங் களை பலர் துராக்கிரமம் செய்து அனுபவித்து வந்தார்கள். அவைகளை மறுபடியும் ஸ்ரீமடத்துக்குச்சேரும்படி செய்தான். அக்கிரஹாரங்களையும் சீர்படுத்தி, தர்மங்கள் ஆலய நிர்மாணங்கள், பிரதிஷ்டைகள் இவைகள் நேர்மையுடன் நடந்துவர உதவி அளித்தான். ஹளே ஹொன்னூர் (Hale Honnur) சீமையில் சில கிராமங்களையும் தானம் செய்தான். சிவப்பன் உதவியைக்கொண்டு ஸ்ரீமடத்து நிலங்கள் மறுபடியும் அளக்கப்பட்டன. தீர்வையும்

நிஷ்கரிக்கப்பட்டது (Sivappa's Survey and Settlement 1653). ஸம்ஸ்தானத்தின் வருஷ வருமானம் 12,000 வராகனுக உயர்ந்தது. இனும்தார்களின் பேரிஜ் தீர்மானிக்கப்பட்டது. எல்லா வசூல்களையும் ஸம்ஸ்தான அதிகாரிகளே செய்யும்படி தீர்மானிக்கப்பட்டது. 1662ல் பத்ரப்ப நாயக்கர் 460 வராகன்கள் பெருமானமுள்ள கரேஹல்லி (Karehalli), கவதுரு (Gavaturu) கிராமங்களை சிருங்கேரிக்குச் சேரும்படி செய்தான்.

மற்ற சிற்றரசர்களும் தங்கள் பணியில் தயங்கவில்லை. தரிக்கேரி ஹனுமப்ப நாயக்கர் தேவபுரம், தண்டூர் (Dandur) கிராமங்களை சிருங்கேரிக்கு ஏகபோகமாக அளித்தான். ஸ்ரீரங்கபட்டணம் மன்னன் கண்டீரவநரஸராஜனும் ரத்னங்களில் செதுக்கப்பட்ட பூஜா மூர்த்திகளையும், பல அரிய காணிக்கைகளையும் ஸமர்ப்பித்தான்.

இந்த ஜகத்குருவின் ஆட்சி காலத்தில் கூடலி மடத்தில் நடந்த ஸம்பவங்கள் 88–89ம் பக்கங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இதற்கு முந்தியே பீஜாபூர் அதிகாரிகளிடம் வஞ்சகமாகப்பேசி சிருங்கேரிக்குச் சொந்தமான சில கிராமங்களை கூடலி மடத்து ஸ்வாமி கைப்பற்றியிருந்தார். வீரபத்ரநாயக்கர் இதை விளக்கியதன் மூலம், பீஜாப்பூர், சுல்தானின் ஸ்தல அதிகாரிகள் அந்த கிராமங்களை சிருங்கேரிக்கு மறுபடியும் வாங்கிக்கொடுத்தார்கள்.

73–74ம் பக்கங்களில் ஒரு ஸந்தேகம் குறிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் பீடாதிபத்யம் பெற்ற பிறகு மதுரைக்குச் சென்றதின்மூலம் "மீனுக்ஷி சதகம்" எழுதப்பட்டதா, அல்லது பால்யத்தில் தாங்கள் பார்த்தவைகளை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு எழுதப்பட்டதா என்பதுதான் பிரச்னே. இது விஷயமாக ஒரு சர்ச்சை அவசியம். 1639க்குப் பிந்திய சம்பவங்கள் இந்த நூலில் தெளிவாகக் காணவில்லை. இந்த நூலைப் பெரும்பாலும் ஆதாரமாகக் கொண்டுதான் "குருவம்ச காவ்ய"த்தில் 10, 11வது ஸர்க்கங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. விசேஷ

மாக சிவப்பநாயக்கர் காலத்தின் விருத்தாந்தங்கள் இங்கு எழுதப்படவில்லை. இந்த அரசனின் ஆட்சி காலத்தில் ஸ்ரீ மடத்துக்கு யாதொரு தொந்தரவும் ஏற்படவில்லை. நாயக்கர் உதவியால் ஸ்ரீ மடத்துக்கு ஏற்பட்ட கடன்கள் தீர்ந்துவிட்டன. பல கிராமங்களும் புதிதாகக் கிடைத்தன. பொருள் நிலைமை சீராகவே அமைந்துவிட்டது. இந்த இருபது ஆண்டு காலத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் யாத்திரை செய்யாமல் மடத்திலேயே இருந்திருப்பாரா? ராமேச்வரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் பூஜை கட்டளைகளையும், யாத்திரிகர்களுக்கு பல சௌகரியங்களையும் சிவப்ப நாயக்கர் செய்தார். மதுரையின் வரலாற்றையும் சற்று கவனிப்போம். 14வது நூற்றுண்டில் முகம்மதிய அரசர்கள் மதுரையை ஆண்டார்கள். அவர்கள் மிகவும் துஷ்டர்கள். கோவிலை இடித்து பூஜை நடக்காமல் செய்துவிட்டார்கள். ஸ்ரீ மீனாக்ஷி விக்ரஹமும் வெளியூருக்குக் கொண்டுபோகப் பட்டது. தமிழ் நாட்டிலேயே இது மிகவும் சோககரமான காலம். விஜயநகர வீரர்கள் குமாரகம்பணனும் வீரசாவணனும் மதுரையை 1371ல் மீட்டு ஹாஸன்கங்கு (Hassan Gangu) என்ற முஸ்லீம் மன்னனை வதைத்து, மதுரையை விஜயநகர ஆட்சிக்குக் கொண்டுவந்தார்கள். காஞ்சீ, ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் செய்ததுபோலவே கம்பணன் ஸ்ரீ மீனாக்ஷீ சுந்தரேச்வர மூர்த்திகளுக்கு வெகுகாலம் நின்று போயிருந்த பூஜை முதலியவைகளை சரிவர நடக்கும்படி செய்தான். கோவிலை மறுபடியும் நிர்மாணம் செய்யும் வேலையை நாயக்க மன்னர்கள் ஏற்றுக்கொண்டார்கள். முதல் நாயக்க மன்னன் விச்வநாத நாயக்கர் காலத்தில் அவரும் அவர் அமைச்சர் அரியநாதனும் பல பாகங்களைக் கட்டி ஆயிரக்கால் மண்டபத்தை முடித்தார்கள். முத்து வீரப்ப நாயக்கர் (1609–1623) ஆட்சிதான் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் பால்யபர்வம். அவர்கள் மதுரை சீமையில் பிரம்மசாரியாக இருந்த காலம் இது. இப்போது கம்பத்தடி மண்டபம் முடிந்து, வஸந்தராய மண்டபமும் பூர்த்தியாய்விட்டது. திருமலைநாயக்கர் (1623–59) காலம், ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் பீடாதிபத்ய காலம்,

அமைச்சர் மஹான் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் விருப்பப்படி, மன்னன் புதுமண்டபம் முதலிய பாகங்களைக் கட்டிப் பல விசேஷ திருப்பணிகளைச் செய்தான். இங்குள்ள ஸகல தேவதாப் பிரதிஷ்டை, நித்ய நைமித்திக பூஜா விதிகள், உத்ஸவங்களின் கிரமங்கள், கோவில் ஆர்ஜித முறைகள் எல்லாமே "ஹாலாஸ்ய மாகாத்மியம்" முதலான க்ஷேத்ர புராணங்களையும் ஆகம விதிகளையும் தழுவியே ஸ்ரீ தீக்ஷிதரால் ஏற்பாடு செய்யப்பட்டன. ஸ்ரீ ஸ்வாமிகள் வர்ணித்திருக்கும் ஆலயச் சிறப்பு, உத்ஸவங்கள், வாகனங் கள், பூஜாக் கிரமங்கள் ஆகியவை எல்லாம் ஸ்ரீ தீக்ஷிதர் நியமனப்படி நடந்தவைகளாகத்தான் இருக்கவேண்டும். இவ்வளவு விஸ்தாரமாகவும் கிரமமாகவும் இதற்குமுன் கோவிலில் நடக்கவில்லை. மற்றும் சிருங்கேரி ஜகத்குருக்கள் பலர் தங்கள் விஜய யாத்திரைகளில் திருப்பதி, காஞ்சி, சிதம்பரம், ஸ்ரீரங்கம், மதுரை, ராமேச்வரம் முதலிய க்ஷேத்ரங்களுக்குச் சென்றிருப்பதாகக் காணப்படுகிறது. ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதிகளும் திருப்பதி சென்றிருக்கக் கூடும். ஸ்ரீ வெங்கடேசனை ஸ்துதித்து ஒரு சுலோகமும் இந்த நூலில் இருக்கிறது (பக். 79). ஸ்ரீ மடத்திலுள்ள மஹாராஷ்டிர தஸ்தாவேஜிகளிலிருந்து பாஜீ ராவ் பள்ளாள் பிரதான் (பேச்வா பாஜீ ராவ் I) ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸேது யாத்திரையில் உதவியளிக்கும்படி தன் அதிகாரிகளுக்கு நிருபம் அனுப்பியதாக அறிகிறோம். இந்தக் காரணங்களைக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகள் சிவப்பநாயக்கர் காலத்தில் மதுரைக்கு விஜயம் செய்தார்கள் என்று தீர்மானிக்கலாம்.

ஸ்ரீஸ்வாமிகளுடைய ஒப்பற்ற ஆத்மசக்தியும் தபோ பலமும் சிருங்கேரி மடத்தைக் காப்பாற்றின. இதே சக்தி யின் பிரபாவம்தான் பரஸ்பரம் விரோதிகளான மன்னர்கள், பீஜாபூர் முஸ்லீம் அதிகாரிகள்கூட, ஸ்ரீமடத்தின் சொத்துக் களை ரக்ஷித்தும், கூட்டியும் கொடுத்தார்கள். நாட்டுக்கு ஆபத்து வந்தால் மஹான்களின் தபோபலம் எவ்விதம் அந்த ஆபத்துக்களை நீக்கிவிடும் என்பதற்கு வேறு உதாஹரணம் வேண்டுமா? ஸ்ரீ ஸ்வாமிகளின் வைதுஷ்யம்

ஒப்பற்றது. சாஸ்திரவாதம் அவர்களுக்கு ஓர் விளையாட்டுக்கூடமாக இருந்தது. உயர்ந்த கவிதாசக்தியும் கலைகளில் ஆர்வமும் கூடி இருந்தன. சங்கீதம், நாடகம் ஆகிய கலைகள் இக்கேரி சீமையில் எப்படி போஷிக்கப் பட்டன என்று பீட்ரோ தெல்ல வல்லே (Pietro della Valle) என்ற இத்தாலிய யாத்ரிகரின் குறிப்பில் (*Travels*) படிக்கிறோம். இக்கலைகள் ஸ்ரீமடத்திலும் போஷிக்கப் பட்டன. ஆனால் ஒரு வித்தியாசம். அரண்மனையில் கலை மன்னர், பிரபுக்கள் இவர்களின் ஸந்தோஷத்துக்காக. ஸ்ரீமடத்திலேயோ இவை தேவதாராதனைக்கு அங்க மாகவே மிளிர்ந்தன. ஸ்ரீஸ்வாமிகள் ஏற்படுத்தின பலஉத்ஸ வங்களுக்கு இவை அங்கமாயின. ஸ்ரீ பவானீ அம்பிகைக்கு அழகாக ஆலயம் கட்டிவைத்து சிலையிலேயே தயாரிக்கப் பட்ட மூர்த்தியின் மூக்கு காதுகளில் ஆபரணங்கள் போடும் படியாக துவாரங்கள் அமைத்தது, ஸ்ரீஸ்வாமிகளுக்கு சிற்பக் கலையில் உள்ள ஆர்வத்தை எடுத்துக்காட்டுகிறதல்லவா? கூடலியிலும் "ராமேச்வர" ஆலயம் இவர்களால் நிர்மாணிக்கப்பட்டது. (பக் 89)

ஸ்ரீ மடம் 17ம் நூற்றாண்டில் எப்படி காட்சியளித்தது என்பதை இந்த நூல் விளக்குகிறது. நாலு கட்டு உள்ள கட்டடம், அபூர்வமான சில்ப வேலைகள், கண்ணைக்கவரும் ஓவியங்கள், விஸ்தாரமான மேல்மாடி, போஜனசாலைகள் முதலியன. (பக் 55-56)

நிகரில்லாத ஆத்ம நிஷ்டை, தபோ பலம், யோக பலம், ஸகலவித்யா, மந்திர தந்திர, தர்சன சாஸ்திரங்களில் நிஷ்ணாதனதை, வாக் விலாஸம், கவிதா ஸம்பத்து, கலை ஆர்வம், நிர்வாகசக்தி, தயை இவையெல்லாம் ஒன்றுசேர்ந்து மூர்த்தீகரித்த ஆதர்ச புருஷர்தான் இந்த மஹான்.

"தம்முடைய வாக் சக்தியால் துர்வாதிகளையும், தேஜஸ்ஸினால் சூரியனையும், காம்பீர்யத்தால் ஸமுத்திரத் தையும் ஜயித்தவர். வாதத்தில் ஸிம்ஹம், தானத்தில் உதாரர், பிரவசனத்தில் ஆதிசேஷன்" என்றெல்லாம்

தங்கள் குருவை சிலாகித்திருக்கிறார்கள். இவையெல்லாம் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளுக்கும், ஏன்? சிருங்கேரி சாரதா பீடாதிபதிகள் எல்லோருக்கும் பொருந்தும். இப்போது நம்மை அனுக்ரஹிக்கும் மஹாஸ்வாமிகளிடமும் இந்த குணங்களை நாம் பார்க்கவில்லையா ?

மஹத் ஆசிரயம் என்பது இரண்டு விதம். ஒன்று அவர்கள் ஸந்நிதியில் இருந்துகொண்டு கைங்கர்யம் செய்வது. மற்றொன்று அவர்களின் திவ்ய குணங்களை தியானித்து அவைகளில் ஈடுபடுவது. இந்த இரண்டாவது முறையில் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகளின் அருள் நமக்குக் கிடைக்கும் படி உபகரிக்க இந்த நூலைப் பூர்த்தி செய்து நமக்கு அளித்திருக்கும் மான்ய சகோதரர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்கு மறுபடியும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். இந்த பாக்கியம் நமக்குக் கிட்டியது நம் ஜகத்குரு மஹா ஸன்னிதானத்தின் அருளாலல்லவா? அவர்களின் திவ்ய சரண கமலங்களை ஸ்மரித்துவிட்டு, **सद्योऽनिष्टविघातिनी** (பக். 60)–இப்போதே நம் அநிஷ்டங்களைப் போக்கும் ஜகன்மாதாவை ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதிகள் அருளியிருக்கும் சுலோகம் ஒன்று மூலம் ஸ்மரிப்போம்.

कल्याणीं कमनीयरत्नखचितां भूषां वहन्तीं भृशं
कल्पानोकहपुष्पसंभृतकचां कामेश्वराङ्कस्थिताम् ।
वन्दे श्रीपरदेवतां परिजनानन्दौघसंदायिनीं
संस्तौम्याकलयामि संततममूमिष्टार्थसिद्ध्यै मुहुः ॥

திருச்சிராப்பள்ளி,
1965 ஆகஸ்டு 1.

K. R. வேங்கடராமன்,
'ஸ்ரீ சங்கர க்ருபா' ஆசிரியர்.



ஸ்ரீ தக்ஷிணாம்நாய ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி

ஸ்ரீ ஜகத்குரு

**ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள்**

உ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீ ஸச்சிதாநந்தபாரதீ விஜயம்



## (இரண்டாம் பாகம்)

### அத்யாயம் 1

## இக்கேரி விஜயம்

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ ஸ்வாமிகள் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு பீடாதிபத்யத்தை ஏற்றுக்கொண்டவுடன் ஸ்ரீமடம் நிர்வாஹத்திற்காக தனக்கு நம்பிக்கையுள்ள அதிகாரிகளை நியமனம் செய்துகொண்டு அவர்கள் மூலமாக ஸகல கார்யங்களையும் நடத்திவந்தார். ஸ்ரீ வித்யாசங்கராலயத்தில் தன் குருநாதரான ஸ்ரீ அபிநவ நரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் மிகவும் சிரமப்பட்டு வெகு அழகாக சிகரம் ஏற்படுத்தியிருந்தும் அதில் கலசங்கள் ஸ்தாபனம் செய்ய வேண்டும் என்று அவர் நினைத்திருந்ததை பூர்த்திசெய்ய வேண்டும் என்ற ஸங்கல்பம் ஏற்பட்டது. உடனே அதற்கு வேண்டிய ஸகல ஏற்பாடுகளையும் செய்து அடுத்த மாகமாஸத்தில் சுபதினத்தில் கிரமப்படி ஸம்ப்ரோக்ஷணம், பிராஹ்மண ஸந்தர்ப்பணாதிகளைச் செய்து ஆறு ஸ்வர்ண கலசங்களை ஸ்தாபித்தார். எல்லாம் குருநாதரின் பிரபாவம் என்றே பாவித்தார்.

रचिते शिखरे पूर्णे स्वीयैर्गुरुभिरञ्जसा ।
देवसद्मनि मेवामे विद्याशंकरयोगिनाम् ॥

संप्रोक्षणं कारयित्वा बह्वन्नं बहुदक्षिणम् ।
शातकुम्भमयाः श्रीमत्कलशाः षण्महोज्वलाः ॥

स्थापिता माघमासे च सुमुहूर्ते गुणाधिके ।

कलशान् स्थापयित्वाऽत्र धर्मं तत्प्रभवं परम् ।
गुरूणां पदयोरेव मन्वानः स महामतिः ॥

ரசிதே ஶிகரே பூர்ணே ஸ்வீயைர் குருபிரஞ்ஜஸா l
தேவஸத்மனி மேர்வாபே வித்யாஶங்கர யோகிநாம் ll

ஸம்ப்ரோக்ஷணம் காரயித்வா பஹ்வந்நம் பஹூதக்ஷிணம் l
ஶாதகும்பமயா: ஸ்ரீமத்கலஶா: ஷண்மஹோஜ்வலா: ll

ஸ்தாபிதா மாகமாஸே ச ஸுமுஹூர்த்தே குணாதிகே l

கலஶான் ஸ்தாபயித்வாऽத்ர தர்மம் தத்ப்ரபவம் பரம் l
குரூணாம் பதயோரேவ மந்வாந: ஸ மஹாமதி: ll

இவ்விதமாக பீடாதிபத்யம் நடத்திக்கொண்டிருக்கையில் ஒரு வருஷகாலம் சென்றதும், ஸ்ரீமடம் நிர்வாஹ விஷயத்தில் பலவிதமாக ஆதரவு கொடுத்துவரும் வயதானவரும் கௌதி மஹாராஜனுமான வெங்கடப்ப நாயக்கரை நேரில் கண்டு ஆசீர்வதித்துவர வேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. அப்படியே அவ்வரசனின் ராஜதானியான 'இக்கேரி' என்ற நகரத்தை உத்தேசித்துப் புறப்பட்டார். அதிகாரிகள், வித்வான்கள், கவிகள், ஸேவகர்கள் மற்றும் ஜனங்கள் சூழ சத்திரசாமராதி ஸகல பிருதாவளிகளுடன் பல்லக்கில் ஏறி, கிரமமாக பல்லாரி நகரம், ஸ்ரீகிராமம் முதலான பிரதேசங்களைக் கடந்து, துங்கபத்ரா நதியில் வேறு ஒரு நதி சேருமிடத்தில் பீமஸேனனால் பத்து யானை உயரமாகக் கட்டப்பட்டிருக்கும் கல்லணையை அடைந்தார். பல்லக்கையும் படகில் ஏற்றி படகோட்டிகள் அந்த நதியைக் கடந்து அக்கரை சேர்த்தார்கள். அங்கிருந்து துங்கபத்ரையைப் பார்க்கும்போது ஸமுத்திரம் போலவே தோன்றிற்று. சுற்றி அடர்ந்த மரங்கள் ஏராளமாயிருந்தது வெகு அழகான காக்ஷியை அளித்தது. மறு கரையில் பீமஸேனனால்

பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் பீமேசுவரருடைய ஆலயம் சென்று பரமசிவனை தர்சனம்செய்தார். பிறகு அணைக்கு ஸமீபம் போய், பெரிய பெரிய சிலைகளை விளையாட்டாகவே பிமஸேனன் அதில் வைத்துக் கட்டியிருப்பதையும், பாறைகளுக்கு நடுவில் நதி வேகமாய்ப் பிரவஹிக்கும்போது ஏற்படும் அழகான நுரைகளையும் வெகு ஆனந்தமாய் பார்த்துக் கொண்டிருந்தார். இந்த பவித்திரமான க்ஷேத்திரத்தில் பரமசிவனையோ மஹாவிஷ்ணுவையோ ஆராதனம் செய்தால் கைலாஸாதி லோகங்கள் கிடைக்கும். இந்தவிடத்தில் அநேக மஹர்ஷிகள் தபஸ் செய்து ஸித்தியடைந்திருப்பதால் இதற்கு "முனிபிருந்தம்" என்ற பெயரும் உண்டு.

तुङ्गभद्रातटे तत्र कुर्वन् हरिहरार्चनम् ।
सर्वपापविनिर्मुक्तः शिवविष्ण्वोर्महोदयौ ।
लोकौ स समवाप्नोति ब्रह्मलोकं च गच्छति ॥

यथाशक्त्या तपः कुर्वन् मानवो नियतेन्द्रियः ।
इह कामानवाप्नोति नाकपृष्ठे च पूज्यते ॥

तपोऽतप्यन्त मुनयो रम्यं तटमुपाश्रिताः ।
क्षेत्रं तन्मुनिबृन्दाख्यं अभूल्लोकेऽपि विश्रुतम् ॥

துங்கபத்ராதடே தத்ர குர்வன் ஹரிஹரார்சனம் ।
ஸர்வபாப விநிர்முக்த: ஶிவவிஷ்ண்வோர் மஹோதயௌ ।
லோகௌ ஸ ஸமவாப்நோதி ப்ரஹ்மலோகம் ச கச்சதி ॥

யதா ஶக்த்யா தப: குர்வன் மாநவோ நியதேந்த்ரிய: ।
இஹ காமானவாப்நோதி நாகப்ருஷ்டே ச பூஜ்யதே ॥

தபோzதப்யந்த முநயோ ரம்யம் தடமுபாச்ரிதா: ।
க்ஷேத்ரம் தன் முநிப்ருந்தாக்யம் அபூத் லோகேzபி
விச்ருதம் ॥

இந்த மஹாபுண்ய ஸ்தலத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் கிரமப்படி ஸ்நானம்செய்து ஆஹ்நிகங்களையும் ஜபங்களையும் பூஜைகளையும் செய்துகொண்டார். கூடவந்த ஸகல பரிவாரஜனங்களும் ஸ்நாந போஜனாதிகளை செய்தானபிறகு, ஸ்ரீ ஸ்வாமிகள் மறுபடியும் ஆலயம் சென்று பீமேசுவரரை தர்சனம் செய்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டார்.

அநேக கிராமங்களையும் வயல்களையும் தோப்புகளையும் கடந்து மூன்று க்ரோச தூரம் சென்றபிறகு, துர்யோதனனால் கட்டப்பட்டு தற்காலம் வெங்கடப்ப நாயக்கரின் ஸ்வாதீனத்தில் இருந்துவந்த அழகான கோட்டையைக் கண்டார். அக்கோட்டை அதிகாரிகளாலும் அவ்வூர் மஹாஜனங்களாலும் வெகு ஆதரவுடன் எதிர்கொண்டு அழைக்கப்பட்டு, ஏரிக்கரை வழியாக அங்குள்ள ஸ்ரீமடத்திற்குச் சென்று தங்கினர். கோட்டைத் தலைவரால் விசேஷமாக யாவருக்கும் ஸத்காரம் செய்யப்பட்டது. அவர் ஆந்திரராகவுமிருந்தபடியால் அவருடன் ஸ்ரீ ஸ்வாமிகள் வெகு ஸந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, அங்கிருந்து பிரயாணமாகப் புறப்பட்டார்.

அநேகம் காடுகளையும் மலைகளையும் மேடு பள்ளங்களையும் தாண்டி, ஆங்காங்கு ஸௌகர்யம்போல் தங்கி பூஜை போஜனாதிகளை முடித்துக்கொண்டு மறுபடியும் புறப்பட்டு கிரமமாக இக்கேரிக்கு இரண்டு க்ரோசம்வரை வந்துசேர்ந்தார். இவ்விஷயம் தெரிந்து, உடனே மஹாராஜன் தக்க அதிகாரிகளையும் வித்வான்களையும் மற்றும் பிராஹ்மணர்களையும் எதிர்கொண்டு அழைத்துவர அனுப்பினர். அவர்கள் உடனே அவஸர அவஸரமாக வந்து வெகு பக்தியுடன் ஸ்ரீமத் ஆசார்யார் பாதங்களில் தேங்காய்கள் ஸமர்ப்பித்து வந்தனம் செய்தார்கள்.

त्वरया तेऽभिजग्मुश्च सर्वे ते मुदितान्तराः ।
आगत्य प्रणताः सर्वे नारिकेलनिवेदकाः ॥

த்வரயா தேஜபிஜக்முச்ச ஸர்வே தே முதிதாந்தரா: ।
ஆகத்ய ப்ரணதா: ஸர்வே நாரிகேளநிவேதகா: ॥

பிறகு, அழைக்கவந்தவர்களாலும் தன் பரிவாரங்களாலும் சூழப்பட்டு, ஸகல வாத்யகோஷ சங்கநாதத்துடன் பல்லக்கில் அவ்விரண்டு க்ரோசதூரமும் சென்று பட்டணத்தில் பிரவேசித்து, அந்த விசாலமான நகரத்திலேயே ஒரு க்ரோசம் சென்று, எல்லா வீதிகள் வழியாக அவ்வூரிலுள்ள அகோரேசுவரர் ஆலயம் சென்றார். அங்குள்ள மூர்த்தி தன் முப்பத்திரண்டு கைகளிலும் பலவித ஆயுதங்களை ஏந்திக்கொண்டு மிகவும் பயங்கரமான ரூபத்துடன் விளங்கியபோதிலும் பக்தர்களுக்கு எப்பொழுதும் க்ஷேமத்தையே கொடுப்பவர். வெங்கடப்ப நாயக்கரால் விசேஷமாக ஆராதிக்கப்பட்டவர். அவ்வாலயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் நமஸ்காரம், ஸ்தோத்திரம், தியானம் முதலியவைகளைச் செய்துகொண்டு ப்ரஸாதம் பெற்று வெளியில் வந்து பிரதக்ஷிணமாக அகிலாண்டேசுவரீ ஸன்னிதி சென்று ஸேவித்து அங்கும் ப்ரஸாதம் பெற்றுக்கொண்டார். அகோரேசுவரரின் ஆகிருதிக்குத் தக்கபடியே அம்பிகையும் நல்ல உயரமான ஆகிருதியுடையவள் என்பது குறிப்பிடத்தக்கது. இரண்டு ஆலயங்களிலும் தர்சனம் செய்தபிறகு பல்லக்கில் ஏறி குளக்கரையிலுள்ள கடைவீதி வழியாக தன் மடம் வந்துசேர்ந்தார்.

अघोरेशं महान्तं तु द्वात्रिंशद्भुजसंयुतम् ।
नानायुधविशिष्टं च भीमरूपं महेश्वरम् ॥

उन्नतं विस्तृतं चापि सर्वाभरणभूषितम् ।
प्रतिष्ठितं विधिज्ञैश्च शिलागारे सुविस्तृते ॥

पूज्यमानं च विभवैः वेङ्कटक्ष्माभृता मुदा ।
सर्वदुष्टविघातं च सर्वज्वरविघातकम् ॥

सर्वशत्रुविघातं च भक्तेभ्यश्चाभयप्रदम् ।
नत्वा स्तुत्वा हृदा ध्यात्वा नातृप्यद्यतिकेसरी ॥

प्रसादं प्रतिगृह्यासौ सच्चिदानन्दभारती ।
प्रदक्षिणं प्रकुर्वाणो वीक्ष्यमाणोऽखिलैर्जनैः ॥

हंसगत्याऽव्रजच्छ्रीमान् अखिलाण्डेश्वरीगृहम् ।
उन्नतां पृथुलाकारां अघोरेशानुरूपिणीम् ॥

सर्वमङ्गलमाङ्गल्यां शिवां सर्वार्थसाधिकाम् ।
शरण्यां त्र्यम्बकां देवीं नतो नारायणीं मुहुः ॥

அகோரேஶம் மஹாநந்தம் து த்வாத்ரிம்ஶத்புஜ ஸம்யுதம் ।
நாநாயுத விஶிஷ்டம் ச பீமரூபம் மஹேச்வரம் ॥

உந்நதம் விஸ்த்ருதம் சாபி ஸர்வாபரண பூஷிதம் ।
ப்ரதிஷ்ட்டிதம் விதிக்ஞைச்ச ஶிலாகாரே ஸுவிஸ்த்ருதே ॥

பூஜ்யமாநம் ச விபவை: வேங்கடக்ஷ்மாப்ருதா முதா ।
ஸர்வதுஷ்ட விகாதம் ச ஸர்வஜ்வர விகாதகம் ॥

ஸர்வஶத்ரு விகாதம் ச பக்தேப்யச்சாபயப்ரதம் ।
நத்வா ஸ்துத்வா ஹ்ருதா த்யாத்வா நாத்ருப்யத்
யதி கேஸரீ ॥

ப்ரஸாதம் ப்ரதிக்ருஹ்யாஸௌ ஸச்சிதானந்த பாரதீ ।
ப்ரதக்ஷிணம் ப்ரகுர்வாணோ வீக்ஷ்யமாணோzகிலைர் ஜனை: ॥

ஹம்ஸகத்யாzவ்ரஜத் ஸ்ரீமான் அகிலாண்டேச்வரீ க்ருஹம் ।
உந்நதாம் ப்ருதுலாகாராம் அகோரேஶானுரூபிணீம் ॥

ஸர்வ மங்கள மாங்கள்யாம் ஶிவாம் ஸர்வார்த்த ஸாதிகாம் ।
ஶரண்யாம் த்ர்யம்பகாம் தேவீம் நதோ நாராயணீம்
முஹு: ॥

அன்று ராத்திரி மடத்தில் தங்கிவிட்டு மறுநாள் ஸ்ரீ ஸ்வாமிகள் ஸகல ராஜ சின்னங்களுடன் பல்லக்கில் மஹாராஜனின் ஸபைக்கு விஜயம்செய்தார். சில சுலோகங்களால் அரசனை ஆசீர்வதித்து ஸன்மானம் செய்துவிட்டு அழகாக ஒரு பிரஸங்கம் செய்தார். அதைக் கேட்டு அரசனும் அங்குள்ள வித்வான்களும் வெகு ஸந்தோஷத்தையும் ஆச்சர்யத்தையும் அடைந்தார்கள். வெங்கடப்ப நாயக்கர் வெகுநாளாக ராஜ்யபாரம் வஹித்து வந்திருப்பதுடன் எல்லாம் அறிந்தவர், வீரர், கீர்த்திமான், வித்வான்களிடத்தில் விசேஷ அபிமானமுள்ளவர், நல்ல ரஸிகர்; தானும் நல்ல வித்வான். மேற்கு ஸமுத்திரம் முதல் பத்ராநதீ வரையிலும், ஸுப்ரஹ்மண்ய க்ஷேத்திரத்திலிருந்து கோகர்ணம் வரையிலும் உள்ள செழிப்பான பிரதேசத்திற்கு அதிபதி. அங்கு தங்கம், பலவித தான்யங்கள், பாக்கு, ஏலக்காய், மிளகு முதலியவை ஏராளமாகக் கிடைக்கும். அவருடைய ஆக்ஞை ஸுக்ரீவாக்ஞைக்கு மேல்பட்டது. அவருடைய ராஜ்யத்தில் திருடர்கள் பயமே கிடையாது.

पण्डितः पण्डिताराध्यः प्रतापान्मण्डलेश्वरः ।
पश्चिमाम्बुधिमारभ्य भद्रान्ताया भुवस्तथा ॥

सुब्रह्मण्यपदारम्भात् श्रीगोकर्णभुवोऽवधि ।
हिरण्यं पुष्कलं यत्र धान्यं बहुविधं तथा ॥

पूगीफलानां प्रभवः एलाप्रभव एव च ।
मरीचीप्रभवश्चापि यस्मिन् राज्ये प्रतिष्ठितः ॥

सुग्रीवाज्ञाधिकाज्ञश्च यस्याज्ञा न विहन्यते ।
तस्करेभ्यो भयं नास्ति तादृशाज्ञाधरो नृपः ॥

பண்டித: பண்டிதாராத்ய: ப்ரதாபான் மண்டலேச்வர: ।
பச்சிமாம்புதிமாரப்ய பத்ராந்தாயா புவஸ்ததா ॥

ஸுப்ரஹ்மண்ய பதாரம்பாத் ஸ்ரீகோகர்ணபுவோऽவதி ।
ஹிரண்யம் புஷ்கலம் யத்ர தான்யம் பஹுவிதம் ததா ॥

பூகீபலாநாம் ப்ரபவ: ஏலாப்ரபவ ஏவ ச ।
மரீசீ ப்ரபவச்சாபி யஸ்மின் ராஜ்யே ப்ரதிஷ்ட்டித: ॥

ஸுக்ரீவாஜ்ஞாதிகாஜ்ஞச்ச யஸ்யாஜ்ஞா ந விஹந்யதே ।
தஸ்கரேப்யோ பயம் நாஸ்தி தாத்ருசாஜ்ஞாதரோ ந்ருப: ॥

இவ்வளவு வீரராகவும் பண்டிதராகவும் செல்வாக்கு உள்ளவராகவுமிருந்த இந்த மஹாராஜன் ஸ்ரீமத் ஆசார்யாரிடம் மிகவும் ஈடுபட்டு, வெகு ஸந்தோஷத்துடன் விலை மதிக்க முடியாத தங்க ஜரிகை போட்டிருந்த இரண்டு பட்டு வஸ்திரங்களை ஸமர்ப்பணம்செய்து, தானும் கொஞ்சதூரம் கூடவே வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை இருப்பிடம் அனுப்பினர். அங்கு ஸ்ரீ ஸ்வாமிகளும் வெகு ஸந்தோஷமாக தேவதாராதனுதிகளைச் செய்துகொண்டு ஸகல ஜனங்களாலும் பூஜிக்கப்பட்டு இரண்டு வாரங்களுக்குமேல் தங்கும்படி ஏற்பட்டது. அரசனைத்தவிற அநேகர்களும் பிக்ஷை முதலிய ஸத்காரங்கள் செய்தார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட நினைத்தபோது மஹாராஜனே ஸ்ரீமடத்திற்கு நேரில் வந்து வெகுநேரம் லௌகிகமாயும் சாஸ்திர விஷயமாயும் ஸம்பாஷணம் செய்துகொண்டிருந்தார். ஸ்ரீ ஸ்வாமிகளை விட்டுப் பிரிய மனமில்லாமல் தயங்கினுர்.

பிறகு மூகாம்பிகா க்ஷேத்திரம் போய் அம்பிகையை தர்சிக்க வேண்டுமென்று சொல்லி, தானும் ஸ்ரீ ஸ்வாமிகளுடன் வருவதாகத் தீர்மானித்துக்கொண்டு, ஸைன்யம் முதலான பரிவாரங்களுடன் அரசனும் சென்றுர். அங்கு வெகு அழகாகக் கட்டப்பட்டிருந்த ஸ்ரீ மடத்தையும் ஸ்ரீ ஸ்வாமிகளின் பரிவாரங்களின் சிறப்பையும் கண்டு, ஸ்ரீ ஸ்வாமிகளும் ஒரு மஹாராஜர் என்றே அரசன் பாவித்தார். இருவருமாக அம்பிகையை வெகு ஆனந்தமாக தர்சனம் செய்தபிறகு, ஆராதனைக்கு அங்கமாக ஸ்ரீ ஸ்வாமி

கள் ஆயிரம் பிராஹ்மணர்களுக்கு விசேஷமாக போஜனம் செய்துவைத்தார். பிறகு மஹாராஜனிடம் சொல்லிக் கொண்டு, அவருடைய பௌத்திரரான வீரபத்திர நாயக்கரையும் அனுக்ரஹித்துவிட்டு, சிருங்கேரிபக்கம் திரும்பி விட்டார்.

அன்று இரவிலேயே பிரயாணம் வைத்துக்கொண்டபடியால், அடர்ந்த காடுகள் வழியாக வரும்போது அங்கு பிரகாசிக்கும் மினுமினுப் பூச்சிகளின் அழகான தீபம்போன்ற வெளிச்சத்தையும் சந்திரிகையின் சோபையையும் கண்டு ஆனந்திக்க அவகாசம் கிடைத்தது. அந்தக் காடுகள் தாண்டி ஒரு க்ரோசத்திற்கப்பாலுள்ள ஒரு கோட்டைக்கு வந்தபோது, அங்குள்ள அதிகாரிகள் விசேஷமாக ஆதரவு காட்டினார்கள். அவர்கள் வெகு உத்ஸாஹத்துடன் தக்க பக்க வாத்தியங்களோடு நர்த்தனமும் கோலாட்டமும் நடத்த ஏற்பாடுசெய்தார்கள். அதையும் கொஞ்சநேரம் பார்த்துவிட்டு அவர்களை அனுப்பியான பிறகு சிறிதுநேரம் நித்திரைசெய்து அதிகாலையிலேயே அங்கிருந்து புறப்பட்டு விட்டார். கிரமமாக ஸ்ரீகிராமம், சுவேததுர்க்கம் முதலானவைகளைக்கடந்து தன் ராஜ்ய எல்லைக்குள் வந்துசேர்ந்தார்.

எங்கு பார்த்தாலும் கட்டப்பட்டிருந்த வாழைகளையும் தோரணங்களையும் பார்த்துக்கொண்டு, ஜனங்களால் வெகு உத்ஸாஹத்துடன் வரவேற்கப்பட்டு சிருங்கேரி நகரத்தில் பிரவேசித்தார். அங்குள்ள ஜனங்கள் வெகு பக்தியுடனும் ஸந்தோஷத்துடனும் காட்டிய நீராஜனங்களை ஏற்றுக் கொண்டு, அப்படியே மலஹானிகரேசுவரரை தர்சனம் செய்துவிட்டு ஸ்ரீமடம் வந்துசேர்ந்தார். உடனே ஸ்ரீ சாரதா தேவியை தர்சித்து நமஸ்கரித்து ப்ரஸாதம் பெற்றுக் கொண்டு தன் இருப்பிடம் சென்றார். இவ்விதமாக எவ்வித குறைவுமன்னியில் வெகு விமரிசையாக பீடாதிபத்யத்தை நடத்திக்கொண்டு கீர்த்தியுடன் விளங்கிவந்தார்.

राज्यं शक्त्या प्रकुर्वाणो भुञ्जानश्च मठश्रियम् ।
विघ्नं परिहरन् राज्यश्रियो बुद्धिसमन्वितः ॥

उपायज्ञो मृदुत्वेन वर्तमानस्तपोन्वितः ।
श्रिया परमया युक्तः सोऽवर्तत महायशाः ॥

ராஜ்யம் ஶக்த்யா ப்ரகுர்வாணோ புஞ்ஜாநச்ச மடச்ரியம் ।
விக்நம் பரிஹரன் ராஜ்யச்ரியோ புத்தி ஸமன்வித: ॥

உபாயஜ்ஞோ ம்ருதுத்வேன வர்த்தமாநஸ் தபோன்வித: ।
ச்ரியா பரமயா யுக்த: ஸோऽவர்த்தத மஹாயஶா: ॥

அத்யாயம் 2

## நவராத்திரி உத்ஸவம்

சரத்காலத்தில் ஆசுவயுஜ சுக்ல பிரதமை முதல் நவமீ முடிய ஸ்ரீ சாரதாம்பாளுக்கு நவராத்திரி மஹோத்ஸவம் வெகு விமரிசையாக நடந்தது. கங்கா, கோதாவரீ, காவேரீ, தாம்ரபர்ணீ முதலான நதீ தீரங்களிலிருந்தும் அயோத்யா, துவாரகா, காசி, மதுரா, ஜகன்னாதம், வேலாபுரம், காஞ்சீபுரம், திருப்பதி, ஸ்ரீரங்கம், கோகர்ணம், மலையாளம் முதலான பிரஸித்த ஸ்தலங்களிலிருந்தும் இக்கேரி ஸம்ஸ்தானத்திலிருந்தும் மற்றும் அநேக பிரதேசங்களிலிருந்தும் ஏராளமாக வித்வான்களும் மற்றும் ஜனங்களும் கூடினார்கள்.

அவர்களில் ஒரு வேதம், இரண்டு வேதங்கள், மூன்று வேதங்கள் இவைகளில் அத்யயன சூரர்களாகவும், தர்க்கம், வியாகரணம், மீமாம்ஸை, வேதாந்தம் முதலான சாஸ்திரங்களில் கரைகண்டவர்களாகவும் அநேகம்பேர் இருந்தார்கள். அப்படியே வெகு ரஞ்ஜகமாகக் கவனம் செய்யக்கூடிய கவிகளும், ஸங்கீத வித்வான்களும், பலவித வாத்தியங்களை வாசிப்போர்களும் ஏராளமாய் வந்துசேர்ந்தார்கள்.

உத்ஸவத்தில் பிரதி தினம் வேத பாராயணம் செய்ய வேண்டியதை யுத்தேசித்து, அத்யயனம் செய்தவர்களை யல்லாவதானிகளும் பிரஹ்மாபட்டரும் பிரதானமாயிருந்து பரீக்ஷைசெய்து தகுந்தவர்களின் பெயர்களைக் குறித்துக் கொண்டார்கள். ஆனால் வெகுதூரத்திலிருந்து வந்திருந் தவர் யாரையும் விலக்கவில்லை. அப்படியே மந்திர ஜபாதி கள் செய்யவேண்டியதற்காகவும் தகுந்த பிராஹ்மணர் களைத் தீர்மானித்து குறித்துக்கொண்டார்கள். இவ்விதம் குறிக்கப்பட்ட பிராஹ்மணோத்தமர்களுக்கு ஆரம்ப தின மான பிரதமை காலையில் ஸ்ரீமத் ஆசார்யரால் தேங்காய் கொடுப்பித்து அந்தந்த பாராயண ஜபாதிகளுக்காக வரணம் செய்யப்பட்டது.

आरब्धे प्रतिपद्येव मङ्गले शारदोत्सवे ।
नालिकेरप्रदानेन यतिराजेन धीमता ॥

वेदपारायणार्थाय वरणेन द्विजन्मनाम् ।
नानामन्त्रजपार्थाय तथा मन्त्रविदामपि ॥

ஆரப்தே ப்ரதிபத்யேவ மங்களே ஶாரதோத்ஸவே ।
நாளிகேர ப்ரதானேன யதிராஜேன தீமதா ॥

வேதபாராயணார்த்தாய வரணேன த்விஜன்மநாம் ।
நாநாமந்த்ர ஜபார்த்தாய ததா மந்த்ரவிதாமபி ॥

இவ்விதமாக பிரதி தினமும் பாராயணாதிகள் கிரமப்படி நடந்துவந்தன.

வழக்கம்போல் ஸ்ரீமத் ஆசார்யார் அதிகாலையில் துங்கா நதியில் ஸ்நானம்செய்து நித்யாஹ்நிகங்களை முடித்துக் கொண்டு ஸ்ரீமடத்தில் வீற்றிருக்கும் ஸமயம், பாக்குத் தோட்டக்காரர்களும் ஸ்ரீமடம் அதிகாரிகளும் பிராஹ்மண ஸந்தர்ப்பணத்திற்காக கொண்டுவந்து சேகரிக்கப்பட்டிருக் கும் ஸஸ்யாதிகளை ஸ்ரீ ஸ்வாமிகள் நேரில் பார்வையிட்டு

அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். உடனே ஸ்ரீ ஸ்வாமிகளும் புறப்பட்டு அவைகள் வைத்திருந்தவிடம் சென்றார். வெகு ருசியுள்ள மிகப்பெரிய பலாக்காய், பலாப்பழங்களும், குலைகுலைகளாக வாழைக்காய்களும் வாழைப்பழங்களும், தினுசு தினுசாக பூசணிக்காய்களும், பாகக்காய்க் குவியல்களும். கணக்கில்லாத கத்தரிக்காய்களும், ஏராளமாக கீரைத்தண்டுகளும், ஆயிரக்கணக்காகப் பலவிதக் கிழங்குகளும், மிக மதுரமான புடலங்காய்களும் கரும்புகளும், பாக்குப் பட்டைகளில் சுற்றப்பட்ட மற்றும் பலவித காய்கறிகளும், ஏராளமாக வாழையிலைக் கட்டுகளும், பலவித புஷ்பங்களும் வந்து வெகு அழகாக வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார். இவைகளை ஸமர்ப்பணம் செய்த பாக்குத் தோட்டக்காரர்களும், சேகரித்த அதிகாரிகளும் தனித்தனியே ஸ்ரீமத் ஆசார்யரை நமஸ்கரித்தார்கள். மிகவும் ஸந்தோஷமாக அவர்களுடைய கைங்கர்யத்தை சிலாகித்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீமடத்திற்குள் சென்றார்.

उपहारकराः सर्वे पूगद्रुवनकृद्वराः ।
उपहारान् समर्प्यैव स्वामिने यतिभूभुजे ।
नमस्कुर्वन्ति यत्नेन विनीताश्चाधिकारिकाः ॥

तत्तत्पुरुषभेदेन समानीतं पृथक् पृथक् ।
तत्तद्भारावलीर्दृष्ट्वा सच्चिदानन्दभारती ॥

परमं मोदमास्थाय कल्याणतरभाषणैः ।
आनीतवत आनन्द्य स्वान्तर्मठमुपाविशत् ॥

உபஹாரகரா: ஸர்வே பூகத்ருவனக்ருத்வரா: ।
உபஹாரான் ஸமர்ப்யைவ ஸ்வாமிநே யதிபூபுஜே ।
நமஸ்குர்வந்தி யத்நேந விநீதாச்சாதிகாரிகா: ॥

தத்தத்புருஷபேதேன ஸமாநீதம் ப்ருதக் ப்ருதக் ।
தத்தத்பாராவளீர் த்ருஷ்ட்வா ஸச்சிதானந்தபாரதீ ॥

பரமம் மோதமாஸ்த்தாய கல்யாணதர பாஷிணே: ।
ஆநீதவத ஆனந்த்ய ஸ்வாந்தர்மட முபாவிஶத் ॥

பிரதி தினம் ஸ்ரீ சாரதாம்பாள் ஸன்னிதியில் பூஜை பாராயணுதிகள் முடிந்தவுடனை ஆயிரக்கணக்கான பிராஹ்மணர்களுக்கும் ஸுவாஸிநீகளுக்கும் மற்றும் ஆபால விருத்தர்களுக்கும் விசேஷமாக ஸந்தர்ப்பணம் செய்யப்பட்டது. எல்லோரும் போஜனத்திற்கு உட்கார்ந்து பரிமாறின பிறகு ஸ்ரீமடம் புரோஹிதர் அங்கு வந்து இந்த ஸமாராதனையால் ஸ்ரீ சாரதாம்பாள் பிரீதியடையட்டும் என்று பிரார்த்தித்து விட்டு போஜனத்தை ஆரம்பித்து வைத்தார். பரிமாறுகிறவர்களும் வெகு தாராளமாகவே பரிமாறினுர்கள். "சாப்பிடுங்கள் சாப்பிடுங்கள்" என்று உத்ஸாஹப்படுத்திவிட்டார்கள்.

पुरोहितः समागत्य ददावन्नमनुत्तमम् ।
द्विजस्त्रीभोजनादस्मात् शारदा प्रीयतामिति ॥

चन्द्रशालासूपविष्टाः पक्वमन्नं च भुञ्जते ।
भक्ष्यं बहुविधं चापि परमान्नं समृद्धिमत् ॥

यत्रोदाराः प्रभाषन्ते पुरुषाः परिवेषकाः ।
दीयतां दीयतामन्नं भुज्यतां भुज्यतामिति ॥

गङ्गामृतध्वनिस्तत्र श्रूयते सुमहत्तरः ।
तत् तृप्तमभवत् सर्वं आबालयुववृद्धकम् ॥

புரோஹித: ஸமாகத்ய ததாவந்நமநுத்தமம் ।
த்விஜ ஸ்த்ரீ போஜனுதஸ்மாத் ஶாரதா ப்ரீயதாமிதி ॥

சந்த்ரஶாலாஸூபவிஷ்டா: பக்வமந்நம் ச புஞ்ஜதே ।
பக்ஷ்யம் பஹுவிதம் சாபி பரமாந்நம் ஸம்ருத்திமத் ॥

யத்ரோதாரா: ப்ரபாஷந்தே புருஷா: பரிவேஷகா: ।
தீயதாம் தீயதாமந்நம் புஜ்யதாம் புஜ்யதாமிதி ॥

கங்காம்ருதத்வனிஸ்தத்ர ச்ரூயதே ஸுமஹத்தர: ।
தத் த்ருப்தமபவத் ஸர்வம் ஆபாலயுவ வ்ருத்தகம் ॥

இவ்விதமாக எல்லோருக்கும் திருப்தியாக போஜனம் செய்துவைத்த பிறகே பரிமாறுகிறவர்களும் மற்றவர்களும் போஜனம் செய்வார்கள். பரிமாறுகிறவர்களே இருநூறு பேர்களுக்குமேல் இருக்குமானால் முன்னால் போஜனம்செய்தவர்களின் எண்ணிக்கை பலவாயிரமாகவே இருக்குமென்று ஊகித்துக்கொள்ளலாம். எப்படியும் எல்லா பங்க்திகளிலும் போஜனம் முடிவதற்கு ஸாயங்காலமாகிவிடும்.

பிரதிதினமும் ஸாயங்காலம் ஸ்ரீ சாரதாதேவியின் உத்ஸவ மூர்த்தியை அலங்கரித்து நகரத்திற்குள் ஊர்வலம் செய்துவைப்பார்கள். வாத்திய கோஷங்கள் முழங்க, ஐம்பது அறுபது தீவட்டிகள் பிரகாசிக்க, ஸகல பிருதுகளும் கூடவர, ஆயிரக்கணக்கான ஜனங்கள் உத்ஸாஹமாக தர்சனம்செய்ய, ஊர்வலம் வரும்பொழுது மத்தியில் பல விடங்களில் நிறுத்தி நிறுத்தி நடர்களும் தேவதாஸிகளும் அழகாக நர்த்தனம் செய்வார்கள். இவ்விதம் ஊர்வலம் நடந்து அம்பிகை ஆலயத்திற்குத் திரும்பி வந்தவுடன், ஸ்ரீமத் ஆசார்யாருக்குத் தெரியப்படுத்துவார்கள்; அவரும் ஸதஸ்ஸுக்குத் தக்க விசேஷ உடை தரித்துக்கொண்டு ஸ்ரீ சாரதாம்பாள் முன் மண்டபத்திற்கு வந்துசேருவார்.

एवं महोत्सवे वृत्ते नगरे शारदाम्बिकाम् ।
प्रतिरूपां समानिन्युः मठं प्रत्येत्र वाहकाः ॥

आगतायां शारदायां स्वामिनां किंकरः पुमान् ।
आगत्य त्वरितो धीमान् आवेदयदिदं वचः ॥

आगताश्चापि विद्वांस आगताश्च महाजनाः ।
देवस्य पूज्यगमने समयः समजायत ॥

एवं विज्ञप्तिमाकर्ण्य सच्चिदानन्दभारती ।
कल्याणतरवेषः सन् सभामेवान्वपद्यत ॥

ஏவம் மஹோத்ஸவே வ்ருத்தே நகரே ஶாரதாம்பிகாம் ।
ப்ரதிரூபாம் ஸமாநிந்யு: மடம் ப்ரத்யேவ வாஹகா: ॥

ஆகதாயாம் ஶாரதாயாம் ஸ்வாமிநாம் கிங்கர: புமான் ।
ஆகத்ய த்வரிதோ தீமான் ஆவேதயதிதம் வச: ॥

ஆகதாச்சாபி வித்வாம்ஸ ஆகதாச்ச மஹாஜநா: ।
தேவஸ்ய பூஜ்யகமநே ஸமய: ஸமஜாயத ॥

ஏவம் விஜ்ஞப்திமாகர்ண்ய ஸச்சிதாநந்தபாரதீ ।
கல்யாணதரவேஷ: ஸன் ஸபாமேவாந்வபத்யத ॥

ஸர்வாலங்காரபூஷிதராக முக்தாமய கிரீடம், உயர்ந்த பட்டு வஸ்திரம், ஸ்வர்ண பாதுகை முதலான ராஜ சின்னங்களை தரித்துக்கொண்டு, வாத்யகோஷத்துடன் ஸ்ரீ சாரதா தேவியின் முன் மண்டபத்திற்கு வந்து தேவியை நமஸ்கரித்துவிட்டு உயரமான ஸிம்ஹாஸனத்தில் உட்காருவார். பிறகு தேவீ மாஹாத்ம்யம் வாசிக்கப்படும். அதன் பிறகு ஸ்ரீசாரதாம்பாளுக்கு விசேஷ தூப தீப நைவேத்யாதி பூஜைகள் செய்து நீராஜனம் நடக்கும். அப்பொழுது ஜாஜ்வல்யமாக விளங்கும் அம்பிகையை தர்சனம் செய்துகொண்டே ஸ்ரீஸ்வாமிகள் ஆனந்தபரவசராயிருப்பார்.

शारदां पद्मपत्राक्षीं शारदेन्दुनिभाननाम् ।
चतुर्बाहुसमायुक्तां धृताक्षस्रजमेव च ॥

धृतामृतलसत्कुम्भां चारुपुस्तकधारिणीम् ।
ज्ञानमुद्राधरां देवीं वाणीं परमशोभनाम् ॥

अङ्गदैः शोभमानां च कर्णमस्तकभूषणैः ।
मुक्तावलयसंयुक्तैः नानारत्नमयैरपि ॥

अनर्घवसनोपेतां क्षौमकंचुकसंवृताम् ।
अनर्घनासामणिना चुम्बिताधरपल्लवाम् ॥

कस्तूरीतिलकोपेतां सुनासां सुन्दराकृतिम् ।
मुदितो वीक्षमाणस्तां दीपावलिविराजिताम् ।
अशोभत सभाग्रेऽत्र सच्चिदानन्दभारती ॥

ஶாரதாம் பத்மபத்ராக்ஷீம் ஶாரதேந்து நிபாநநாம் I
சதுர்பாஹு ஸமாயுக்தாம் த்ருதாக்ஷஸ்ரஜமேவ ச II

த்ருதாம்ருத லஸத் கும்பாம் சாரு புஸ்தக தாரிணீம் I
ஞானமுத்ராதராம் தேவீம் வாணீம் பரமஶோபநாம் II

அங்கதை: ஶோபமாநாம் ச கர்ண மஸ்தக பூஷணை: I
முக்தா வலய ஸம்யுக்தை: நாநா ரத்னமயைரபி II

அநர்க்க வஸனோபேதாம் க்ஷௌம கஞ்சுக ஸம்வ்ருதாம் I
அநர்க்க நாஸாமணிநா சும்பிதாதர பல்லவாம் II

கஸ்தூரீ திலகோபேதாம் ஸுநாஸாம் ஸுந்தராக்ருதிம் I
முதிதோ வீக்ஷமாணஸ்தாம் தீபாவளி விராஜிதாம் I
அஶோபத ஸபாக்ரேZத்ர ஸச்சிதானந்தபாரதீ II

அம்பிகையின் ஆராதனைக் கிரமத்தில் நர்த்தனமும் நடக்கும். பாலர்கள் ஸ்திரீ வேஷம் தரித்து வாத்தியம் தாளம் அனுஸரித்து வெகு அழகாக நர்த்தனம் செய்வார்கள்.

गन्धर्वसदृशाकारैः वधूरूपधरैर्नरैः ।
बालैस्तालवशं प्राप्तैः नृत्यद्भिर्वाद्यपूर्वकम् ॥

शारदादर्शनेनापि चक्षुराकृष्यते नृणाम् ।
नृत्तसंदर्शनेनापि चक्षुराकृष्यतेऽन्यतः ॥

கந்தர்வ ஸத்ருஶாகாரை: வதூரூபதரைர் நரை: I
பாலைஸ் தாலவஶம் ப்ராப்தை: ந்ருத்யத்பிர் வாத்யபூர்வகம் II

ஶாரதா தர்ஶநேநாபி சக்ஷுராக்ருஷ்யதே ந்ருணாம் ।
ந்ருத்த ஸந்தர்ஶநேநாபி சக்ஷுராக்ருஷ்யதேऽந்யத: ॥

அதன்பிறகு ஆரம்ப தினத்தில் அங்குள்ள அதிகாரி அத்யயன சூரர்களையும், வித்வான்களையும், கவிகளையும் அவரவர்களுடைய விசேஷ யோக்கியதைகளைச் சொல்லி தனித்தனியே ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அறிமுகப்படுத்துவார். உடனே பண்டித ஸதஸ் ஆரம்பித்து வெகு கோலாஹலமாய் நடக்கும்.

निवेदिताः समस्तास्ते नालिकेरसमर्पणम् ।
कृत्वा नत्वा सुखं स्थित्वा पाण्डित्यं चक्रुरञ्जसा ॥

कवयस्तु कवित्वेन विद्वांसः शास्त्रवादतः ।
यतिराजस्य सामीप्ये शारदायाः सभान्तरे ॥

युक्तिभिः खण्डयित्वा च परस्परसमीरितम् ।
अन्योन्यजयसंरम्भं चक्रुः पण्डितवृत्तयः ॥

நிவேதிதா: ஸமஸ்தாஸ்தே நாளிகேர ஸமர்ப்பணம் ।
க்ருத்வா நத்வா ஸுகம் ஸ்தித்வா பாண்டித்யம் சக்ருரஞ்ஜஸா ॥

கவயஸ்து கவித்வேன வித்வாம்ஸ: ஶாஸ்த்ர வாதத: ।
யதிராஜஸ்ய ஸாமீப்யே ஶாரதாயா: ஸபாந்தரே ॥

யுக்திபி: கண்டயித்வா ச பரஸ்பர ஸமீரிதம் ।
அந்யோந்ய ஜய ஸம்ரம்பம் சக்ரு: பண்டித வ்ருத்தய: ॥

அப்படியே வைணிகர்களும் மற்றும் ஸங்கீத வித்வான்களும் தங்கள் தங்கள் ஸாமர்த்தியத்தைக் காட்டுவார்கள்.

गायकानां च विदुषां लघुहस्तवतामपि ।
वीणावतां श्रीमतां च निपुणानां च वादने ॥

धीराणां रक्तकण्ठानां ललितं गायतामपि ।
श्रोतृणां यन्मनोज्ञं स्यात् गान्धर्वं गानमुत्तमम् ।
तदवर्तत कल्याणं यतिराजसभान्तरे ॥

காயகாநாம் ச விதுஷாம் லகுஹஸ்தவதாமபி 1
வீணவதாம் ஸ்ரீமதாம் ச நிபுணனும் ச வாதநே ll

தீராணும் ரக்தகண்டானும் லலிதம் காயதாமபி 1

ச்ரோத்ருணும் யன்மனேக்ஞம் ஸ்யாத் காந்தர்வம்
கானமுத்தமம் 1

ததவர்த்தத கல்யாணம் யதிராஜ ஸபாந்தரே ll

இது முடிந்து மறுபடியும் ஸ்ரீ சாரதாம்பா பூஜையாகி பூஜாங்கமான நர்த்தனமும் நடந்தபிறகு வேத பாரங்கதர்கள் ஸ்ரீ சாரதா ஸூக்தம் வாசிப்பார்கள். பிறகு ஸ்ரீமத் ஆசார்யரே கர்பகிருஹம் சென்று தன் கையினலேயே அம்பாளை அர்சித்துவிட்டு, எல்லாராலேயும் நமஸ்கரிக்கப் பட்டவராக ஸ்ரீமடத்திற்குள் சென்றுவிடுவார்.

---

அத்யாயம் 3

## உத்ஸவ பூர்த்தி

மேலே கண்ட கிரமப்படியே உத்ஸவத்தில் ஒவ்வொரு நாளும் வைபவங்கள் அதி விமரிசையாக நடந்துவந்த போதிலும் பூர்த்தி தினங்களில் சில விசேஷாம்சங்கள் உண்டு.

அஷ்டமீ தினம் சிருங்கேரி நகரத்திலுள்ள எல்லா ஸ்திரீகளுக்கும் ஸ்ரீமடத்திலிருந்து அழைப்பு அனுப்பித் தருவித்து ஸ்ரீ சாரதாம்பாளின் பிரீதியையுத்தேசித்து அவர்களுக்கு வஸ்திர தானம் செய்து போஜனம் செய்விக்கப் பட்டது.

अष्टम्यां वस्त्रदानाय पुरस्था योषितोऽखिलाः ।
आनीताः स्वामिनां तावत् पुरुषैः किङ्करैः परैः ॥

सहस्रान्ता योषितस्ताः सर्वाभरणभूषिताः ।
शारदाग्रे समाविष्टाः श्रीमठं समशोभयन् ॥

यतिराजाज्ञया तत्र शारदामण्डपे शुभे ।
वसनानि मनोज्ञानि जगृहुः प्रमदाश्च ताः ॥

शारदाप्रीतिमुद्दिश्य कल्याणतरदर्शनाः ।
वासोभिस्तर्पितास्वासु भोजनं समवर्तत ॥

அஷ்டம்யாம் வஸ்த்ர தாநாய புரஸ்த்தா யோஷிதோZகிலா:|
ஆநீதா: ஸ்வாமிநாம் தாவத் புருஷை: கிங்கரை: பரை: ||

ஸஹஸ்ராந்தா யோஷிதஸ்தா: ஸர்வாபரண பூஷிதா: |
ஶாரதாக்ரே ஸமாவிஷ்டா: ஸ்ரீமடம் ஸமஶோபயன் ||

யதிராஜாக்ஞயா தத்ர ஶாரதாமண்டபே ஶுபே |
வஸநானி மநோக்ஞானி ஜக்ருஹு: ப்ரமதாச்ச தா: ||

ஶாரதாப்ரீதிமுத்திஶ்ய கல்யாணதர தர்ஶநா: |
வாஸோபிஸ் தர்பிதாஸ்வாஸு போஜநம் ஸமவர்த்தத ||

அப்படியே மஹாநவமி தினத்திலும் வஸ்திர தானத்தை உத்தேசித்து பலவிடங்களிலிருந்து ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் வந்திருந்தார்கள். ஸ்ரீமடம் அதிகாரிகள் அதற்குத் தக்கபடி உத்தமமான வஸ்திரங்களைக் கொண்டுவந்து ஸ்ரீ சாரதாம்பாள் ஸன்னிதியில் மலைபோல் குவித்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் அங்கு வந்து அப்படியே அம்பாளுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு அதிகாரிகளைக் கொண்டு ஸ்திரீகளுக்கு தனித்தனியே எடுத்துக்கொடுக்கும்படி ஆக்ஞை செய்தார். அப்படியே அவரவர்கள் வஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீமத் ஆசார்யாரைப் புகழ்ந்துவிட்டு ஸ்ரீ சாரதாம்பாளை தர்சனம் செய்துகொண்டு நின்றார்கள்.

महानवम्यां प्राप्तायां वस्त्रकामा द्विजाङ्गनाः ।
शृङ्गारमङ्गलाकारा अष्टाभ्यो दिग्भ्य आययुः ॥

उपस्थितासु योषित्सु कल्याणीषु सहस्रशः ।
सहस्रान्तानि वासांसि राशीचक्रुर्मुदान्विताः ॥

वाससामुत्तमानां च महान् राशिरशोभत ।
सह्यस्य शैलराजस्य प्रत्यन्त इव पर्वतः ॥

सच्चिदानन्दयोगीन्द्रः कृतदेवार्चनस्ततः ।
शारदापूजनं कृत्वा वस्त्रजातं समार्पयत् ॥

अनेन वस्त्रदानेन शारदा प्रीयतामिति ।
विसृष्टासु च नारीषु दीयते वस्त्रमुत्तमम् ॥

एकैकस्यै तदीयैस्तैः पुरुषैराज्ञया प्रभोः ।

மஹாநவம்யாம் ப்ராப்தாயாம் வஸ்த்ரகாமா த்விஜாங்கநா: ।
ச்ருங்கார மங்களாகாரா அஷ்டாப்யோ திக்ப்ய ஆயயு: ॥

உபஸ்த்திதாஸு யோஷித்ஸு கல்யாணீஷு ஸஹஸ்ரஶ: ।
ஸஹஸ்ராந்தானி வாஸாம்ஸி ராஶீசக்ருர் முதாந்விதா: ॥

வாஸஸாமுத்தமாநாம் ச மஹான் ராஶிரஶோபத் ।
ஸஹ்யஸ்ய ஶைலராஜஸ்ய ப்ரத்யந்த இவ பர்வத: ॥

ஸச்சிதானந்த யோகீந்த்ர: க்ருததேவார்சனஸ்தத: ।
ஶாரதாபூஜநம் க்ருத்வா வஸ்த்ரஜாதம் ஸமார்பயத் ॥

அநேந வஸ்த்ர தாநேந ஶாரதா ப்ரீயதாமிதி ।
விஸ்ருஷ்டாஸு ச நாரீஷு தீயதே வஸ்த்ரமுத்தமம் ॥

ஏகைகஸ்யை ததீயைஸ்தை: புருஷைராஜ்ஞயா ப்ரபோ: ।

எத்தனை ஸ்திரீகள் வந்துகொண்டிருந்தாலும் வஸ்திரம் கொடுத்துக்கொண்டேயிருந்தார்கள். இவ்விதமாக ஆயிரக் கணக்காகச் சேர்ந்திருக்கும் ஸ்திரீகளின் கூட்டத்தை நியமனம் செய்ய பத்து வயதுள்ள பாலர்களே நியமிக்கப் பட்டிருந்தார்களென்பது குறிப்பிடத்தக்கது.

आगच्छेयुश्च यावत्यः तावतीभ्यो ददत्यपि ।
मठीयपुरुषास्ते वै पृथग्वस्त्रमनुत्तमम् ॥

दीयमानेषु वस्त्रेषु योषितां यमनाय हि ।
बालका बुद्धिसंपन्ना नियुक्ता दशवार्षिकाः ॥

ஆகச்சேயுச்ச யாவத்ய: தாவதீப்யோ ததத்யபி ।
மடீயபுருஷாஸ்தே வை ப்ருதக்வஸ்த்ரமனுத்தமம் ॥

தீயமானேஷு வஸ்த்ரேஷு யோஷிதாம் யமனாய ஹி ।
பாலகா புத்திஸம்பந்நா நியுக்தா தஶவார்ஷிகா: ॥

அன்றையதினம் உத்ஸவ பூர்த்தி தினமானதினால் ஸ்ரீ மடத்தில் எங்கு பார்த்தாலும் விசேஷமாக ஹோமங்கள், யக்ஞங்கள், ஜபங்கள் நடந்துவந்தன. பிரஹ்மாவே கூட இருந்து உத்ஸவம் நடத்தி வைத்தால் பிரஹ்மலோகம் எப்படி பிரகாசிக்குமோ, அப்படியே ஸ்ரீமடம் பிரகாசித்தது.

क्रियमाणैर्जपैर्होमैः श्रीमठः समशोभत ।

यज्ञैः समस्तैर्युक्तश्च ब्रह्मणा पृथुतेजसा ।
महोत्सवेन संयुक्तो ब्रह्मलोक इवापरः ॥

க்ரியமாணைர் ஜபைர் ஹோமை: ஸ்ரீமட: ஸமஶோபத ।

யக்ஞை: ஸமஸ்தைர் யுக்தச்ச ப்ரஹ்மணா ப்ருதுதேஜஸா ।
மஹோத்ஸவேன ஸம்யுக்தோ ப்ரஹ்ம லோக இவாபர: ॥

மற்ற தினங்களைவிட அன்று கூட்டம் வெகு அதிக மானதினால் போஜனத்திற்கு ஏராளமாக ஏற்பாடுகள் செய்து

அன்னம் வியஞ்ஜனங்கள் பக்ஷியங்கள் எல்லாம் வெகு ருசிகரமாகத் தயாரிக்கப்பட்டு மலை மலையாக குவிக்கப்பட்டிருந்தன.

अन्नस्य क्रियमाणस्य स राशिः समशोभत ।
शिखरैर्विविधैर्युक्तो हिमवानिव पर्वतः ॥

व्यञ्जनानां समस्तानां संस्कृतानां च राशयः ।

अशोभन्त रसैर्युक्ताः कवीन्द्राणां गिरो यथा ।
भक्ष्याणां राशयश्चापि पर्वता इव रेजिरे ॥

அந்நஸ்ய க்ரியமாணஸ்ய ஸ ராஶி: ஸமஶோபத ।
ஶிகரைர் விவிதைர் யுக்தோ ஹிமவாநிவ பர்வத: ॥

வ்யஞ்ஜநாநாம் ஸமஸ்தாநாம் ஸம்ஸ்க்ருதாநாம் ச ராஶய: ।

அஶோபந்த ரஸைர்யுக்தா: கவீந்த்ராணாம் கிரோ யதா ।
பக்ஷ்யாணாம் ராஶயச்சாபி பர்வதா இவ ரேஜிரே ॥

வெகு விமரிசையாக ஸந்தர்ப்பணம் நடந்த பிற்பாடு அஸ்தமன ஸமயத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் தன் ஆஹ்நிகாதிகளை முடித்துக்கொண்டு வெளிக்கிளம்பியதும் புஷ்பமாரி பெய்கிறமாதிரி அநேகவித வாண வேடிக்கைகள் நடந்தன. ஏராளமான ஜனங்கள் கண்டு ஆனந்தித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளும் உத்ஸாஹமாகப் பார்த்துக்கொண்டு மனஸினுலேயே எல்லாவற்றையும் அம்பிகைக்கு அர்ப்பணம் செய்தார்.

पुष्पबाणाः प्रणीताश्च पुष्पाण्यजनयन् भृशम् ।
दर्शनीयतमाश्चित्रकराः स्पष्टसुमोज्ज्वलाः ॥

दृश्यमाना जनौघेन व्योममण्डलमस्पृशन् ।

बाणकोलाहलस्तत्र स महान् समवर्तत ।
पश्यत्सु जनबृन्देषु यतिराजाग्रतश्चिरम् ॥

सच्चिदानन्दयोगीन्द्रः बाणकोलाहलेक्षणात् ।
मुदितः प्रार्पयद्वाण्यै तादृगुत्सवमात्मना ॥

புஷ்பபாணு: ப்ரணீதாச்ச புஷ்பாண்யஜனயன் ப்ருஶம் ।
தர்ஶனீயதமாச்சித்ரகரா: ஸ்பஷ்டஸுமோஜ்ஜ்வலா: ॥

த்ருச்யமாநா ஜநௌகேன வ்யோமமண்டலமஸ்ப்ருஶன் ।

வாணகோலாஹலஸ்தத்ர ஸ மஹான் ஸமவர்த்தத ।
பச்யத்ஸு ஜனப்ருந்தேஷு யதிராஜாக்ரதச்சிரம் ॥

ஸச்சிதானந்தயோகீந்த்ர: பாணகோலாஹலேக்ஷணுத் ।
முதித: ப்ரார்பயத்வாண்யை தாத்ருகுத்ஸவமாத்மநா ॥

பிறகு வெகு அழகான சித்திரங்களுடன் சோபித்த விஸ்தாரமான மண்டபம் வந்து அங்கு ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருந்த ஸ்ரீராமசந்திர மூர்த்தியை தர்சித்துவிட்டு, வேதவித்துக்களும் வித்வான்களும் பாடகர்களும் அதிகாரிகளும் மற்றும் ஜனங்களும் ஏராளமாய் குழுமியிருந்த ஸ்ரீ சாரதாம்பா ஸன்னிதிக்குச் சென்று அம்பிகையை நமஸ்கரித்துவிட்டு அங்கு போடப்பட்டிருந்த ரத்ன ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்துகொண்டார். வழக்கம்போல் தேவீமாஹாத்மியம் வாசிக்கப்பட்டது. இதற்குள் வெளி வீதிகளில் பவனி போயிருந்த ஸ்ரீ சாரதா உத்ஸவமூர்த்தி திரும்பிவருவதை கவனித்து ஸ்ரீஸ்வாமிகள் எழுந்து வரவேற்று அம்பிகை பீடத்தில் அமர்ந்தவுடன் தானும் தன் பீடத்தில் அமர்ந்துகொண்டார்.

அதன்பிறகு அன்றும் வியாகரணம், தர்க்கம், மீமாம்ஸை வேதாந்தம், முதலிய சாஸ்திரங்களில் வித்வான்களுக்குள் சர்ச்சை நடந்தது. இதில் என்ன விசேஷமென்றல் எந்த சாஸ்திரமாயிருந்தாலும் அதில் ஸ்ரீ ஸ்வாமிகளும் வெகு ஸ்வாதீனமாய் ஸிம்ஹம்போல் நுழைந்து வாதத்தில் கலந்துகொண்டார். தேவஸபையில் ஸர்வக்ஞரான பரமேசுவரர் போலவே விளங்கினுர்.

प्रश्नोत्तरक्रमेणैव वादकोलाहलं मुदा ।
महासभाग्रतो धीराः चक्रुः पण्डितवृत्तयः ॥

प्रविशन् तर्कगहनं युक्तिभिः शास्त्रभूमिषु ।

संचरन् यतिसिंहोऽपि सभाग्रे समशोभत ।
यथा देवसभाग्रे तु पिनाकी शास्त्रवित्तमः ॥

ப்ரச்னோத்தரக்ரமேணைவ வாதகோலாஹலம் முதா ।
மஹாஸபாக்ரதோ தீரா: சக்ரு: பண்டிதவ்ருத்தய: ॥

ப்ரவிசன் தர்க்ககஹனம் யுக்திபி: சாஸ்த்ரபூமிஷு ।

ஸஞ்சரன் யதிஸிம்ஹோऽபி ஸபாக்ரே ஸமசோபத ।
யதா தேவஸபாக்ரே து பிநாகீ சாஸ்த்ரவித்தம: ॥

அன்று வித்வத்ஸபை நடந்த பிற்பாடு வழக்கம்போல் நர்த்தனம் நடந்ததில், ஒரு நடன் ஸ்திரீ வேஷம் தரித்து தன்னுடைய ஸௌந்தர்யத்தினால் ஊர்வசியோ, ரம்பையோ திலோத்தமையோ என்று ஜனங்களைப் பிரமிக்கச்செய்தான். ஸ்ரீ ஸ்வாமிகளின் மனது மாத்திரம் கொஞ்சமேனும் கலங்கினதாகத் தெரியவில்லை. அதைப்பார்த்து ஜனங்கள் மிகவும் ஆச்சர்யப்பட்டார்கள். பிரஹ்மவித்தாகவிருந்த படியால், அப்ஸரஸ்களின் நர்த்தனத்தைக்கண்டும் எப்படி பரமசிவன் கலங்காமல் இருந்தாரோ அப்படியே இவரும் இருந்துவந்தார்.

नृत्यं कुर्वदशेषस्य मनोभवशरावहम् ।
ब्रह्मविद्त्वाद्संक्षुब्धो यतिराजो निरैक्षत ॥

यथा पिनाकपाणिस्तु नृत्यमप्सरसां परम् ।

निर्विकारं महात्मानं पश्यन्ति तमथापरम् ।
शङ्कमानाः कथंत्वेन पुरुषा विस्मितान्तराः ॥

ந்ருத்யம் குர்வதசேஷஸ்ய மனோபவசராவஹம் I
ப்ரஹ்மவித்வாதஸப்க்ஷூப்தோ யதிராஜோ நிரைக்ஷத II

யதா பிநாகபாணிஸ்து ந்ருத்யமப்ஸரஸாம் பரம் I
நிர்விகாரம் மஹாத்மானம் பச்யந்தி தமதாபரம் I
சங்கமாநா: கதம்த்வேன புருஷா விஸ்மிதாந்தரா: II

இவர் பிரஹ்ம பாவனையை விட்டு நர்த்தனத்தைப் பார்த்து ரஸித்து அனுக்ரஹிக்கவேண்டுமென்ற எண்ணம் நர்த்தகர்களுக்கு ஏற்பட்டு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் "தாங்கள் பார்த்து ரஸித்தால்தான் நாங்கள் எடுத்துக்கொள்ளும் சிரமம் ஸபலமாகும்" என்று பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டார்கள்.

स्वामिन्नन्यपरं चित्तं चित्तमत्र विधाय तत् ।
देवाश्चेत् पूज्यमीक्षन्ते सम्यङ्नृत्ये तु यः श्रमः ।
कृतोऽस्माभिः प्रयत्नेन सफलः स भवेत् तदा ॥

ஸ்வாமிந்நந்யபரம் சித்தம் சித்தமத்ர விதாய தத் I
தேவாச்சேத் பூஜ்யமீக்ஷந்தே ஸம்யங்ந்ருத்யே து ய: ச்ரம: I
க்ருதோZஸ்மாபி: ப்ரயத்நேந ஸபல: ஸ பவேத் ததா II

அப்படியே ஸ்ரீ ஸ்வாமிகள் ஸம்மதிக்க, நாட்டிய சாஸ்திரக்கிரமம் தவராமல் வெகு அழகாக நர்த்தனம் செய்து காட்டினார்கள்.

பிறகு ஸ்ரீ சாரதா தேவிக்கு பூஜை நடந்தது. அன்றைய தினம் அம்பிகையை யானை வாஹனத்திலிருப்பதுபோல் அலங்கரிக்கப்பட்டிருந்தது வெகு அழகாக இருந்தது. தேவியை தர்சிக்க தர்சிக்க அங்கிருந்து திரும்ப ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு மனம் இடம் கொடுக்கவில்லை.

रत्नकङ्कणशोभाढ्यां किरीटेनोपशोभिताम् ।
नीलकञ्चुकसंयुक्तां नीलवस्त्रोपशोभिताम् ॥

कस्तूरीतिलकाढ्यां च गजराजोपरिस्थिताम् ।
सर्वसिद्धिप्रदां देवीं सर्वसिद्धिस्वरूपिणीम् ॥

मोहिनीं ब्रह्मरुद्रादिदेवानामपि भद्रदाम् ।
दृष्ट्वा हृष्टमना भूत्वा सच्चिदानन्दभारती ॥

न निवर्तयितुं शक्तः चक्षुस्तस्या विलोकनात् ।
अभवद्भावसंपन्नो भावनीयो विचक्षणः ॥

ரத்ந கங்கண ஶோபாட்யாம் கிரீடேநோபஶோபிதாம் ।
நீல கஞ்சுக ஸம்யுக்தாம் நீல வஸ்த்ரோபஶோபிதாம் ॥

கஸ்தூரீ திலகாட்யாம் ச கஜராஜோபரி ஸ்த்திதாம் ।
ஸர்வஸித்திப்ரதாம் தேவீம் ஸர்வஸித்தி ஸ்வரூபிணீம் ॥

மோஹிநீம் ப்ரஹ்மருத்ராதி தேவாநாமபி பத்ரதாம் ।
த்ருஷ்ட்வா ஹ்ருஷ்டமநா பூத்வா ஸச்சிதானந்தபாரதீ ॥

ந நிவர்தயிதும் ஶக்த: சக்ஷுஸ்தஸ்யா விலோகநாத் ।
அபவத் பாவஸம்பந்நோ பாவநீயோ விசக்ஷண: ॥

அம்பிகைக்கு கர்பூர நீராஜனமானபிறகு, ஸதஸ்ஸில் உள்ளவர்களுக்கெல்லாம் சந்தனம், அக்ஷதை, கஸ்தூரி, புஷ்பம், தாம்பூலம் முதலான பிரஸாதங்கள் வழங்கப் பட்டன. அதன்பிறகு ஸ்ரீ சாரதா ஸூக்தம், ஸ்ரீஸூக்தம், முதலியவை பிராஹ்மணோத்தமர்களால் வாசிக்கப்பட்ட பிறகு ஆசீர்வாதம் கிரமப்படி செய்யப்பட்டது.

உடனே ஸ்ரீமடம் மந்திரி ஸ்ரீஸ்வாமிகளிடம் வந்து நவராத்ரி மஹோத்ஸவம் மங்களகரமாக நடந்து ஸமாப்தி யடைந்ததை விக்ஞாபனம் செய்துகொண்டார். உடனே ஸ்ரீ ஸ்வாமிகள் ரத்ன ஸிம்ஹாஸனத்திலிருந்து எழுந்து ஸ்ரீ சாரதா தேவியை நமஸ்கரித்து அஞ்ஜலிபந்தம் செய்து விடைபெற்றுக்கொண்டு, ஸ்வர்ண பாதுகை தரித்து, வந்திகள் கட்டியம் கூற, வாத்தியங்கள் முழங்க, ஸ்ரீமடத்

திற்குள் பிரவேசித்தார். வித்வான்கள், அதிகாரிகள் முதலானவர்கள் ஸ்ரீஸ்வாமிகளுடன் கொஞ்சதூரம் கூடவே சென்று, உத்ஸவம் விமரிசையாக நடந்ததில் தங்களுக்குள்ள ஸந்தோஷத்தைத் தெரியப்படுத்திவிட்டு, ஒவ்வொருவராக விடை பெற்று தங்கள் தங்கள் வீடு சென்றார்கள். ஸ்ரீ ஸ்வாமிகளும் ஸ்ரீமடத்தின் உள்பக்கம் சென்று ஆசமனம் செய்துவிட்டு, ரத்ன கம்பளம் விரித்திருந்த ஒரு அழகான பலகையில் சாய்ந்துகொண்டு, அன்று ஏற்பட்ட சிரமத்தினால் ஸ்ரீமந் நாராயணரை ஸ்மரித்துக்கொண்டு விசிராந்தி செய்து கொண்டார்.

அன்று ஏற்கனவே வெகுநேரமாகிவிட்டபடியால் ஒரு முகூர்த்த காலம்தான் விசிராந்திக்கு அவகாசமிருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகள் உடனே எழுந்து சுத்தி செய்துகொண்டு ஸ்நாநத்திற்காக நதிக்கு புறப்பட்டுவிட்டார். போகும் வழியில் ஸ்ரீ சாரதாம்பாளை தர்சித்துவிட்டு படிகளில் இறங்கி நதியில் ஸ்நாநம் செய்து நதிக்கரையிலேயே ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு மந்திர ஜபாதிகள் செய்தான பிற்பாடு படிக்கட்டு ஏறி ஸ்ரீ சாரதா மண்டபம் வந்து சேர்ந்தார். இதற்குள் வேத பாராயணம் செய்திருந்த பிராஹ்மணர்கள் யாவரும் தங்கள் தங்கள் ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு அம்மண்டபத்தில் கூடிவிட்டார்கள். அந்த விஸ்தாரமான மண்டபத்திலும் இடம் போதவில்லை. ஸ்ரீ ஸ்வாமிகள் அங்கே விஜயம் செய்யும்போது அங்குள்ளவர்கள் யாவரும் கையில் அக்ஷதை எடுத்துக்கொண்டு வேத ஸூக்தம் சொல்லி ஆசீர்வதித்து அக்ஷதையைக் கொடுத்தார்கள். அவ்வக்ஷதையைப் பெற்றுக்கொண்டு தன் சிரஸில் தரித்துக்கொண்டு, இவ்வாசீர்வாதத்தினால் தன்னுடைய தேஜஸ்ஸிற்கே விருத்தியேற்பட்டதாக ஸ்ரீ ஸ்வாமிகள் பாவித்தார்.

मन्त्राक्षतान् गृहीत्वा तान् मूर्ध्नि सोऽप्यदधात् प्रभुः ।
तेजसा वृद्धमात्मानं अमन्यत धृताक्षतः ॥

மந்த்ராக்ஷதான் க்ருஹீத்வா தான் மூர்த்னி
ஸோऽப்யததாத் ப்ரபு: ।
தேஜஸா வருத்தமாத்மாநம் அமந்யத த்ருதாக்ஷத: ॥

பிறகு கிரீடம் முதலியது தரித்துக்கொண்டு ராஜாஸனத்தில் கீழ்திசை நோக்கி அமர்ந்துகொண்டு பிராஹ்மணர்களுக்கு ஜபதக்ஷிணை கொடுக்க ஆரம்பித்தார். எந்த தேவதையானாலும் வஸ்திரம் தக்ஷிணையாகும் என்ற முறைப்படி வஸ்திரங்களாகவே தக்ஷிணை கொடுக்கப்பட்டது.

वासोऽत्र सर्वदैवत्यं दक्षिणा तेन कल्पिता ।

வாஸோऽத்ர ஸர்வதைவத்யம் தக்ஷிணா தேந கல்பிதா ।

முன் குறித்துவைத்திருந்தபடி ரிக்வேதிகள், யஜுர்வேதிகள், ஸாமவேதிகள், அதர்வண வேதிகள் என்ற கிரமப்படி ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் யோக்கியதையின் தாரதம்யத்தையனுஸரித்து வஸ்திரம் கொடுக்கப்பட்டது. வஸ்திரங்களைப் பெற்றுக்கொள்ளும்போதே, சிலர் பதக்கிரமம் சொல்வார்கள், சிலர் ஜடை சொல்வார்கள், மற்றவர்கள் நமஸ்கரிப்பார்கள். இவ்விதமாக கல்பலதை போலுள்ள ஸ்ரீ ஸ்வாமிகளின் ஹஸ்தம் ஆயிரக்கணக்கான வஸ்திரங்களை வர்ஷித்த பிறகு அவர்கள் ஸ்ரீமடத்திற்குள் போய்விட்டார்கள்.

तथा क्रमेण विप्रेभ्यो यतिराजस्य धीमतः ।
भुजकल्पलता तस्य वासोवर्षं ववर्ष ह ॥

एवं द्विजेभ्यो वासांसि दत्वा श्रीमान् सहस्रशः ।
परिश्रान्तभुजो भूत्वा स्वान्तर्मठमुपाविशत् ॥

ததா க்ரமேண விப்ரேப்யோ யதிராஜஸ்ய தீமத: ।
புஜகல்பலதா தஸ்ய வாஸோவர்ஷம் வவர்ஷ ஹ ॥

ஏவம் த்விஜேப்யோ வாஸாம்ஸி தத்வா ஸ்ரீமான் ஸஹஸ்ரஶ: ।
பரிச்ராந்த புஜோ பூத்வா ஸ்வாந்தர்மடமுபாவிஶத் ॥

அதன்பிறகு எல்லாருக்கும் கிரமப்படி போஜனம் செய்து வைக்கப்பட்டது. தர்சனத்திற்கு வந்தவர்களில் அநேகர் தசமீ பூராவும் இருந்துவிட்டே போனார்கள். நவராத்திரி உத்ஸவத்திற்காக வந்திருந்த பெரியோர்களில் ஸ்வயம்பாக நியமம் வைத்துக்கொண்டு ஸ்ரீமடத்திலிருந்து அரிசி முதலிய ஸாமக்கிரிகளை மாத்திரம் பெற்றுக்கொண்டு இருப்பவர்கள் நாநூறு பேர்கள் இருக்கும். ஜடாதாரிகளுக்கும் ஹம்ஸ பரமஹம்ஸர்களுக்கும் விதவைகளுக்கும் அநாதர்களுக்கும் கணக்கேயில்லை. வேலை செய்வதற்காக வந்து போய்க்கொண்டு அரிசி வாங்கிக்கொண்டவர் இரண்டாயிரத்திற்குமேலிருக்கும். நன்கு பேசக்கூடியவர்களும் பாடக்கூடியவர்களும் நாநூறு பேர். நல்ல சாரீரத்தோடு கூடினவர்களும் வீணை வாசிப்போரும் இருநூறுபேர்.

स्वयंपाकस्य कर्तारो ये वृद्धा मान्यपूरुषाः ।
नवरात्रेऽत्र जगृहुः ससोपस्करतण्डुलान् ॥
येषां चतुःशतं प्रोक्तं प्रत्यहं गणकैरपि ।
जटिलानां च हंसानां गणना नेह कीर्त्यते ॥
विधवानामनाथानां गणना नेह कीर्त्यते ।
आगन्तारश्च गन्तारो द्विसहस्रान्तसंख्यकाः ॥
वाचाटानां च धृष्टानां पाठकानां चतुःशतम् ।
यूनां च रक्तकण्ठानां वैणिकानां शतद्वयम् ॥

ஸ்வயம்பாகஸ்ய கர்த்தாரோ யே வ்ருத்தா மான்ய பூருஷா: ।
நவராத்ரேZத்ர ஜக்ருஹு: ஸஸோபஸ்கர தண்டுலான் ॥
யேஷாம் சது:ஶதம் ப்ரோக்தம் ப்ரத்யஹம் கணகைரபி ।
ஜடிலாநாம் ச ஹம்ஸாநாம் கணநா நேஹ கீர்த்யதே ॥
விதவாநாமநாதாநாம் கணநா நேஹ கீர்த்யதே ।
ஆகந்தாரச்ச கந்தாரோ த்விஸஹஸ்ராந்த ஸங்க்யகா: ॥

வாசாடாநாம் ச த்ருஷ்டாநாம் பாடகாநாம் சதுச்ஶதம் |
யூநாம் ச ரக்த கண்டாநும் வைணிகாநாம் ஶதத்வயம் ||

பாடகர்களும் வைணிகர்களும் ஏகாதசி முதல் பௌர்ணமீ வரை தங்கி, அவரவர்கள் தாரதம்யப்படி வஸ்திரமோ நாணயமோ ஸன்மானம் பெற்று, ஒவ்வொருவராக விடைபெற்றுக்கொண்டார்கள். அப்படியே மற்ற வித்வான்களும் யோக்யதைக்குத் தக்கபடி வஸ்திரமோ, பொன்னே, ஸன்மானம் பெற்று அவரவர்கள் ஊர்களுக்கு திரும்பினூர்கள். இவ்விதமாக உத்ஸவம் வெகுசிறப்பாக நடந்து எல்லோரும் வழியனுப்பப்பட்டார்கள்.

இதே ரீதியிலேயே பிரதி வருஷமும் உத்ஸவம் நடத்திக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகள் வெகு கியாதியுடன் விளங்கினூர்.

प्रतिसंवत्सरं चेद्दगुत्सवस्य विधायिनः ।
सच्चिदानन्दभारत्या यशोज्योत्स्नाभिरेव हि ।
व्याप्तमासीदशेषेण यदेतद्भुवनत्रयम् ॥

ப்ரதிஸம்வத்ஸரம் சேத்ருகுத்ஸவஸ்ய விதாயிந: |
ஸச்சிதானந்தபாரத்யா யஶோஜ்யோத்ஸ்நாபிரேவ ஹி |
வ்யாப்தமாஸீதஶேஷேண யதேதத் புவநத்ரயம் ||



## அத்யாயம் 4

## கலசபுர விஜயம்

ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகள் இவ்விதமாக தக்ஷிணாம்நாய பீடத்தில் வீற்றிருந்து நவராத்திரி முதலிய அநேகம் உத்ஸவங்களை நடத்திக்கொண்டு தர்ம ஸாம்ராஜ்ய நிர்வாஹம் செய்துவந்தார். இவர் பீடத்திற்கு வந்து சில வருஷங்களுக்குள், சிருங்கேரி ஸம்ஸ்தானத்திற்கு பலவிதத்திலும் மிகவும் ஆதரவு கொடுத்து வந்த இக்கேரி அரசர் வெங்கடப்ப நாயக்கர் காலகதியடைந்துவிட்டார். அவருடைய பௌத்திரரான வீரபத்திர நாயக்கர் அந்த ராஜ்யத்திற்கு அதிபதியாக ஆனார். அப்பொழுது அவருக்கு வயது பதினறுதானிருக்கும். வெங்கடப்பநாயக்கரால் முன் நிக்ரஹிக்கப்பட்டிருந்த சிலர், வீரபத்திர நாயக்கரின் இளமையை உத்தேசித்து இதுதான் ஸமயமென்று நினைத்து ஒன்றுசேர்ந்துகொண்டு தங்கள் ஆளுகையை ஸ்தாபித்துக் கொள்ள யத்தனித்தார்கள். அவர்களில் முக்கியமாக பைரவன் என்பவன் ஸைன்யங்களைச் சேர்த்துக்கொண்டு பலாத்காரமாக அநேகம் கோட்டைகளையும் ஊர்களையும் பிடித்துக்கொண்டு கலசபுரம் என்றவிடத்தில் ஆட்சிபுரியத் தலைப்பட்டான். அவன் பிடித்துக்கொண்ட ஊர்களில் சிருங்கேரியும் சேர்ந்துவிட்டபடியால், நகரவாஸிகள் மிகவும் நடுங்கினார்கள். சிருங்கேரியிலிருந்து மற்றவிடங்களுக்குப் போகும் மார்க்கங்கள் யாவும் பைரவனுடைய ஸைநிகர்களால் வியாபிக்கப்பட்டுவிட்டபடியால் ஸ்ரீமத் ஆசார்யார் வீரபத்திர நாயக்கருக்குச் சொல்லியனுப்பக்கூட அவகாசம் இல்லாமல் போய்விட்டது.

இந்த ஸந்தர்ப்பத்தில் பைரவனுக்கு ஸ்ரீமடம் சொத்துக்களை அபஹரிக்க வேண்டுமென்ற எண்ணம் இருந்தபோதிலும், தான் ஆசார்யாரை தர்சிக்கப் பிரியப்படுவதாக ஒரு தூதர்மூலம் சொல்லியனுப்பினான். எதற்கும் பயப்படாத

ஸ்வபாவத்தோடு கூடிய ஸ்ரீ ஸ்வாமிகள் உடனே சிருங்கேரியிலிருந்து தன் பரிவாரங்களுடன் புறப்பட்டு அநேக குன்றுகளையும் மூங்கில் காடுகளையும் கடந்து கலசபுரம் நோக்கிச் சென்றூர்கள். இவ்விஷயம் தெரிந்து ஸைநிகர்கள் எதிர் கொண்டுவந்து வெகு விநயத்துடன் நமஸ்கரித்து கலச புரிக்கு அழைத்துச் சென்றூர்கள். போகும் வழியில் பத்ரா நதியின் புண்ய தீர்த்தத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் கிரமப்படி ஸ்நாநாதிகளைச் செய்து ஒரு பெரிய பாறையில் ஸ்ரீ சந்திர மௌளீசுவரர் முதலான தேவதைகளை யதாக்கிரமமாக ஆராதனை செய்துவிட்டு நதிக்கரையில் நிர்மாணம் செய்யப் பட்டிருந்த விடுதியில் அன்றிரவு தங்கினூர். மறுநாள் காலையில் மறுபடியும் பல்லக்கில் ஏறிப் போய்க்கொண்டிருக்கையில் பைரவராஜனே எதிர்கொண்டுவந்து ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆசீர்வாதத்தைப் பெற்றூன். பிறகு இருவருமாகவே கொஞ்சதூரம் சேர்ந்துசென்று ஸ்ரீ கலசேசருடைய ஆலயத்திற்குள் பிரவேசித்தார்கள்.

அகஸ்திய முனிவர் ஆவிர்பாவமான கலசத்தில் மஹாதேவர் எப்பொழுதும் ஸாந்நித்யமடைந்து அனுக்ரஹிக்க வேண்டுமென்று அம்முனிவரின் பிரார்த்தனைக்கு இணங்கி பகவான் அருள் புரிந்து வரும் ஸ்தலம் இது. அங்கு போய் பக்திபரவசராய் நிற்கும் ஸ்ரீமத் ஆசார்யாரின் பிரபாவத்தைக் கண்டு, பண ஆசை பிடித்த பைரவனுக்குக்கூட பயம் ஏற்பட்டது.

भक्तं भक्तिमतां श्रेष्ठं सच्चिदानन्दयोगिनम् ।
दृष्ट्वा द्रव्यजिघृक्षुस्तु तत एव च भूपतिः ।
भैरवाख्यो बिभायैव तपसा चास्य धीमतः ॥

பக்தம் பக்திமதாம் ச்ரேஷ்டம் ஸச்சிதாநந்தயோகிநம் ।
த்ருஷ்ட்வா த்ரவ்ய ஜிக்ருக்ஷுஸ்து தத ஏவ ச பூபதி: ।
பைரவாக்யோ பிபாயைவ தபஸா சாஸ்ய தீமத: ॥

பிறகு பிரதக்ஷிணமாக அம்பிகையின் ஆலயம் வந்து அங்கேயும் தர்சனம் செய்து பிரஸாதம் பெற்றுக்கொண்டு, ஸமீபத்திலுள்ள ஒரு விசாலமான அங்கணத்தில் ராஜாஸனம் போட்டிருந்த இடம்வந்து அரசனால் மிகவும் வெகுமானிக்கப் பட்டு ஸ்ரீஸ்வாமிகள் அவ்வாஸனத்தில் அமர்ந்தார். பிறகு ஸ்ரீஸ்வாமிகள் செய்த ஒரு அத்புதமான பிரஸங்கத்தைக் கேட்டு அரசன் மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தான். தன்னுடைய துர் எண்ணத்தை வெளிக்காட்ட முடியாமல் உள்ளடக்கிக்கொண்டான். ஆனாலும் ஸ்ரீஸ்வாமிகளை பய முறுத்தக் கருதி, உறுவின கத்திகளோடு கூடிய தன் இரண் டாயிரம் வீரர்களை நமஸ்கரிக்கச் செய்தான். அப்படியும் பகவானையே சரணமாகக் கொண்ட ஸ்ரீ ஸ்வாமிகள் கொஞ்சமேனும் பயப்படவில்லை.

वशीकृतः स्तवेनापि तपसा मन्त्रशक्तितः ।
अन्तर्द्रव्यजिघृक्षातो व्याप्तो योगिमहीभृतेः ॥

स्वकीयान् दर्शयामास नमस्कारस्य कैतवात् ।
अकोशखड्गसंपन्नान् द्विसहस्रान्तपूरुषान् ॥

शङ्कमानश्च राजानं तपोबलमुपाश्रितः ।
गोविन्दशरणो भूत्वा नाबिभेद्भूभृतस्ततः ॥

வஶீக்ருத: ஸ்தவேநாபி தபஸா மந்த்ர ஶக்தித: ।
அந்தர்த்ரவ்ய ஜிக்ருக்ஷாதோ வ்யாப்தோ யோகி மஹீப்ருதே: ॥

ஸ்வகீயான் தர்ஶயாமாஸ நமஸ்காரஸ்ய கைதவாத் ।
அகோஶ கட்க ஸம்பந்நான் த்விஸஹஸ்ராந்த பூருஷான் ॥

ஶங்கமாநச்ச ராஜாநம் தபோபலமுபாச்ரித: ।
கோவிந்த ஶரணோ பூத்வா நாபிபைத் பூப்ருதஸ்ததா ॥

பிறகு அரசனாலேயே ஹஸ்தலாகவம் கொடுக்கப்பட்டு ஆஸனத்திலிருந்து இறங்கி, அரசனால் வழியனுப்பப்பட்டு,

ஸ்ரீஸ்வாமிகள் தம் இருப்பிடம் வந்து சேர்ந்தார். அவ்விடத்திலேயே பிரதிதினம் பத்ரா நதியில் ஸ்நாநம் செய்து பூஜை முதலானதுகளை நடத்திக்கொண்டு அநேகமாய் மகர மாஸம் பூராவும் தங்கிவிட்டார்.

அங்கிருந்து கொஞ்ச தூரத்தில் ஸோமவாஹீ என்ற நதியும் பத்ராவும் சேரும் உத்தம ஸ்தலம் இருந்தது. அங்குள்ள வேத பாதமென்ற மலையின் அடிவாரத்தில் லோகபிதாமஹரான பிரஹ்மா யாகம் செய்ததாகவும் யாகம் முடிந்தபிறகு யக்ஞ பாத்திரங்களை அலம்பிவிட்ட ஜலமே ஸோமவாஹீ என்ற நதியாக மாறிவிட்டதாகவும் அதன் தீர்த்தத்தை பானம் செய்கிறவர்களுக்கு ஸோமபானம் செய்த புண்ணியமேற்பட்டு ஸ்வர்க்கமே கிடைக்குமென்றும் சொல்லப்படுகிறது. இந்தப் புண்ணிய ஸ்தலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் ஸ்நாநம் செய்ய நினைத்து அங்கே போய் ஸ்நாநம் ஆஹ்நிகாதிகளை முடித்துக்கொண்டதுடன் ஸோமவாஹியைப் பற்றி புகழ்ந்திருக்கும் ஸ்காந்த புராணத்திலுள்ள அம்சங்களை வாசிக்கச் சொல்லி சிரவணம் செய்தார்.

सा नदी पुण्यसलिला सोमपानफलप्रदा ।
पातॄणां पुण्यजननी स्वर्गलोकप्रदायिनी ॥

कृतान्हिकः कृतजपः पुराणमशृणोत् परम् ।
स्कान्दे पुराणे संपन्नं (संबद्धं) सोमवाहीप्रशंसनम् ॥

ஸா நதீ புண்ய ஸலிலா ஸோமபானபலப்ரதா ।
பாத்ரூணாம் புண்ய ஜநநீ ஸ்வர்கலோக ப்ரதாயினீ ॥

க்ருதாஹ்னிக: க்ருதஜப: புராணமச்ருணோத்பரம் ।
ஸ்காந்தே புராணே ஸம்பந்நம் (ஸம்பத்தம்) ஸோமவாஹீ ப்ரசம்ஸநம் ॥

அங்கு ஒரு தடவை ஸ்நாநம் செய்ததில் திருப்திப் படாமல் மறுபடியும் ஸ்நாநம் செய்துவிட்டுத் திரும்பி தன்

இருப்பிடம் வந்து சேர்ந்தார். ரத ஸப்தமிக்குப் பிறகு மறுபடியும் கலசேசரை தர்சித்துக்கொண்டார். இவ்விதமாக ஆனந்தமாக பத்ரா நதிக்கரையில் வாஸம் செய்துவிட்டு பௌர்ணமியானபிறகு அரசனிடம் விடை பெற்றுக்கொண்டு அங்கிருந்து தன் பரிவாரங்களுடன் பல்லக்கேறிப் புறப்பட்டார். ஒரு யோஜன தூரம் சென்று சாயங்காலமாக "தப்தசிலாதலம்" என்ற பிரதேசம் வந்துசேர்ந்தார். பின்னால் மெதுவாகவே, ஸ்ரீஸ்வாமிகளின் பூர்வாசிரம தமக்கை புருஷரான கங்காதரபட்டரும், தகப்பனார் அளகாத்ரி பட்டரும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அன்றிரவிலேயே இரண்டு க்ரோச தூரம் போய் ஒரு கிருஹஸ்தரால் செய்யப்பட்ட விசேஷமான ஆதித்யத்தைப் பெற்றுக்கொண்டு தங்கிவிட்டு மறுநாள் காலையில் ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு ஒரு மலையேறி இறங்கினவுடன் தன் ஸம்ஸ்தான எல்லைக்குள் பிரவேசித்தார்.

பைரவ அரசன் அழைத்தானேயென்று ஸ்ரீ ஸ்வாமிகள் புறப்படுவதில் மிகவும் கவலைப்பட்டுக்கொண்டிருந்த பிரஜைகள் ஸ்ரீஸ்வாமிகள் க்ஷேமமாய் திரும்பிவந்ததைக் கண்டு மிகவும் ஸந்தோஷித்தார்கள்.

असुरेन्द्रसमानेन पुरा भैरवभूभृता ।
आकार्यमाणे योगीन्द्रे सर्वे विमनसोऽभवन् ॥

तस्मिन् पुनर्यतिक्ष्मेन्द्रे कुशलेन समागते ।
सूर्योदयमिवासाद्य सर्वे चिन्तातमो जहुः ॥

அஸுரேந்த்ர ஸமாநேந புரா பைரவ பூப்ருதா ।
ஆகார்யமாணே யோகீந்த்ரே ஸர்வே விமநஸோऽபவன் ॥

தஸ்மின் புநர் யதிக்ஷ்மேந்த்ரே குஶலேன ஸமாகதே ।
ஸூர்யோதயமிவாஸாத்ய ஸர்வே சிந்தா தமோ ஜஹு: ॥

அங்கிருந்து இன்னம் இரண்டு க்ரோசம் போய் வைகுண்டபுரம் சேர்ந்து அங்குள்ள விட்டலரையும் பரமேசுவரரையும் ஸேவித்துவிட்டு "அயாசிதர்" என்று பிரஸித்தியடைந்தவரின் கிருஹத்தில், ஸ்ரீராமர் பரத்வாஜாசிரமத்தில் போல, ஸந்தோஷமாய் தங்கினார். மறுபடியும் அங்கிருந்து புறப்பட்டு பைரவர் மலையையும் துங்கா நதியையும் கடந்து சிருங்கேரி நகரத்தில் பிரவேசித்தார். எல்லோராலேயும் விசேஷமாக வரவேற்கப்பட்டு, ஸ்ரீ சாரதா தேவியை தர்சித்து நமஸ்கரித்துப் பிரஸாதம் பெற்றுக்கொண்டு ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீமடத்திற்குத் திரும்பிவந்து சேர்ந்தார்.

---

## அத்யாயம் 5

## பைரவன் ஆளுகை

பைரவனுடைய ஆக்ரமிப்பு இருக்கும் வரை உபத்திரவம் இருந்தே தீருமென்று உணர்ந்த சில தனிகர்களும், வியாபாரிகளும் சிருங்கேரியை விட்டே வெளிக்கிளம்பி விட்டார்கள். மற்றவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளின் தபஸ் சக்தியையே நம்பிக்கொண்டு மிகக் கவலையுடன் காலம் கழித்து வந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளும் தபஸ்தான் தகுந்த ஸாதனமென்று பகவானையே சரணமடைந்து தேவதாராதனம் முதலியவைகளில் மிகவும் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்.

இவ்விதமிருந்துவருகையில் ஸ்ரீமடத்தில் அதிகாரியாயிருந்த ஞானேந்திரபட்டர் என்பவர் அரசனுடைய பிரீதியை ஸம்பாதிக்க எண்ணி அவனுக்கு ஐநூறு வராகன் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டுவிட்டார். இவ்விஷயம் தெரிந்தவுடன் ஸ்ரீஸ்வாமிகள் அவ்வதிகாரியை பலவாறு கோபித்துக்கொண்டபோதிலும், வேறு வழியில்லாமல் அவர் மூலமாகவே பிரஜைகளிடமிருந்து மிகவும் சிரமப்பட்டு இப்பணம் சேகரிக்கப்பட்டது. இதைப் பெற்றுக்கொள்வதற்காக பைரவனே சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீ சாரதாம்பா

ஸந்நிதியில் ஸ்ரீஸ்வாமிகளை தர்சித்தான். அவ்வூரையே பிடிக்க நினைத்தவன் ஸ்ரீ ஸ்வாமிகளுடைய தபஸ்ஸையும், மந்திர சக்தியையும் கவனித்து பயமடைந்தபடியால், அங்கு கோட்டை கட்டவாவது அதில் தன் ஸைநிகர்களை வைக்கவாவது யாதொன்றும் செய்யவில்லை. பணத்தைப் பெற்றுக் கொண்டு "காரகலம்" என்ற ஊருக்குப் போய்விட்டான். அவன் அங்கே தங்கியிருந்தஸமயம், வீரபத்திர நாயக்கருடைய குதிரைப் பட்டாளம் அங்கு வந்து பைரவனுடைய ஸைன்யத்தை எதிர்த்துப் பார்த்தும் பிரயோஜனப்படாமல் சிதறிவிட்டது. அப்பொழுது ஸ்ரீமடம் நிர்வாகமே மிகச் சிரமப்பட்டுதான் நடந்தது. முன்னிருந்த ஸௌகர்யத்தில் கால்வாசிதான் இருந்தபடியால், ஸ்ரீமடம் கார்யங்களும் ஸங்கிரஹமாகவே நடத்தும்படி ஏற்பட்டது.

राजदोषेण तेनापि कालदोषेण तेन च ।

तदानीं तन्मठैश्वर्यं पादमात्रं व्यवस्थितम् ।
मठधर्माः समस्ताश्च पादमात्रं प्रचालिताः ॥

ராஜதோஷேண தேநாபி காலதோஷேண தேந ச 1

ததாநீம் தன்மடைச்வர்யம் பாதமாத்ரம் வ்யவஸ்திதம் 1
மடதர்மா: ஸமஸ்தாச்ச பாதமாத்ரம் ப்ரசாலிதா: 11

இவ்விதமாக ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீ சாரதாம்பாளை ஸேவித்துக்கொண்டும், தபஸ் செய்துகொண்டும், புராணங்களை சிரவணம் செய்துகொண்டும் இருந்து வருகையில் ஒரு வருஷ காலம் சென்றது. அதற்குள் வீரபத்திர நாயக்கர் விசேஷமாக சதுரங்க சைன்யத்தை சேகரித்துக்கொண்டு வந்து பைரவனை தாக்கினதில் மிகவும் பலமாக யுத்தம் நடந்தது அதில் பைரவனுடைய ஸேனாதிபதியின் தலை அறுக்கப்பட்டுவிட்டதால் அந்த ஸைன்யம் ஓடவாரம்பித்து விட்டது. வீரபத்திர நாயக்கர் ஸ்வபாவத்திலேயே

ஸ்ரீமடத்தில் விசேஷ அபிமானமுள்ளவராதலால், அவர் வெற்றி அடைந்ததைக் கேட்ட சிருங்கேரி நகரவாசிகள் யாவரும் வெகு ஸந்தோஷமடைந்தார்கள்.

मोदते शृङ्गनगरं समागमनतः प्रभोः ।
केलदीगृहिणस्तस्य तद्धि मित्रं स्वभावतः ॥

மோததே ச்ருங்க நகரம் ஸமாகமநத: ப்ரபோ: I
கௌதீ க்ருஹிணஸ்தஸ்ய தத்தி மித்ரம் ஸ்வபாவத: II

இதன் மத்தியில் வீரபத்திர நாயக்கர் தன் ராஜதானியை விட்டு வெளியில் போயிருக்கிற ஸமயத்தை உபயோகித்துக்கொண்டு, முன்னால் வெங்கடப்ப நாயக்கரால் நிக்ரஹம் செய்து காராகிருஹத்தில் வைக்கப்பட்டிருந்த அவருடைய ஸஹோதரரின் புத்திரனை வீரன் என்பவன் சிலர்களின் உதவியினால் வெளிக்கிளம்பி இக்கேரி நகரத்தையே ஸ்வாதீனம் செய்துகொண்டுவிட்டான். அத்துடன் நிற்காமல் ராஜ்யத்திலேயே மூன்றில் இரண்டு பாகங்களைப் பிடித்துக்கொண்டுவிட்டான். அப்பொழுது பார்க்கவ க்ஷேத்திரத்திலிருந்த வீரபத்திரர் மிகவும் துக்கத்தை அடைந்தார். தன்னுடைய ராஜதானிக்குத் திரும்பிப்போக இடமில்லாததினால் வேறு இடத்தில் இருக்கும்படி ஏற்பட்டது. ஆகையால் ஆனந்தபுரம் சென்று அங்கு தங்கினார். அவ்விடத்தில் வேங்கடப்ப நாயகரால் வெகு பலமாக ஒரு கோட்டை கட்டி அதில் ஏராளமாக தனமும் சேகரித்து வைக்கப்பட்டிருந்தது. அதன் ரக்ஷகன் வீரபத்திரருக்கு அதீனமாயிருந்தபடியால் அங்குள்ள லக்ஷக்கணக்கான தனத்தைக் கைக்கொண்டு அதன் உதவியால் கிராதர்களுக்கு அதிபதியாயிருந்த ஹநுமான் என்பவனுடைய ஸஹாயத்தை வீரபத்திரர் அடைவதற்கு இடம் கிடைத்தது. இந்த ஹநுமாநின் உதவியால் ஒரு சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு தன் கைவசமுள்ள ஸைன்யத்தைக்கொண்டு வீரனுடன் யுத்தம் செய்ய ஆரம்பித்தார். ஆனால் இருவரும்

தோல்வியுமடையாமல் வெற்றியுமடையாமல் அப்படியே இரு சைன்யங்களும் நின்று விலகும்படி ஏற்பட்டுவிட்டது.

இவ்விதமாக வீரபத்திரர் சிருங்கேரியில் பைரவன் சைன்யத்தைத் தோற்கடித்தபோதிலும் தன் ராஜதானிக்குத் திரும்பமுடியாமல் பலவித இடஞ்சல்களுக்கு உட்பட்டிருக்கும் ஸமயத்தில் பைரவன் தன் ஆளுகையை ஸ்திரப்படுத்திக்கொண்டான். வீரபத்திரர் சிருங்கேரிக்கு வந்திருந்தபோது அங்குள்ள ஜனங்கள் உத்ஸாகமாக வரவேற்றார்களென்பதில் வெகு கோபம் கொண்டு அநேகர் சொத்துக்களை அபஹரித்துக்கொண்டான். கொண்டபட்டர் முதலானவர்களை பலாத்காரமாக காராகிருஹத்தில் வைத்தான். இதையெல்லாம் அறிந்த ஸ்ரீ ஸ்வாமிகள் பல தடவை எழுத்துமூலமாகவே பைரவனைக் கேட்டுக்கொண்ட போதிலும் அவன் கொஞ்சமேனும் இசையவில்லை. மனிதர்களைப் பிடிப்பது, விலங்கிடுவது, காராகிருஹத்தில் அடைப்பது, விட்டுவிடுவது, மறுபடியும் பிடிப்பது, இவ்விதமாக நான்கு மாஸ காலம் மிகவும் சிரமப்படுத்தினன். இந்த ஆபத்து நிவிருத்தியாவதற்கும் தபஸ்ஸையே ஸாதனமாக ஸ்ரீஸ்வாமிகள் அனுஷ்டித்து வந்தார்கள்.

विपरीतं नृपं दृष्ट्वा तपः परमपद्यत ।
स्थानस्य रक्षणार्थाय विपत्तेर्विनिवृत्तये ॥

விபரீதம் ந்ருபம் த்ருஷ்ட்வா தப: பரமபத்யத I
ஸ்தானஸ்ய ரக்ஷணார்த்தாய விபத்தேர் விநிவ்ருத்தயே II

பிரஜைகள் இவ்விதம் நிர்பந்தப் படுவதைப் பார்த்து பயமடைந்தவர்களாக ஸ்ரீமடத்திலுள்ள சிலர்களும் ஸ்ரீமடத்தை விட்டுவிட்டு ஆனந்தபுரத்திலிருந்த வீரபத்திரருடைய ஸேவையில் சேர்ந்துகொண்டார்கள். ஸ்ரீஸ்வாமிகள் மலஹானிகரேசுவரருக்கு உத்தமமான பிராஹ்மணர்களைக்கொண்டு பதினாயிரம் ருத்ராபிஷேகம்

செய்வித்தார். மறுபடியும் இன்னொரு பதினாயிரம் ருத்ராபிஷேகமும் நடத்தினர். தக்ஷிணை, அன்னதானம் முதலானது வெகு சிறப்பாகச் செய்யப்பட்டது.

இவ்விதமாக சிருங்கேரி நகரம் மிகவும் கலங்கியிருக்கும் ஸமயத்தில், முன் பிரஸ்தாபித்த ஞானேந்திரபட்டரென்ற அதிகாரி, ஸ்ரீஸ்வாமிகளைக் கேட்காமலே, பைரவனுக்கு இன்னம் இரண்டாயிரத்தி ஐநூறு வராகன் கொடுத்து விடுவதாக ஏற்றுக்கொண்டுவிட்டார். இதைக்கேட்டு ஸ்ரீஸ்வாமிகள் மிகவும் துக்கத்தையடைந்து, ஸ்ரீமடத்தில் தங்க இஷ்டமில்லாமல் பச்சிம வாஹிநீ என்ற ஸ்தலத்திற்குப் போய் அங்கு தங்கிவிட்டார்.

मम कोशविहीनस्य दानमीदृक् कुतो भवेत् ।
इति विस्मयमापद्य शोकं परममास्थितः ॥

पश्चिमाभिमुखीं प्राप्य वाराहीं तरुशोभिताम् ।
स्थितोऽभूत् स तपस्वी च त्यक्तस्थान इव स्वयम् ॥

மம கோஶ விஹீநஸ்ய தானமீத்ருக் குதோ பவேத் ।
இதி விஸ்மயமாபத்ய ஶோகம் பரமமாஸ்த்தித: ॥

பச்சிமாபிமுகீம் ப்ராப்ய வாராஹீம் தருஶோபிதாம் ।
ஸ்திதோऽபூத் ஸ தபஸ்வீ ச த்யக்தஸ்தான இவஸ்வயம் ॥

முன்போலவே பிரஜைகளிடமிருந்து தனத்தை சேகரித்து பைரவனுக்குக் கொடுத்துவிட ஞானேந்திரனே முன் வந்தான். ஊர் பூராவும் தத்தளித்தது. பைரவனுடைய ஸேனாதிபதியான கால நாயக்கன் முதலானவர்களும் ஞானேந்திரனுடன் பச்சிம வாஹிநீதீரம் சென்று ஸ்ரீஸ்வாமிகளை ஊருக்குத் திரும்பி வந்துவிடவேண்டுமென்று மிக வினயத்துடன் பிரார்த்தித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகள் அரசன் செய்யும் தீயச் செயல்களை எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் பிரயோஜனப்படவில்லை. கடைசியாக

ஸ்ரீஸ்வாமிகள் தனக்குள்ளேயே ஒரு தீர்மானத்திற்கு வந்து, கோபத்துடனேயே சிருங்கேரிக்குத் திரும்பினார்.

महान्तो दुर्बला वाऽपि स्वमहत्त्वानुसारतः ।
मतिं कुर्वन्ति गम्भीरां मा वा सिध्यतु सिध्यतु ॥

ततस्तु स्थानतस्तस्मात् उत्थितो यतिपार्थिवः ।
मन्युना दीप्यमानश्च स्वपुरं प्रत्यपद्यत ॥

மஹாந்தோ துர்பலா வாபி ஸ்வமஹத்வாநுஸாரத: ।
மதிம் குர்வந்தி கம்பீராம் மா வா ஸித்யது ஸித்யது ॥

ததஸ்து ஸ்தானதஸ்தஸ்மாத் உத்திதோ யதி பார்த்திவ: ।
மந்யுநா தீப்யமானச்ச ஸ்வபுரம் ப்ரத்யபத்யத ॥

மறுநாள் கால நாயக்கன் முதலானவர்கள் ஸ்ரீமடம் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளிடம் பணம் விஷயமாக பிரஸ்தாபித்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் தன்னை ஆசிரயித்தவர்களை ரக்ஷிப்பதிலேயே ஊக்கமுள்ளவர்களாதலால் இனி ஜனங்களை நிர்பந்தம் செய்யாமலும் தன்னை உபத்திரவிக்காமலும் இருப்பதானல் மாத்திரம் பணம் கொடுப்பதாக ஸம்மதித்தார். அப்படியே ஞானேந்திரன் மூலம் அப்பணம் கொடுபட்ட பிறகு தான் பைரவன் அடங்கினன். இப்பெரும் தனம் சேகரிப்பதனல் ஜனங்கள் அடைந்த சிரமத்திற்கு அளவே இல்லை. ஸ்ரீஸ்வாமிகளும் வெகு துக்கத்தையடைந்து ஸகல வித உபத்திரவங்களும் நிவிருத்தியாவதற்காக ஜபம், தபஸ், ஆராதனம், இவைகளையே அனுஷ்டித்துக்கொண்டு ஒரு வருஷ காலம் சிருங்கேரியில் இருந்து வந்தார். பிறகு தபஸ் ஸௌகர்யத்தையுத்தேசித்து துங்கா நதிக்கரையில் உள்ள "பஞ்ச பாஷாணம்" என்றவிடம் சென்று அங்கு தங்கிவந்தார்.

அவ்விதம் தங்கியிருக்கும்போது வீரபத்திரரைச்சேர்ந்த ஒருவர் வந்து ஸ்ரீமத் ஆசார்யரை நமஸ்கரித்து தன் யஜமானருக்கு மறுபடியும் ராஜ்யம் கிடைக்கும்படி

ஆசிர்வதிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்படியே கிடைக்குமென்று ஸ்ரீ ஸ்வாமிகளும் உத்தரவிட்டார்கள்.

இந்த ஸமயம் இக்கேரியை ஆக்ரமித்துக்கொண்டிருந்த வீரன் என்பவன் காலமாகிவிட்டான். உடனே அங்குள்ள வீரபத்திரநாயக்கரே மறுபடியும் அரசராக வரவேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு, ஸேனாதிபதியின் புத்திரனை ஆனந்தபுரம் அனுப்பி வீரபத்திரரை அழைத்துவரும்படி ஏற்பாடு செய்தார்கள். அப்படியே வீரபத்திரரும் இசைந்து இக்கேரிக்குச் சென்று ராஜ்ய நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டார். தனக்கு முன் கெடுதல் செய்த சிலர்களை மாத்திரம் நிக்கிரஹம் செய்தார்; தன் தாயாரின் சொல்படி சிலர்களை மன்னித்துவிட்டார்.

இவ்விதம் வீரபத்திர நாயக்கர் மறுபடியும் இக்கேரியில் ராஜ்ய பரிபாலனம் செய்துவரும்போது, பைரவனும் சிருங்கேரியில் துன்பம் செய்யவில்லை. அவன் போக்குஞ்ஜி என்ற ஊரில் இருப்பதாக ஸ்ரீ ஸ்வாமிகள் கேள்விப்பட்டு அவனைப் பார்ப்பதற்காக தானே புறப்பட்டுப்போனார். சென்ற விடத்தில் தன்னுடைய அழகான பிரஸங்கத்தினால் அரசனை வசப்படுத்திக்கொண்டார். ஸ்ரீ ஸ்வாமிகளின் பூர்வாசிரம மாமன்களாகிய வெங்கடாசல தீக்ஷிதர் யல்லாவதானிகள் முதலானவர்களும் ஸோமநாதர் முதலான பிரஸித்த பண்டிதர்களும் ஆச்சர்யமடைந்தார்களென்றால் பைரவன் மிகவும் ஆச்சர்யப் பட்டானென்று சொல்லத் தேவையில்லை. ஸ்ரீ ஸ்வாமிகள் அவ்வூரிலுள்ள தேவாலயத்தில் ஹரிஹரர்களை ஸேவித்துக்கொண்டார். அவ்வூரில் ஒரு பக்ஷ காலம் தங்கியிருந்தார். பிறகு பல்லக்கேறி கிரமமாக சிருங்கேரிக்குத் திரும்பிவந்து சேர்ந்தார். மலஹானிகரேசுவரரையும் சாரதாம்பிகையையும் ஸேவித்துவிட்டு ஸ்ரீமடம் சென்றார். பிறகு தன்னுடைய நித்திய நைமித்திக் கர்மாக்களையும் ஸ்ரீமடம் காரியங்களையும் சரிவர நடத்திக்கொண்டுவந்தார்.

அப்படியிருந்துவருகையில் திருமலைபட்டர் என்பவர், வைசம்பாயனருக்கு ஸமானமான யோக்யதையுள்ளவர், மஹாபாரதத்தில் ஆதிபர்வத்திலிருந்து தர்மபுத்திரரின் பட்டாபிஷேகம் வரையுள்ள வரலாற்றை வெகு விஸ்தார மாக பிரவசனம் செய்தார். அப்படியே, ஸூதருக்கு ஸமான மாயிருந்த அஹோபலபட்டர் என்பவர் ஸ்ரீராமருடைய பட்டாபிஷேகம் வரை ஸ்ரீமத்ராமாயணத்தை வெகு அழகாக பிரவசனம் செய்தார்.

ஸ்ரீ ராமசரித்திரம் ஸ்ரீ ஸ்வாமிகளின் மனதில் ஓடிக் கொண்டேயிருந்தபடியால், அதை நூறு சுலோகங்களில் ஸங்கிரஹம் செய்யவேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டது. அவ்விதம் எழுதுவதில் அநேக கதாபாகங்களை விட்டு விடும்படி ஏற்படுமென்று அகோபல பட்டர் எடுத்துச் சொன்னார். ஆயிரத்தி இருநூறு சுலோகங்களாவது எழுத வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவ்வளவு ஸாத்யப் படுமாவென்று ஸந்தேஹப்பட்டுக்கொண்டே எழுத வாரம்பித்ததில் அவ்வளவு எழுதியும் கதை அதிகமாக மேல் போகவில்லையென்பதை ஸ்ரீ ஸ்வாமிகள் உணர்ந்தார். தவிரவும் தான் எழுதுவதில் எவ்வித தோஷமும் இல்லாமல் நல்ல பதப் பிரயோகங்களுடன் அமையவேண்டுமென்று தானுகவே மேல் மேல் பரிஷ்காரம் செய்துவந்தார். இவ்வித மாக ரசனை செய்து காவியத்திற்கு **ஸ்ரீ ராமசந்திர மஹோதயம்** என்று பெயரிட்டார்.

यत्नं परममास्थाय शब्ददोषानपास्य च ।
सर्वलोकपरिग्राह्यं काव्यं कर्तुं समुद्यतः ॥

स काव्यं कुरुते योगी सच्चिदानन्दभारती ।

नृसिंहभारतीशिष्यो रामचन्द्रमहोदयम् ।
मनोज्ञपदसंदर्भं कथासर्वार्थसंग्रहम् ॥

யத்நம் பரமமாஸ்த்தாய ஶப்ததோஷாநபாஸ்ய ச ।
ஸர்வலோக பரிக்ராஹ்யம் காவ்யம் கர்தும் ஸமுத்யத: ॥

ஸ காவ்யம் குருதே யோகீ ஸச்சிதானந்தபாரதீ ।

ந்ருஸிம்ஹ பாரதீ ஶிஷ்யோ ராமசந்த்ர மஹோதயம் ।
மநோஜ்ஞ பத ஸந்தர்ப்பம் கதா ஸர்வார்த்த ஸங்க்ரஹம் ॥

இவ்விதமாக கவலையற்று ஸந்தோஷமாக மூன்று வருஷங்கள் சென்றன.

## அத்யாயம் 6

## வீரபத்திரரின் வெற்றி

பைரவனை எப்படியும் முறியடித்துவிடவேண்டுமென்ற எண்ணம் வீரபத்திர நாயக்கருக்கு இருந்துகொண்டே வந்தது. ஒரு ஸமயம் தன் ஸேனாபதியை சதுரங்க ஸைன்யத்துடன் பைரவனை ஜயித்துவரும்படி அனுப்பினர். அவன் ஆனந்தபுரம், நவநீதகிரி இவைகளைத் தாண்டி பைரவனுடைய ஆளுகையிலிருந்த பிரதேசத்தின் எல்லைக்கு வந்து சேர்ந்தான். பைரவனுடைய ஸைன்யம் எதிர்க்க வந்தது. விசேஷமான அம்புகளைப் பிரயோகித்து அந்த ஸைன்யத்தை சிதறடித்துவிட்டு எல்லைக்குள் பிரவேசித்து அங்குள்ள கோட்டையைத் தாக்கினன். ஆனல் அந்தக் கோட்டையிலிருந்த யுத்த வீரர்களிடம் இரும்பு குண்டுகள் இருந்தபடியால் அவைகளை உபயோகித்து, வீரபத்திரரின் ஸைன்யத்திலிருந்த பலசாலிகளைக் கீழே தள்ளிவிட்டு ஸந்தோஷமடைந்தார்கள் இந்த விபரம் தெரிந்து, முன் சிதறிப்போன ஸைனிகர்களும் திரும்பிவந்து சேர்ந்து கொண்டு, வீரபத்திரரின் ஸைன்யத்தைத் தாக்கினர்கள். இருதரத்தாருக்கும் யுத்தம் வெகு கோரமாக நடந்தது. கடைசியில் வீரபத்திரநாயக்கரின் ஸைனிகர்கள் வெகு சிரமப்பட்டு அக்கோட்டையை பிடித்துக்கொண்டார்கள்,

இதன் மத்தியில் பைரவனுக்கு சிருங்கேரியிலுள்ள பிரஜைகளிடம் ஸந்தேஹமிருந்து வந்தபடியால் அவர்களை தன் ஸமீபத்திலேயே இருக்கும்படி செய்ததுடன் ஸ்ரீ ஸ்வாமிகளையும் தருவித்து சத்ருவின் ஸைன்யத்தை தான் அழைப்பதில்லையென்று உறுதி சொல்லி அவர்களிடம் ஒரு எழுத்தும் வாங்கிக்கொண்டான். பைரவனுடைய உபத்ரவத்தினால் சிருங்கேரி நகரத்திலாவது ஸ்ரீமடத்திலாவது தகுந்த மனுஷ்யர்கள் கிடையாது. ஸ்ரீ ஸ்வாமிகள் மாத்திரம் தைர்யத்தை இழக்காமல் மடத்தில் இருந்துகொண்டு தபஸ் செய்துகொண்டிருந்தார். காவலாளிகள் கூட ஸ்ரீ ஸ்வாமிகளை மடத்தில் தனியாக விட்டு விட்டு மலைப்பிரதேசங்களுக்கு ஓடிவிட்டார்கள். இப்படியிருக்கையில் ஒருநாள் ஸ்வப்னத்தில் யாரோ ஒரு ஸ்த்ரீ கையில் தண்டமேந்திக்கொண்டு மடத்தின் வாசலில் நின்றுகொண்டு "நானே ரக்ஷித்து வருகிறேன்" என்று சொன்னதாகக் கண்டார். அவ்விதம் அபயப்பிரதானம் செய்தது அம்பிகையேயென்று உணர்ந்து ரோமாஞ்சம் ஏற்பட்டது.

स्वप्ने पश्यति दण्डं च धरन्तीं कांचिदङ्गनाम् ।
मठद्वारस्थितां चापि मठरक्षणतत्पराम् ॥

अहं रक्षामि हि मठं इति स्म यतिमब्रवीत् ।
तां दृष्ट्वा स समुत्थाय रोमाञ्चितवपुर्ह्यभूत् ॥

एवं तु वर्तमानस्य सच्चिदानन्दयोगिनः ।
अहान्यष्टावतीतानि देवार्चनरतस्य ह ॥

ஸ்வப்னே பச்யதி தண்டம் ச தரந்தீம் காஞ்சிதங்கநாம் 1
மடத்வாரஸ்திதாம் சாபி மடரக்ஷண தத்பராம் ll

அஹம் ரக்ஷாமி ஹி மடம் இதி ஸ்ம யதிமப்ரவீத் 1
தாம் த்ருஷ்ட்வா ஸ ஸமுத்தாய ரோமாஞ்சிதவபுர் ஹ்யபூத்ll

ஏவம் து வர்த்தமானஸ்ய ஸச்சிதானந்தயோகிந: ।
அஹான்யஷ்டாவதீதானி தேவார்ச்சனரதஸ்ய ஹ ॥

இவ்விதமாக எட்டுநாட்கள் சென்றபிறகு, ஒருவர் ஓடி வந்து வீரபத்திர ஸைனிகர்கள் ஜயத்துடன் வருகிருர்கள் என்று சொன்னுர். இதைக் கேட்டவுடன், ஸ்ரீ ஸ்வாமிகள் ஏற்கனவே பைரவனுக்கு எழுதிக்கொடுத்திருப்பதை அனுஸரித்து வீரபத்திரருடைய ஸைனிகர்களுக்கு வரவேற்புக் கொடுப்பது நியாயமில்லையென்று கருதி; மடத்தைவிட்டுப் புறப்பட்டு துங்காநதியைத் தாண்டி வைகுண்டபுரம் சென்றுவிட்டார்கள். அளகாத்ரிபட்டர், கங்காதரபட்டர் முதலான சிலர்களே ஸ்ரீ ஸ்வாமிகளுடன் இருந்துவந்தார்கள். இன்னம் வெகுதூரம் போய்விடுவது நல்லதென்று பைரவனுடைய ஆட்கள் சொல்லியும் ஸ்ரீ ஸ்வாமிகள் அங்கேயே இருந்துவிட்டார்கள் அங்கே நதிக்கரையில் பர்ணசாலை ஏற்படுத்திக்கொண்டு, ஸ்நாநம் ஜபம் தேவதா அர்ச்சனை இவைகளிலேயே ஈடுபட்டுக்கொண்டு தங்கினுர். அவர் அங்கே வஸிப்பது தமஸாதீரத்தில் ஸ்ரீராமர் தங்கி இருந்ததுபோலவும் பதரிகாசிரமத்தில் ஸ்ரீமந் நாராயணர் இருந்ததுபோலவும் தோன்றிற்று.

वर्तमानो नदीतीरे नानारण्यसुशोभिते ।
श्रीरामस्तमसातीरे यथा धीरो महामनाः ॥

तुङ्गभद्रातटे योगी जपं कुर्वन् महामनाः ।
बदरीवनसंस्थः सन् नारायण इवाबभौ ॥

வர்த்தமானோ நதீதீரே நாநாரண்ய ஸுசோபிதே ।
ஸ்ரீராமஸ்தமஸாதீரே யதா தீரோ மஹாமநா: ॥

துங்கபத்ராதடே யோகீ ஜபம் குர்வன் மஹாமநா: ।
பதரீவந ஸம்ஸ்த்த: ஸன் நாராயண இவாபபௌ ॥

இவ்விதமாக அங்கு ஐந்து நாட்கள் தங்கியிருந்தார். இதன் மத்தியில் வீரபத்திரருடைய ஸைன்யம்

யானைகள் குதிரைகளுடன் சிருங்கேரியை நோக்கி வந்து கொண்டிருந்தது. பைரவனுடைய ஆட்களின் பிரயத்னத்தினால் ஸ்ரீ ஸ்வாமிகள் வெகுதூரம் போய்விட்டால் அவர்களைப் பார்ப்பது மிகவும் சிரமமேயென்று நினைத்து, கூடியமட்டும் வேகமாகவே ஸைன்யம் வந்துகொண்டிருந்தது. அவ்விதம் வருகையில் மரங்கள் அடர்ந்த ஒரு குன்றின்பேரிலிருந்து பார்க்கையில், நதிக்கரையில் ஒரு மஹான் ருத்திராக்ஷ மாலைகள், முத்துஹாரங்கள் தரித்துக் கொண்டு பாதப்பிரக்ஷாளனம்செய்து ஆசமனம் செய்வதைக் கண்டார்கள். அம்மஹான் ஸ்ரீமத் ஆசார்யர் தானென்று ஸந்தேஹித்து நிற்கையில், ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸமீபத்திலிருந்து சங்கத்மானம் கேட்டது. இவர்களுடைய ஸந்தேஹம் நிவிருத்தியாகி மிகவும் ஸந்தோஷத்தை அடைந்தார்கள்.

அங்கிருந்து வைகுண்டபுரம் போவதற்கு வேறு நல்ல மார்க்கமிருந்தபோதிலும், ஸ்ரீ ஸ்வாமிகளை தாமதமன்னியில் தர்சிக்கவேண்டுமென்ற ஆவலுடன் மேடு பள்ளம் கவனிக்காமல் குறுக்கு வழியாகவே இறங்கி நதிக்கரைக்குச் சென்றார்கள். அங்கு போனவுடன் ஸைன்யத்தில் பிரதானராயிருந்த தேவராயர் முதலானவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்துவிட்டு, தங்களுடன் ஸ்ரீ ஸ்வாமிகளும் சிருங்கேரி நகரத்திற்கு உடனே புறப்பட்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். இவர்கள் வந்ததில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஸந்தோஷமிருந்தபோதிலும், பைரவனுக்குக் கொடுத்திருக்கும் வாக்குப்படி இவர்களுடன் சிருங்கேரியில் பிரவேசிப்பது உசிதமில்லை என்றே கருதினர். இந்த நிலையில் அங்கிருந்து ஒரு பௌராணிக வித்வான் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் தனித்து வந்து "ஆபத்காலத்தில் ஸத்தியத்திற்கு அவ்வளவு பிராதான்யம் கொடுப்பது நியாயமாகாது. தவிரவும், அஸத்தியத்திலேயே மூழ்கியிருப்பவர்களிடம் ஸத்தியம் உசிதமேயில்லை. இங்கிருந்து எவ்வளவு

பணம் அபஹரித்திருக்கிருன் பைரவன்! கலசபுரத்திற்கு தாங்கள் விஜயம் செய்திருந்தபோது, தங்கள் திரவியம் எனக்கு கோமாம்ஸம்போல என்று சொன்னவன் மூவாயிரம் வராகன் வாங்கிக்கொண்டிருக்கிருனே! அவனிடத்திலுமா ஸத்தியம் பாராட்டவேண்டும்? மேலும் தங்கள் அழைப்பின் பேரில் வீரபத்திரருடைய ஸைனிகர்கள் இங்கே வரவில்லை. அவர்களாக வெற்றியுடன் வந்திருக்கிருர்கள். தாங்களும் தங்கள் ஊரைவிட்டு வெளியில் வந்துவிட்டீர்கள். இப்பொழுது அந்த ஸைனிகர்கள் வந்து தங்களை நிர்ப்பந்தம் செய்து நகரத்திற்கு அழைத்துச்சென்ருல், தாங்கள் ஸத்தியத்திற்கு விரோதமாக நடந்துகொண்டதாக எப்படியாகும்?" என்று பலவாருக வெகு வினயத்துடன் தெரிவித்துக் கொண்டார். இதைக் கேட்டு அரை மனதுடன் ஸ்ரீஸ்வாமிகள் ஸம்மதிக்கவே, உடன் தேவராயர் முதலானவர்கள் பலாத்காரம் செய்வதுபோல் ஸ்ரீ ஸ்வாமிகளின் கைகளைப் பிடித்துக்கொண்டு கால்நடையாகவே நதியைத் தாண்டும்படி செய்தார்கள்.

अर्धाङ्गीकारगमनात् दत्तहस्तावलम्बनैः ।
स बलात्क्रियमाणस्तु यतिराजो महाप्रभुः ।
तैरेवानीयते मन्दं नदीगर्भे पदा व्रजन् ॥

அர்த்தாங்கீகார கமநாத் தத்த ஹஸ்தாவலம்பனை: ।
ஸ பலாத்க்ரியமாணஸ்து யதிராஜோ மஹாப்ரபு: ।
தைரேவாநீயதே மந்தம் நதீகர்ப்பே பதா வ்ரஜன் ॥

நதியிலிருந்து மேடு ஏறினபிறகு ஸ்ரீ ஸ்வாமிகளை ஒரு பல்லக்கில் ஏறும்படி செய்து, தேவராயன் குதிரையில் ஏறிக் கொண்டு முன்னும் மற்ற ஸைனிகர்கள் பின்னுலுமாகப் புறப்பட்டார்கள்.

இவ்விதம் வரும்போது ஸைனிகர்கள் ஒவ்வொருவராக ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸமீபத்தில் வந்து அவருடைய

பாதங்களைத் தொட்டு "துறவிகளின் அரசே, நமஸ்காரம்" என்றுசொல்லி வெகு பக்தியுடன் ஸேவித்தார்கள். அந்த ஸைன்யத்தில் அநேகம் துருஷ்கர்களும் இருந்தார்கள்.

स्पृष्ट्वा स्पृष्ट्वा यतिक्ष्मेन्द्रपदं सैनिकपुङ्गवाः ।
मुदा परमया युक्ता नमस्कुर्वन्ति भूरिशः ॥

वैरभद्रास्तुरुष्काश्च सायुधा वीर्यभूषणाः ।
संन्यासिनां पातशाहो नम इत्येव सन्नताः ॥

ஸ்ப்ருஷ்ட்வா ஸ்ப்ருஷ்ட்வா யதிக்ஷ்மேந்த்ரபதம் ஸைநிக புங்கவா: ।
முதா பரமயா யுக்தா: நமஸ்குர்வந்தி பூரிஶ: ॥

வைரபத்ராஸ்துருஷ்காச்ச ஸாயுதா வீர்ய பூஷணா: ।
ஸந்யாஸிநாம் பாதஶாஹோ நம இத்யேவ ஸந்நதா: ॥

அவர்களையெல்லாம் ஆசீர்வதித்துக்கொண்டு ஸாயங் காலம் துங்கா நதிக்கரையில் வந்தபோது வீரபத்திர னுடைய ஸேனாதிபதி அங்குவந்து ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்தார். அவரையும் ஆசீர்வதித்து விட்டு அவருடனேயே நதியைத்தாண்டி, அசுவத்த விருக்ஷமுள்ள இக்கரைக்குவந்து சிருங்கேரிக்குள் பிரவேசித்தார். மடத்தை ரக்ஷிக்கவேண்டிய பொறுப்பை ஸேனாதிபதியிடம் ஒப்பு வித்துவிட்டு, ஸ்ரீமடம் எல்லைக்குள் சென்று மண்டபத்தி லிருந்தபடியே ஸ்ரீசாரதாம்பாளை தர்சனம் செய்துவிட்டு, மடத்திற்குள் சென்றார்.

பிறகு பலர்கள் தன்னைத்தொட்டிருப்பதினால் நதியில் மிருத்திகா ஸ்நாநம் செய்து சரீர சுத்தி செய்துகொண்டு பிறகு தேவபூஜை செய்து பிக்ஷையான பிறகு எல்லாருக்கும் தர்சனம் கொடுத்தார்.

सैनिकैर्बहुभिः स्पृष्टः तुङ्गभद्रां प्रपद्य ताम् ।
मृत्तिकास्नानविधिना गात्रशुद्धिं समाचरत् ॥

देवपूजां ततः कृत्वा भुक्त्वा तापसराजवत् ।
आगतेभ्यः समस्तेभ्यो दर्शनं प्रददौ पुनः ॥

ஸைனிகைர் பஹுபி: ஸ்ப்ருஷ்ட: துங்கபத்ராம்
ப்ரபத்ய தாம் ।
ம்ருத்திகா ஸ்நாநவிதிநா காத்ர ஶுத்திம் ஸமாசரத் ॥

தேவபூஜாம் தத: க்ருத்வா புக்த்வா தாபஸராஜவத் ।
ஆகதேப்ய: ஸமஸ்தேப்யோ தர்ஶநம் ப்ரததௌ புந: ॥

இவ்விதம் எல்லாரையும் ஸந்தோஷிப்பித்துவிட்டு பிறகு மடத்திற்குள் சென்றார். அப்பொழுதுள்ள ஸௌகர்யத்திற்குத் தக்கபடி ஸைனிகர்களுக்கெல்லாம் மடத்திலேயே போஜனம் செய்து வைக்கப்பட்டது. அவர்கள் எல்லாரும் தன் பிறந்த வீட்டிலிருப்பதாகவே வெகு அபிமானத்துடன் பாவித்து திருப்தியடைந்ததுடன் ஸகல சிரமங்களும் நிவிருத்தியானவர்களாக அன்று ராத்திரி நித்திரை செய்தார்கள்.

मठे तण्डुलसंकोचात् कालदोषेण तेन ह ।

अवाप्तं यावदेवासीत् अन्नादि खलु तावता ।
सैनिकास्तेऽपि तृप्यन्ति तत्संस्थानेऽतिवत्सलाः ॥

मातृवेश्मेव संप्राप्य सैनिकाः सकला अपि ।
निर्वृता निशि तस्यां च निद्रया ध्वंसितश्रमाः ॥

மடே தண்டுல ஸங்கோசாத் காலதோஷேண தேந ஹ ।

அவாப்தம் யாவதேவாஸீத் அந்நாதி கலு தாவதா ।
ஸைநிகாஸ்தேऽபி த்ருப்யந்தி தத்ஸம்ஸ்தாநே
ऽதிவத்ஸலா: ॥

மாத்ருவேச்மேவ ஸம்ப்ராப்ய ஸைநிகா: ஸகலா அபி ।
நிர்வ்ருதா நிஶி தஸ்யாம் ச நித்ரயா த்வம்ஸிதச்ரமா: ॥

அத்யாயம் 7

## வீரபத்திரரின் வருகை

ஸ்ரீ சிருங்கேரி நகரத்தின் பாதுகாப்பை உத்தேசித்து வீரபத்திரரின் ஸேனாதிபதி நூறுபேர்கள் ஆயுதபாணிகளாக தங்கும்படியான ஸௌகர்யத்துடன் ஊர் எல்லையில் ஒரு சிறு கோட்டையைக்கட்டினார். அவருடைய உத்திரவுப்படி கொஞ்சம் கொஞ்சமாக இரண்டாயிரம் குதிரைகளும் இருபது யானைகளும் பதினாயிரம் கால்படைகளும் வந்து சேர்ந்தன. ஊருக்கு ஸமீபத்திலுள்ள இடங்களிலெல்லாம் இந்த ஸேனை கிரமப்படி நிறுத்தப்பட்டது. இந்த ஸேனையின் தலைவர் தேவர்களின் ஸேனையை ரக்ஷித்து வந்த ஸ்கந்தர் போல சோபித்தார்.

संपूर्णमभवत् पूर्णा नगरोपान्तभूमयः ।
एवं सेना समागच्छत् निविष्टा च भुवः स्थले ॥

सेनान्या पाल्यमाना च शोभते सुतरामहो ।
स्कन्देन पाल्यमानेव महती देवचमूर्यथा ॥

ஸம்பூர்ணமபவத் பூர்ணா நகரோபாந்த பூமய: ।
ஏவம் ஸேநா ஸமாகச்சத் நிவிஷ்டா ச புவ: ஸ்தலே ॥

ஸேநாந்யா பால்யமாநா ச ஶோபதே ஸுதராமஹோ ।
ஸ்கந்தேன பால்யமாநேவ மஹதீ தேவசமூர் யதா ॥

அந்த ஸைனிகர்கள் வெகு குதூஹலத்துடன் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தர்சித்துப்போவார்கள். ஸம்ஸாரமாகிற பள்ளத்தில் கிடந்து கிடந்து கண்களுக்கு ஏற்பட்டிருக்கும் தோஷத்தை நிவிருத்தி செய்துகொள்ள நினைத்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் நதிக்குப் போகும்போதும், ஆலயங்களுக்குப் போகும்போதும், ரத்ன கம்பளத்தில் ராஜ சின்னங்களுடன் வீற்றிருக்கும்போதும், ஸ்வல்பமாய் பேசிக்கொண்டிருந்

தாலும், பேசாமலேயிருந்தாலும், ஸைனிகர்கள் தனித் தனியே வந்து எத்தனை தடவை தர்சனம் செய்தாலும் திருப்தியடையாமலே இருந்தார்கள்.

पृथगागत्य पश्यन्ति सैनिकाः सकुतूहलाः ।
चिरं संसारगर्तस्था दृग्जाड्यप्रजिहीर्षवः ॥

व्रजन्तं तुङ्गभद्रां च सरन्तं देवतागृहम् ।
वसन्तमपि कल्याणे कम्बले चित्रवर्णके ॥

उपबर्हणशोभाढ्ये सोष्णीषं कुङ्कुमारुणम् ।
धरन्तमपि चामूल्यं सुवासः पार्थिवोचितम् ॥

अल्पं प्रभाषमाणं च कारणाभावहेतुना ।
अवदन्तं च गम्भीरं श्रिया परमयाऽन्वितम् ॥

दृष्ट्वा दृष्ट्वा न तृप्यन्ति सैनिका दर्शनोत्सुकाः ।

वैकुण्ठलोकाद्भूभागे तं प्रच्युतमिवाच्युतम् ।
दृष्टिपापं हरन्तं च ह्लादयन्तं मनस्तथा ॥

ப்ருதகாகத்ய பச்யந்தி ஸைநிகா: ஸகுதூஹலா: ।
சிரம் ஸம்ஸார கர்த்தஸ்தா த்ருக்ஜாட்ய ப்ரஜிஹீர்ஷவ: ॥

வ்ரஜந்தம் துங்கபத்ராம் ச ஸரந்தம் தேவதா க்ருஹம் ।
வஸந்தமபி கல்யாணே கம்பளே சித்ரவர்ணகே ॥

உபபர்ஹண ஶோபாட்யே ஸோஷ்ணீஷம் குங்குமாருணம் ।
தரந்தமபி சாமூல்யம் ஸுவாஸ: பார்த்திவோசிதம் ॥

அல்பம் ப்ரபாஷமாணம் ச காரணாபாவஹேதுநா ।
அவதந்தம் ச கம்பீரம் ச்ரியா பரமயாந்விதம் ॥

த்ருஷ்ட்வா த்ருஷ்ட்வா ந த்ருப்யந்தி ஸைநிகா
தர்ஶநோத்ஸுகா: ।

வைகுண்டலோகாத் பூபாதே தம் ப்ரச்யுதமிவாச்யுதம் ।
த்ருஷ்டிபாபம் ஹரந்தம் ச ஹ்லாதயந்தம் மநஸ்ததா ॥

இவ்விதமாக இருந்துவருகையில், வீரபத்திர நாயக்கர் நேரில் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை தர்சிக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டார். உடனே புறப்பட்டு ஆங்காங்கு தங்கிக்கொண்டு, முன் யுத்தம் நடந்த நவநீத கிரிக்கு வந்தவுடன் வெகு ஸந்தோஷமாக வரவேற்கப்பட்டார். பிறகு கிரமமாக சிருங்கேரி நகரம் வந்து சேர்ந்து அவருக்காக ஏற்படுத்தப்பட்டிருந்த அழகான ஜாகையில் இறங்கிக்கொண்டார். அவருக்கு வேண்டிய ஸகல சாமான்களையும் ஸ்ரீ ஸ்வாமிகளே அனுப்பி ஏற்பாடு செய்திருப்பதைக் கண்டு மிகவும் ஸந்தோஷித்தார். உடனே ஸ்ரீமடம் சென்று ஆலயத்திற்கு ஸமீபத்திலுள்ள விசாலமான அங்கணத்தில் போய்க்கொண்டிருந்த ஸ்ரீமத் ஆசார்யரை தர்சித்த மாத்திரத்தில் வெகு ஸந்தோஷமடைந்தார்.

பிறகு வெகு சித்திரங்களோடு கூடியதாக புக்கராயரால் கட்டப்பட்டிருந்த வித்யாசங்கராலயத்தையும், ஜனார்த்தனர் கோவிலையும் பார்த்துக்கொண்டு நதிப்பக்கம் சென்று அங்கேயும் புக்கராயராலேயே கட்டப்பட்டிருந்த படித்துறையையும், நதியிலுள்ள பெரிய பெரிய மீன்களையும், ஸ்ரீ ஸ்வாமிகளாலும் மற்றும் பிராஹ்மணோத்தமர்களாலும் பிரதிதினம் பிரதக்ஷிணம் செய்து ஸேவிக்கப்படும் அசுவத்த விருக்ஷத்தையும் காலையில் ஸ்வாமிகள் உட்கார்ந்துகொண்டு ஜபம் செய்யும் சதுரமான சிலையையும் தென்கரையில் புருக்கள் ஏராளமாக விளையாடிக்கொண்டிருக்கும் விஸ்தாரமான மணல் பிரதேசத்தையும், அக்கரையில் மேட்டில் பயிர் செய்யப்பட்டிருந்த பாக்குத் தோப்புகளையும், மேல் கரையில் தன்னுடைய யானைக் குதிரைப் பட்டாளங்கள் நிற்பதையும், வெகு ஸந்தோஷமாகப் பார்த்து ஆனந்தமடைந்தார். அதன் பிறகு, படிக்கட்டு ஏறிவந்து, ஸ்ரீ ராமர்

படம் அழகாக எழுதியிருக்கும் மண்டபம் வழியாக தாமிர கிருஹம் சென்று ஸ்ரீ சந்திரமௌளீசுவரரைத் தர்சித்துக் கொண்டு கிரமமாக ஸ்ரீ சாரதாம்பாள் ஸன்னிதிக்கு வந்து சேர்ந்தார்.

அங்கு வித்வான்களுடனும் அதிகாரிகளுடனும் கூடி இருந்த ஸ்ரீமத் ஆசார்யர் வெகு ஸந்தோஷத்துடன் அரசனை வரவேற்று அவரை ஒரு ரத்ன கம்பளத்தில் அமரச் செய்து பட்டுக்கள் முதலானது கொடுத்து ஆசீர்வதித்தார். அங்குள்ள பண்டிதர்களும் சுலோகங்கள் சொல்லி தேங்காய்கள் கொடுத்து ஆசீர்வதித்தார்கள்.

पारितोषिकमादाय वरिष्ठं क्षौमशोभिनम् ।
ददौ तस्मै प्रहृष्टात्मा स्वाशीर्वादपुरस्सरम् ॥

अथ विद्वद्गणः सर्वो ददौ राज्ञे निजाशिषम् ।
नारिकेलप्रदानेन तत्तच्छ्लोकमुदीर्य च ॥

பாரிதோஷிகமாதாய வரிஷ்ட்டம் க்ஷௌம ஶோபிநம் ।
ததௌ தஸ்மை ப்ரஹ்ருஷ்டாத்மா ஸ்வாஶீர்வாத
புரஸ்ஸரம் ॥

அத வித்வத்கண: ஸர்வோ ததௌ ராஜ்ஞே நிஜாஶிஷம் ।
நாரிகேள ப்ரதாநேந தத்தச்ச்லோகமுதீர்ய ச ॥

பிறகு ஸ்ரீ சாரதாம்பிகையை அரசர் நன்கு தர்சித்தார். வெகு அழகான சரீர அமைப்புடன் ஸர்வாலங்கார பூஷிதையாய் புஸ்தகம், ஜபமாலை, ஞானமுத்திரை அமிருத கலசம், இவைகளோடு விளங்கிய அம்பிகையைப் பார்க்க இரண்டு கண்கள் போதாது. அவ்வித சாரதா தேவியை தர்சித்து வீரபத்திரர் பரம ஸந்தோஷத்தையடைந்தார்.

रत्नकुण्डलशोभाढ्यां नासामुक्ताविराजिताम् ।
पद्मपत्रविशालाक्षीं कम्बुग्रीवां सुमध्यमाम् ॥

सुभ्रुवं सुललाटां च पुस्तकाक्षवरस्रजम् ।
ज्ञानमुद्राधरां देवीं सुधाघटविशोभिताम् ॥

यस्या निरीक्षणे नालं चक्षुषी द्वे वपुष्मताम् ।

तां वाणीं नित्यकल्याणीं गृहिणीं द्रुहिणस्य च ।
दृष्ट्वा परमसंतुष्टो वीरभद्रो महीपतिः ॥

ரத்ன குண்டல ஶோபாட்யாம் நாஸா முக்தா விராஜிதாம் ।
பத்மபத்ர விஶாலாக்ஷீம் கம்புக்ரீவாம் ஸுமத்யமாம் ॥

ஸுப்ருவம் ஸுலலாடாம் ச புஸ்தகாக்ஷவரஸ்ரஜம் ।
ஞானமுத்ராதராம் தேவீம் ஸுதா கட விஶோபிதாம் ॥

யஸ்யா நிரீக்ஷணே நாலம் சக்ஷுஷீ த்வே வபுஷ்மதாம் ।

தாம் வாணீம் நித்யகல்யாணீம் க்ருஹிணீம்
த்ருஹிணஸ்ய ச ।
த்ருஷ்ட்வா பரம ஸந்துஷ்டோ வீரபத்ரோ மஹீபதி: ॥

ஸ்ரீ சாரதாம்பா தர்சனமான பிற்பாடு ஸ்ரீ ஸ்வாமிகள் வீரபத்திரரைப் பார்த்து "உங்கள் பிதாமஹர் வெங்கடப்ப நாயக்கர் ஸ்ரீமடத்தில் வைத்திருந்த அபிமானத்தை நீங்களும் வைக்கவேண்டும்" என்று சொன்னதற்கு "அப்படியே ஆகட்டும்" என்று அரசர் அங்கீகரித்தார். பிறகு ஸ்ரீ ஸ்வாமிகளிடம் விடை பெற்றுக்கொண்டு வீரபத்திரர் அங்கிருந்து புறப்பட்டார். பிறகு அவர் பக்கத்திலிருந்த நாலுகட்டுக்கு வந்து அங்குள்ள அபூர்வமான சில்ப வேலைகளைப் பார்த்தார். கூட வந்தவர் "இதுதான் ஸ்ரீ ஸ்வாமிகளின் சயன அறை, இது வஸ்திரம் உலர்த்தும் அறை, இது ஸ்நாநம் செய்யும் அறை" என்றெல்லாம் விபரமாக எடுத்துச் சொல்லிக் காட்டிக்கொண்டு வந்தார். இவைகளைப் பார்த்துவிட்டு பலவித விருக்ஷங்களால் சோபித்த தபோ வனத்தையும் ஜப கிருஹத்தையும்

நைவேத்யம் தயாராகுமிடத்தையும் கண்டு மிக ஸந்தோஷத்துடன் மறுபடியும் நாலுகட்டுக்குத் திரும்பி வந்தார். அப்பொழுது தேவராயர் "இந்த விஸ்தாரமான மேல்மாடியிலுள்ள நாலுகட்டில்தான் நவராத்திரி உத்ஸவ ஸமயம் உள்ளூர் வித்வான்களும் பல தேசங்களிலிருந்து வரும் வித்வான்களும் கூடுவார்கள். மஹாநவமி தினம் இங்குதான் விசேஷமாக ஸுவாஸிநீகளுக்குப் போஜனம் செய்விக்கப்படும். முந்தின ஆசார்யர்களின் ஆராதனை ஸமயத்தில் ஐம்பது நூறு என்று ஸன்யாஸிகளும் இரண்டாயிரம் பிராஹ்மணர்களும் போஜனம் செய்வார்கள். ஆபால விருத்தர்கள், அமங்கலிகள் உட்பட, தடையன்னியில் போஜனம் செய்வார்கள். ஸாதாரணமாக ஆராதனை மூன்று நாட்கள் நடக்கும். அப்படியே வித்யாசங்கருக்கும் ஆராதனை நடந்து ரதோத்ஸவம் நடத்துவார்கள். ரதோத்ஸவ ஸமயம் பதினாயிரம் ஜனங்கள் சேருவார்கள். உத்ஸவ ஸமயங்களில் ஐந்துவித பக்ஷியங்களும், நான்குவித சித்ரான்னங்களும், பலவித ரசாயனங்களும், மற்றும் விசேஷ வியஞ்ஜனங்களும் பரிமாறி போஜனம் செய்விக்கப்படும். அப்படியே மஹாசிவராத்திரி ஸமயம் மலஹானிகரேசுவரர் ஆலயத்தில் ஆகம ரீதியாய் விசேஷமாக ஜபங்கள் ஹோமங்கள் நடக்கும். ஐந்து நாட்கள் பிராஹ்மண போஜனம் உண்டு. பிறகு வெகு விமர்சையாக ரதோத்ஸவமும் நடக்கும். இந்தப்பெரிய தர்மஸ்தானத்தை உத்தரணம் செய்து காப்பாற்றி வந்தது தங்கள் பிதாமஹர் வெங்கடப்ப நாயக்கர். அப்படியே தாங்களும் இருந்து வரவேண்டும்" என்று சொன்னார். இதையெல்லாம் அரசர் ஸந்தோஷமாகக் கேட்டுக்கொண்டு, அப்படியே உக்கிராணம் பாக்குத் தோட்டங்கள் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு தன் ஜாகைக்கு வந்து சேர்ந்தார்.

அரசர் போஜனத்தை முடித்துக்கொண்டு மறுபடியும் ஸ்ரீ சாரதா மண்டபம் வந்து சேர்ந்தார். அதற்குள்

ஸ்ரீ ஸ்வாமிகளும் பூஜை பிக்ஷை, முதலானதுகளை முடித்துக்கொண்டு, வித்வான்களுடைய கோஷ்டியுடன் அங்கே வந்து சேர்ந்தார். பிறகு ஸ்ரீ ஸ்வாமிகள் அரசரைப் பார்த்து "ஒருமாஸகாலமாக அடிக்கடி நல்ல சகுனங்களும் ஸ்வப்னங்களும் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. துங்கா நதி இரு கரைகளையும் ஒட்டி வெகு தெளிவான ஜலப் பிரவாஹத்துடன் ஓடுவதைக் கண்டேன். எனக்கு என்ன சுபம் ஏற்படப் போகிறதென்று நினைத்தேன். இப்பொழுது கவனிக்கும்போது உங்கள் வரவையே இவை ஸூசித்த தாகத் தோன்றுகின்றது. உங்களுடைய குணங்களைப்பற்றி இதுவரை காதால் கேட்டிருந்தோம். இப்பொழுது நேரி லேயே கண்டோம். மஹாராஜன் என்ற பதத்திற்குத் தக்கபடி உங்கள் பிதாமஹர் மஹானாகவும் ராஜனாகவும் இருந்தார். செல்வம் மாத்திரம் இருந்தால் போதாது. விக்ரமசாலியென்றும் பெயர் வாங்கினார். அப்படியே நீங்களும் அந்த கீர்த்தியை அடையவேண்டும். மூன்று வருஷ காலமாக பைரவன் என்பவனால் இங்கு ஏற்பட்ட கஷ்டங்களைப் பற்றி நீங்கள் தெரிந்துகொண்டிருப்பீர்கள். இனி அவ்விதம் தொந்திரவுகள் ஏற்படாதபடி நீங்கள்தான் பார்த்துக்கொள்ளவேண்டும். க்ஷேமமாய் போய்வாருங்கள்" என்று வெகு வாத்ஸல்யத்துடன் ஆசீர்வதித்து, பலவித வஸ்திரங்களையும் பூஷணங்களையும் பாரிதோஷிகமாக அரசருக்குக் கொடுத்து அனுக்ரஹித்தார். அரசரும் ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆக்ஞையை சிரஸால் வஹித்து உத்திரவு பெற்றுக்கொண்டு ஸ்ரீ சாரதாம்பாளையும் ஸ்ரீ ஸ்வாமிகளையும் நமஸ்கரித்துவிட்டுப் புறப்பட்டார். அரசரைச் சேர்ந்தவர் களும் ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்து உத்திரவு பெற்றுக் கொள்ளும்போது அவரவர்களுக்குத் தக்கபடி ஸன்மானம் பெற்றுச் சென்றார்கள். அரசர் பரிவாரத்துடன் புறப்பட்டு விட்ட போதிலும், சிருங்கேரியின் பாதுகாப்பையுத்தேசித்து முன்போலவே யானைகள் குதிரைகள் உள்பட ஸைன்யத் துடன் ஸேனாதிபதி சிருங்கேரியிலேயே நிறுத்தப்பட்டு விட்டான்.

## அத்யாயம் 8

# சிருங்கேரியில் குழப்பம்

வீரபத்திருடைய ஸைனிகர்கள் வெளியூரிலிருந்த ஸ்ரீ ஸ்வாமிகளை அழைத்துக்கொண்டு சிருங்கேரி ஊருக்குள் வந்ததுடன் நிற்காமல் காவல் ஸைன்யத்தைப் பலப்படுத்தி ஒரு கோட்டையையும் கட்டிவிட்டார்களென்றும் வீரபத்திர நாயக்கரே சிருங்கேரிக்கு நேரில் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளாலும் மற்றவர்களாலும் விசேஷமாக ஆதரிக்கப்பட்டாரென்றும் தெரிந்துகொண்ட பைரவன் மிகவும் தாபத்தையடைந்தான். தன் பலத்தை எப்படியாவது அதிகப்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் வேலாபுரத்தில் ஆண்டு வந்த அரசனிடம் ஐநூறு குதிரைப் பட்டாளமும் அதற்குத் தக்க கால்நடை சேனையும் கேட்டு வாங்கிக்கொண்டான். தன்னிடம் ஏற்கனவேயிருந்த குதிரைகள் பதாதிகள் போதாதென்று தன் பிரஜைகள் அநேகருக்கு கத்திகளும் வில்லுகளும் அம்புகளும் கொடுத்து அவர்களையும் யுத்தத்திற்கு யோக்கியர்களாகச் செய்தான். அத்துடன் வீரபத்திருடைய ஸேனாதிபதிக்கு பணத்தில் ஆசையுண்டென்று தெரிந்து கொண்டு அவனை பணம் கொடுத்து கைவசப் படுத்திக்கொண்டான். அந்தப் பணத்தை வாங்கிக் கொண்ட ஸேனாதிபதி, சிருங்கேரியில் நூறு குதிரைகளையும் முன்னூறு பதாதிகளையும் மாத்திரம் நிறுத்திவிட்டு, மற்ற சேனை யாவற்றையும் சிருங்கேரியிலிருந்து பின் வாங்கி சுவேத துர்க்கம் என்ற மலைக்கோட்டையில் கொண்டுபோய் நின்று விட்டான். இந்த விஷயம் தெரிந்த பைரவன் சிருங்கேரியில் படையெடுக்க இதுவே நல்ல ஸமயம் என்று தீர்மானித்து தன் ஸைன்யத்தை ஏவினான். வீரபத்திரரின் ஸைன்யம் பெரும்பாகம் சிருங்கேரியிலிருந்து வெளியேறி விட்டபடியால் அங்கு தங்கினவர்களும் வெகு பயமடைந்து தாங்களும் புறப்பட்டு விடுவதற்கு உத்திரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இந்த ஸ்திதியில் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு மிகவும் ஆப்தர்களான ஆந்திரர்கள், இனி ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு க்ஷணம்கூட ஸ்ரீ சிருங்கேரியில் தாமஸிக்கக் கூடாதென்றும் உடனே வேறு இடம் போய் விடவேண்டுமென்றும் மிகவும் வற்புறுத்தினார்கள். முன் மூன்று வருஷகாலம் எப்படியோ ஓட்டிவிட்டதுபோல தபஸினால் கூடியமட்டும் இங்கிருந்து கொண்டே ரக்ஷிக்கப் பார்ப்பதுதான் நியாயமென்று ஸ்ரீ ஸ்வாமிகள் நினைத்தார்.

वत्सरत्रयपर्यन्तं तपसा मन्त्रशक्तितः ।
अस्माभिरवितं स्थानं त्यक्ष्यामः कथमद्य तत् ॥

வத்ஸரத்ரய பர்யந்தம் தபஸா மந்த்ர ஶக்தித: ।
அஸ்மாபிரவிதம் ஸ்தாணம் த்யக்ஷ்யாம: கதமத்ய தத் ॥

இங்கிருந்து வெளிக்கிளம்பிவிட்டால், எப்படியாவது தலைதப்பினால் போதுமென்று நகரத்தை சத்ருக்களிடம் பலி கொடுத்துவிட்டார் இந்த ஸ்வாமிகள் என்று அவதூறு சொல்வார்கள். இங்கேயே தங்கிவிட்டாலோ, ராஜ்யத்தில் உள்ள ஆசையினால் உயிர் போனாலும் போகிறதென்று நின்றுவிட்டார் என்றும் ஜனங்கள் பேசிக்கொள்வார்கள். எவ்விதம் செய்தால் உலக நியாயத்திற்கும் தர்மத்திற்கும் விரோதமில்லாமல் இருக்குமென்று ஸ்ரீ ஸ்வாமிகள் பலவாறு ஆலோசனை செய்தார். கடைசியில் புறப்படுவதே நல்லதென்று தீர்மானித்துக்கொண்டு, ஆனால் புறப்படுவதற்கும் மனமில்லாமல், ஸ்ரீ சாரதாம்பாள் ஸன்னிதிக்குச் சென்று "இனி இந்த ஸ்தானத்தை ரக்ஷிக்க என்னால் முடியாது. நீதான் ரக்ஷித்துக்கொள்ள வேண்டும்" என்று வெகு உருக்கமாகக் கதறினார்.[1]

---

1 முன்னாலும் அம்பிகைதான் ஸ்ரீமடம் வாசலில் நின்று காப்பாற்றிக் கொடுத்தாளென்பதை ஸ்ரீ ஸ்வாமிகள் மறந்து விட்டதாக தாத்பர்யமில்லை. அப்பொழுதிருந்த மனோதைர்யமில்லாததினால் இப்பொழுது அதே சிரத்தையுடன் தபஸில்

तपसा रक्षितं स्थानं अस्माभिर्वत्सरत्रयम् ।
नेतः परमिदं शक्यं त्वं तु रक्षितुमर्हसि ॥

यथैव रक्षणीयं स्यात् तव स्थानमिदं महत् ।
तथा त्वमेव रक्षाम्ब न समर्था वयं त्विति ॥

தபஸா ரக்ஷிதம் ஸ்தானம் அஸ்மாபிர் வத்ஸரத்ரயம் ।
நேதః பரமிதம் ஶக்யம் த்வம் து ரக்ஷிதுமர்ஹஸி ॥

யதைவ ரக்ஷணீயம் ஸ்யாத் தவ ஸ்தானமிதம் மஹத் ।
ததா த்வமேவ ரக்ஷாம்ப ந ஸமர்த்தா வயம் த்விதி ॥

இவ்விதம் அம்பிகையைப் பிரார்த்தித்துவிட்டு மடம் வாசலுக்குவந்த ஸமயம் லிங்கப்ப நாயக்கனுடைய புத்திரன் மல்லணன் என்பவன் ஓடிவந்து "இங்குள்ள ஸைன்யமும் புறப்பட்டு விடுவதாக யார் சொன்னார்? அது இங்கேயே இருக்கவேண்டுமென்றல்லவா அரசரின் ஆக்ஞை வந்திருக்கிறது!" என்று சொன்னான். அவ்விதம் தவறுதலாகச் சொன்னவனைத் தருவித்துக் கண்டித்துவிட்டு பிறகு, ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்மரித்தவுடன் ஆபத்திலிருந்து விலக்கிக் கொடுத்த பரதேவதையான ஸ்ரீ சாரதாம்பாளை மறுபடியும் தர்சனம் செய்துவிட்டு மடத்திற்குள் திரும்பினார்.

शारदां पुनरालोक्य सद्योऽनिष्टविघातिनीम्।
ऋषिः स्वस्थमनाभूत्वा स्वान्तर्मठमुपाविशत् ॥

ஶாரதாம் புனராலோக்ய ஸத்யோऽநிஷ்ட விகாதிநீம் ।
ருஷிः ஸ்வஸ்தமநா பூத்வா ஸ்வாந்தர்மடமுபாவிஶத் ॥

---

ஈடுபடமுடியுமாவென்று ஸந்தேஹம் தோன்றிவிட்டபடியால் மனம் மிகவும் சோர்ந்துபோய் வருத்தமே மேலாக நிற்கிறதென்றுதான் தாத்பர்யம். எவ்வளவு திடமான ஆஸ்திகர்களாயிருந்தாலும், பகவான் கருணாமூர்த்தி என்ற விசுவாஸம் இருந்தாலும், அக்கருணைக்கு நாம் பாத்திரமா என்று தன்னிடத்திலேயே சில ஸமயங்களில் ஸந்தேஹம் ஏற்படுவது ஸஹஜமேயாகும்.

இப்பொழுதுள்ள கவலை நிவிருத்தியானாலும் ...... என்ன செய்வதென்று தீர்மானிக்கமுடியாமல் ஸ்ரீஸ்வாமிகள் அந்த மல்லணனையே கேட்டார். அதற்கு அவன் "தாங்கள் மூவாயிரம் வராஹன் சீமை என்று சொல்லப் படுகிற சிருங்கேரி ஸம்ஸ்தானத்திற்கு அதிபதி. அதில் தக்க மதிப்பும் செல்வாக்குமுள்ளவர்களை அழைத்துவரச் சொல்லி கேட்கலாம்" என்றான். அவர்கள் வந்து என்ன செய்யப்போகிறார்கள் என்ற ஸந்தேஹமிருந்தபோதிலும் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களை வரவழைத்துக்கேட்டார். எல்லாரும் திகைத்து நிற்கையில், அவர்களில் மிகவும் வயதானவராய் கண்ணும் காதும் மங்கினவராயிருந்த போதிலும் அந்த நகரத்தில் முதல் வீட்டுக்காரர் என்ற ஸ்தானத்தை வஹித்து வந்த ரகுபதிபட்டர் என்பவர் "என்னவானாலும் தாங்கள் இவ்விடம் விட்டு நகரக்கூடாது. நகர்ந்தால் ஸம்ஸ்தானமே போய்விடும்" என்று அழுத்திச் சொன்னார். இதை ஸ்ரீ ஸ்வாமிகளும் ஒப்புக்கொண்டார். ஆனால் நகரத்திற்குள் சத்ருக்கள் வியாபித்தால் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி யாருக்கும் ஒன்றும் தோன்றவில்லை.

இவ்விதமாக குழம்பிக் கொண்டிருக்கும்போது, ஊரில் தங்கியிருந்த ஸேனையின் தலைவர் அனுப்பிய ஒரு தூதன் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளை நமஸ்கரித்து, ஸ்ரீ ஸ்வாமிகளின் அபிப்பிராயத்தையும் நிலைமையையும் தெரிந்து வரும்படி தன் தலைவர் சொல்லியனுப்பியிருப்பதாகத் தெரிவித்தான். உடனே ஸ்ரீஸ்வாமிகள் "நீங்கள் பயமன்னியில் இங்கேயே இருங்கள். தேவராயர் உங்களை விட்டு விட்டுப் போயிருக்க மாட்டார். அதில் ஏதோ ஸூக்ஷ்மம் இருக்கிறது. போயிருந்தாலும் திரும்பி வந்துவிடுவார். யுத்தம் ஏற்பட்டாலும் நமக்கே ஜயம். ஸந்தேகப்படவேண்டாம்" என்று தைர்யமாகச் சொல்லியனுப்பினார்.

இப்படியிருக்கையில், பலவித ஆயுதங்களை தரித்த காலாட் படைகளும் குதிரைப்பட்டாளமுமாக ஆயிரக்கணக்

கான ஸைன்யம் பைரவனின் ஆக்ஞையின்பேரில் சிருங்கேரியைப் பிடித்துக்கொள்ளும் உத்தேசத்துடன் யுத்தத்திற்கு வந்தது. இருதரத்தார்களுக்கும் பலமாக யுத்தம் நடக்க ஆரம்பித்தது. ஏராளமாக குண்டுகள் பிரயோகிக்கும் சப்தம் காதில் பட்டவுடனேயே ஸ்ரீ ஸ்வாமிகள் ஜபகிருஹம் சென்று பராசக்தியை உத்தேசித்து துஷ்டர்களைத் தொலைக்கக்கூடிய மந்திரத்தை ஆவிருத்தி செய்ய ஆரம்பித்தார். இதனால் சிறிது தடைபட்டபோதிலும் எதிரி நகரத்திற்குள் பிரவேசித்துவிட்டார்கள். ஊரிலுள்ள பாலர்கள், விருத்தர்கள், ஸ்திரீகள் எல்லாரும் மிகவும் பயத்தை அடைந்து மடத்திற்குள்ளேயே ஓடிவந்து ஸ்ரீ ஸ்வாமிகளை சரணமடைந்தார்கள். ஸ்ரீ ஸ்வாமிகள் இதைப் பார்த்து இன்னும் வேகமாக, பராசக்தியை சூலம், கதை, கத்தி, தனுஸ், பாணங்கள் இவைகளை எடுத்துக்கொண்டு சத்துருக்களை விரட்டுவதாக பாவித்துக்கொண்டே, மந்திர ஜபத்தை செய்தார். இந்த ஜபத்தின் பிரபாவத்தினால் ஆயிரக் கணக்காயிருந்த பைரவ ஸைனிகர்களின் மனதில் தங்களை அறியாமல் பயமேற்பட்டு ஊரிலிருந்த முன்னூறு ஸைனிகர்களுடன் சண்டையிடுவது சிரமமாக ஆகிவிட்டது. அத்துடன் அவர்கள் போடும் பாணங்கள் ஆகாயத்தில் கிளம்பியும் எதிரியின்மேல் விழாமல் மத்தியிலேயே விழுந்துவிட்டன. அப்படியே அவர்கள் பிரயோகித்த குண்டுகளும் வீணாகிவிட்டன. இதைப்பார்த்து வீரபத்திரனுடைய ஸைனிகர்கள் மிகவும் ஸந்தோஷப்பட்டார்கள்.

இதன் மத்தியில், பைரவனுக்கு ஸஹாயமாக வந்த வேலாபுர அரசனின் ஸைன்யம் நதிக்கு அக்கரையிலுள்ள பைரவர்மலைக்கு வந்து சேர்ந்தது. அதன் தலைவர் திருவேங்கலம் என்பவன் க்ஷத்திரியனாகவும் பிராஹ்மண விசுவாஸமுள்ளவனாகவும் ஸ்வபாவத்திலேயே தர்ம சிரத்தையுள்ளவனாகவும் இருந்தான். அம்மலையில் இருந்தபடியே அவன் வித்யாசங்கரரின் ஆலயத்தின் சிகரத்திலுள்ள ஸ்வர்ண ஸ்தூபிகளையும் மலஹானிகரேசுவரர்

ஆலய சிகரத்தையும் தர்சித்த மாத்திரத்தில் குதிரையி லிருந்தபடியே கைகூப்பி நமஸ்கரித்தான். இந்த உத்தம மான தர்ம ஸமஸ்தானத்தின்பேரில் யுத்தம் செய்ய அவனுக்கு இஷ்டமேயில்லை. உடனே பைரவனுடைய ஸேனதிபதியைப் பார்த்து "இங்கே வீரபத்திரரைச் சேர்ந்தவர் யாரும் இல்லாததினுல் இப்பொழுது போனுல் ஸுலபமாய் சிருங்கேரியை ஸ்வாதீனம் செய்து விடலாம் என்று சொன்னீர்கள். அது வாஸ்தவமில்லையென்று தெரி கிறது. இங்கே வீரபத்திரருடைய ஸைனிகர்கள் யுத்தத் திற்கு ஸித்தமாயிருப்பதுடன் அவர்கள் பிரயோகிக்கும் பாணங்கள் யாதொன்றும் வீணுகப்போகவில்லை. தவிரவும், தபஸ்விகளாகவும் ஜபத்திலேயே ஈடுபட்டவர்களாகவும் இருக்கிற மஹானுன ஸ்ரீ ஸ்வாமிகள் மடத்திலேயே இருந்து வருகிருர்கள். ஊரிலும் வேதபாரங்கதர்களாக அநேகம் பிராஹ்மணர்கள் இருப்பார்கள். யுத்தத்தை ஊருக்குள் கொண்டுபோனுலும் அவர்களுக்கும் ஹிம்ஸையும் மரணமும் ஏற்படக்கூடியதே. இதெல்லாம் உங்கள் யஜமானனுக்கும் நல்லதில்லை. நாங்களும் பிராஹ்மணர்களிடத்தில் பக்தி யுள்ளவர்கள் இங்கு யுத்தம் செய்வது நியாயமாகாது" என்று சொன்னுன். இதைக்கேட்ட கால நாயக்கன் "இவ் விதம் நீர் சொல்வது நம் யஜமானர்களுக்கு பிரீதியை உண்டுபண்ணுது. எங்களுடன் சேர்ந்து யுத்தம் செய்து நகரத்தைப் பிடித்துத்தான் ஆகவேண்டும்" என்று வற்புறுத்தினுன். அதன்பேரில் திருவேங்கலம் "இன்று ஸாயங்காலம் வெகு நாழிகை யாகிவிட்டது. நாளை காலையில் பார்த்துக்கொள்ளலாம்." என்று பதில் சொன்னுன். இதைக் கேட்ட கால நாயக்கருக்கு வெகு கோபம் வந்துவிட்டது. "நீங்கள் இங்கேயே இருங்கள். எங்கள் ஸைன்யத்தின் பலத்தைக்கொண்டே நாங்கள் யுத்தம் செய்து கொள் கிறேம்" என்று சொல்லிவிட்டு சிருங்கேரிப் பக்கம் திரும்பி விட்டான். அங்கே ஊருக்கு வெளியில் புதிதாக கட்டப் பட்டிருந்த கோட்டையைப் பிடிக்கவந்தான். கோட்டை

யைத் தாக்கவந்த இவனுடைய ஸைனிகர்களை கோட்டையிலுள்ளவர்கள் பலவித பாணங்களால் அடித்தார்கள். இருவர்களுக்கும் பலமாக சண்டை நடந்தது. திருவேங்கலம் முதலானவர்கள் பைரவர் மலையிலிருந்தபடியே இங்கு நடப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

---

## அத்யாயம் 9

## ஸ்ரீமத் ஆசார்யாரின் தபோ மஹிமை

சிருங்கேரி ஊருக்குள்ளிருந்த ஸைன்யம் புக்கராயர் கட்டியிருந்த பழய கோட்டையையும் மடத்தையும் வெகு ஜாக்கிரதையாக ரக்ஷித்து வந்தது. ஸ்ரீமடத்தில் மிகவும் ஏகாந்தமான ஓரிடத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் ஆசனமிட்டு ஏகாக்கிர சித்தராக மந்திரதேவதையை தியானித்துக் கொண்டும் மந்திரார்த்தத்தை அனுஸந்தானம் செய்து கொண்டும் மந்திரத்தை ஆவிருத்தி செய்து வந்தார். அப்படியே வேறுசில தேவீ உபாஸகர்களைக் கொண்டு சப்தசதீ பாராயணம் செய்யும்படி ஏற்பாடு செய்தார். இவ்விதம் ஜபம் நடந்துகொண்டிருக்கையில் மடத்து வேலைக்காரன் ஒருவன் ஓடிவந்து "பைரவனைச் சேர்ந்தவர்கள் தோல்வியடைந்து பயத்துடன் திரும்பிவிட்டார்கள். வீரபத்திரரைச் சேர்ந்தவர்கள் ஜயகோஷத்துடன் கர்ஜிக்கிறார்கள். அவருடைய ஸைன்யத்தில் இன்னும் ஆயிரம் பேர்கள் ஊருக்குள் வந்து சேர்ந்திருக்கிறார்கள்" என்று சொன்னான்.

இதைக் கேட்டதும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு "பலவிதத்திலும் பலமின்றியிருக்கும் இந்த நகரத்திற்குள் பைரவனைச் சேர்ந்த ஏராளமான ஸைன்யம் எப்படி நுழையாமலிருந்தது? எப்படி தோல்வியடைந்தது? ஏதோ ஏமாற்றுதலாயிருக்க வேண்டும். பின்வாங்குகிற மாதிரி காட்டிவிட்டு அவர்களே ஸ்நேகிதர்கள் போல இப்பொழுது நுழைந்திருக்கலாம்.

ஆகையால் புதிதாய் வந்த ஸைன்யத்தை நன்கு சோதித்துத்தான் அதற்கு இடம் கொடுக்கவேண்டும். அவர்கள் ஸ்நேகிதர்கள்தான் என்று நம்பி விட்டால் ஆபத்தில் முடியும். எப்படியும் நாளை காலை வரையில் அவர்களை ஜாக்கிரதையாக கவனித்துக்கொண்டிருக்க வேண்டும்" என்ற விதமாக ஸந்தேஹம் தோன்றி அப்படியே உத்திரவிட்டு விட்டு தன் ஜபத்தை விடாமல் செய்துவந்தார். மந்திரம் பதினாயிரம் ஆவிருத்தியான ஸமயம், சத்ருக்கள் தோல்வியடைந்து திரும்பிவிட்டது வாஸ்தவமென்று தெரிந்து, ஸ்ரீ ஸ்வாமிகள் தன் குருநாதரை வணங்கி ஜபத்தை ஸமாப்தி செய்தார். மடத்திற்குள்ளேயே அன்று சரண்புகுந்திருந்த பதினாயிரத்திற்கு மேலுள்ள ஸ்திரீ புருஷர்கள் யாவரும் இந்த ஜய வார்த்தையைக் கேட்டு தங்களுக்கு மறு பிறப்பு ஏற்பட்டதாகவே எண்ணி வெகு ஸந்தோஷப்பட்டார்கள்.

அன்று ராத்திரியிலேயே வீரபத்திர ஸைன்யத்தலைவர் தேவராயர், அண்ணாஜிபட்டர் முதலானவர்களுடன், ஸ்ரீமடத்திற்கு வந்து ஜப கிருஹத்திலுள்ள ஸ்ரீ ஸ்வாமிகளிடம் "இப்பொழுது இருக்கிற ஸ்திதியில் தாங்கள் இன்று ராத்திரியே இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போய் விடுவது நல்லது" என்று சொன்னார். ஸ்ரீ ஸ்வாமிகள் பதில் சொல்லாமலே "தானும் இங்கிருந்து புறப்பட்டுவிட்டால், ராஜஸைனிகர்கள் உத்ஸாஹமன்னியில் இருந்துவிடுவார்கள். பைரவனும் ஸுலபமாக உள்ளே நுழைந்துவிடுவான். அந்த துஷ்டன் இங்குள்ள ஸ்திரீ பால விருத்தர் உள்பட யாவரையும் கொன்றுவிடுவான். ஆகையால் என்னை மாத்திரம் தப்பித்துக்கொள்வதற்காக நான் இங்கிருந்து புறப்படுவது கொஞ்சமேனும் உசிதமில்லை. ஆபத்து ஏற்பட்ட சமயத்தில் நம்மை ஆசிரயித்திருப்பவர்களை கை விடுவது அதர்மமேயாகும். எல்லாம் பகவான் ரக்ஷித்துக் கொடுப்பார்" என்று ஆலோசனை செய்துகொண்டே இருந்தார். வந்தவர்கள் புறப்படுவதைப்பற்றியே பேசிக்

கொண்டிருந்துவிட்டுத் திரும்பினார்கள். அவர்கள் போன பிற்பாடு அங்கு பக்கத்திலிருந்த நாராயண பட்டர் என்பவர் "தாங்கள் புறப்பட்டுவிட்டால், இங்குள்ள ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு என்ன கதி?" என்று கேட்டார். இது தன் அபிப்பிராயத்திற்கும் ஒத்திருந்தபடியால் புறப்படுவதில்லையென்பதை நன்கு உறுதி செய்துகொண்டார் ஸ்ரீ ஸ்வாமிகள்.

தோல்வியடைந்த ஸைனிகர்கள் பைரவனிடம் போய் "தங்கள் உத்திரவுப்படி சிருங்கேரியைப் பிடிப்பதற்காகப் போனோம். ஆனால் அங்கே வீரபத்திரரைச் சேர்ந்தவர்கள் முன்ஜாக்கிரதையுடன் புதிதாகக் கோட்டையையும் கட்டிக் கொண்டு யுத்தத்திற்கு ஸித்தமாக இருந்துவிட்டார்கள். எங்கள் பிரயத்தினம் பலிக்கவில்லை. இனி அவ்வூரைப் பிடிப்பது ஸாத்தியமாகவும் தோன்றவில்லை" என்றார்கள். இதைக் கேட்ட பைரவனுக்கு வெகு கோபம் வந்தது. "இதை விடுவதில்லை, எப்படியும் ஜயித்தே தீருவேன்" என்று சபதம் செய்துகொண்டான். சிருங்கேரியை ஸ்வாதீனம் செய்துகொள்ள மறுபடியும் இவன் பிரவிருத்தி செய்வானென்று தீர்மானமாய் அறிந்த வீரபத்திரஸேனை சிருங்கேரியிலேயே தங்கியிருந்தது. ஊரில் நாய்கள் சேர்ந்து சேர்ந்து அழுகிற சப்தம் அடிக்கடி காதில் பட்டபடியால் இன்னும் ஏதோ ஆபத்து வரக்கூடுமென்று எல்லாரும் பயந்தார்கள். பயத்தை நிவிருத்தி செய்யக்கூடிய வேதமந்திரங்களை ஜபிக்கும்படி பிராஹ்மணர்களை ஏற்பாடு செய்து ஸ்ரீ ஸ்வாமிகளும் கெடுதல்களை விலக்கக்கூடிய மந்திரத்தை ஜபித்துக்கொண்டேயிருந்தார்.

புஷ்ய மாஸம் கிருஷ்ண திரயோதசி திங்கட்கிழமை தினம் பைரவனுடைய உத்திரவின்பேரில், எழுநூறு குதிரைகள் இருபதினாயிரம் பதாதிகள் அடங்கிய ஸைன்யம் பலவித ஆயுதங்களை ஏந்திக்கொண்டு சிருங்கேரியை எப்படியும் பிடித்துவிடுவதென்ற ஊக்கத்துடன் புறப்

பட்டார்கள். வேலாபுரத்தின் அரசனுடைய ஸேனுநாயக்கரான திருவேங்கலன் முதலான அநேகத் தலைவர்களுடன் பைரவ ஸைன்ய ஸேனுதிபதியான கால நாயக்கன் சிருங்கேரிக்கு சமீபத்தில் வந்து சேர்ந்தான். முன் நடந்த யுத்த விவரங்களை நன்கு அறிந்த வீரபத்திரரின் தலைமை ஸேனுதிபதி இன்னும் இருநூறு குதிரைகளையும் அறுநூறு பதாதிகளையும் வெகு ஸந்தோஷமாய் அனுப்பிக்கொடுத்து அவர்களும் சிருங்கேரி நகரத்திற்குள் வந்து சேர்ந்தார்கள். அவர்களில் முக்கிய தலைவர்களான சிவப்ப கௌடர், கூலப்ப கௌடர், இருவரும் மலஹானிகரேசுவரர் மலையின் மேல் ஏறிப்பார்க்கையில் ஒரு குரோசம் வரையில் எட்டு திக்குகளிலும் பைரவனுடைய ஸைனிகர்களால் வியாபிக்கப் பட்டிருந்ததைக் கண்டார்கள்.

बलं ददृशतुर्वीरौ भैरवस्यागतं महत् ।
दिक्ष्वष्टासु सुपूर्णं तत् आक्रोशं समदृश्यत ॥

பலம் தத்ருஶதுர் வீரௌ பைரவஸ்யாகதம் மஹத் ।
திக்ஷ்வஷ்டாஸு ஸுபூர்ணம் ததாக்ரோஶம் ஸமத்ருச்யத ॥

[ இந்த கதாபாகம் வரைதான் சிருங்கேரி மடம் ஏட்டுப் பிரதியில் கிடைத்திருக்கிறது மேலால் உள்ள சரித்திரம் காசி லக்ஷ்மண சாஸ்திரி எழுதியிருக்கும் குருவம்ச காவ்யத்தைத் தழுவியே எழுதப்படுகிறது.]

மறுநாள் காலையில் நிச்சப்தமாயிருந்தபடியால் எழுந்திருந்தவுடன் பார்க்கையில் பைரவனுடைய ஸைன்யத்தைக் காணவேயில்லை. எங்கு போய்விட்டது, ஏன் போய்விட்டது, என்று அறியமுடியாமல் யாவரும் ஆச்சர்யப்பட்டார்கள். சிருங்கேரி க்ஷேத்திரத்தை ஆதி சங்கர பகவத் பாதாசார்யார் ஸ்தாபிக்கும்போது, கிராம ரக்ஷணத்திற்காக கீழ்திசையில் காலபைரவரையும், தென்

திசையில் துர்க்கா தேவியையும், மேற்கே ஹநுமாரையும், வடக்கே மஹா காளியையும் பிரதிஷ்டை செய்து நாளது வரை அந்த தேவதைகள் ஆராதிக்கப்பட்டு வருகிறார்கள். சிருங்கேரிக்கே ஆபத்து நேரிட்டு, ஸ்ரீமத் ஆசார்யார் மடத்திற்குள் இருந்துகொண்டு துரித நிவாரணத்தை உத்தேசித்து உக்கிரமாக மந்திர ஜபமும் தபஸும் செய்து வரும்போது, அந்த திக் தேவதைகள் ரக்ஷித்தும் கொடுக்க வேண்டியவர்களல்லவா? அவர்களே ஆயுதம் எடுத்து யுத்தம் செய்து பைரவனுடைய ஸேனையை விரட்டியிருப்பதாகத் தெரிந்தது. எதிரிகள் உபயோகித்த குண்டுகளால் தங்களுக்குக் காயமேற்பட்டதாக அவர்கள் ஸ்ரீமத் ஆசார்யரின் ஸ்வப்னத்தில் கைகால் முதலிய அங்கங்களைக் காட்டினார்கள். இந்த விருத்தாந்தம் தெரிந்தபிறகு ஸ்ரீ ஸ்வாமிகளுடைய தைர்யத்தையும், தபோ மஹிமையையும் தேவதானுக்ரஹத்தையும் பார்த்து, ராவண ஸம்ஹாரமான பிறகு ஸகல ஜனங்களும் ஸ்ரீ ராமரைப் புகழ்ந்தது போல், ஸ்ரீ ஸ்வாமிகளை வெகு ஆச்சர்யத்துடன் ஸ்தோத்திரம் செய்தார்கள்.

महतो बहुतरतपसा वहतां ममतां सुदेवतानां च ।
अस्त्रैः स्वैर्निर्मुक्तैः प्रत्यस्त्रैर्वारितैरभूत् स्वास्थ्यम् ॥

तत्र विचित्रं हनुमत्प्रमुखा देवा यतीशितुः स्वप्ने ।
अस्त्राग्निशिखाग्लानं हस्ततलादिकमदर्शयन्ताङ्गम् ॥

भैरवकालीदुर्गा भैरवसेनां पलाययामासुः ।
सकलमभीष्टं पूर्णं क्षिप्रमहो देवताप्रसादबलात् ॥

प्रशशंसुरखिललोका भृशशान्तं धैर्यवन्तमनिशं तम् ।
हतदशकण्ठं दशरथसुतमिव मुनयोऽतिविस्मयेन तदा ॥

மஹதோ பஹுதர தபஸா வஹதாம் மமதாம்
ஸுதேவதானாம் ச ।

அஸ்த்ரை: ஸ்வைர்நிர்முக்தை:
ப்ரத்யஸ்த்ரைர்வாரிதைரபூத் ஸ்வாஸ்த்யம் ॥

தத்ர விசித்ரம் ஹநுமத் ப்ரமுகா தேவா யதீசிது:
ஶ்வப்னே ।
அஸ்த்ராக்னி ஶிகாக்லானம்
ஹஸ்ததலாதிஸமதர்ஶயந்தாங்கம் ॥

பைரவ காளீதுர்கா பைரவஸேனும் பலாயயாமாஸு: ।
ஸகலமபீஷ்டம் பூர்ணம் க்ஷிப்ரமஹோ தேவதா
ப்ரஸாதபலாத் ॥

ப்ரஶஶம்ஸுரகில லோகா ப்ருஶஶாந்தம்
தைர்யவந்தமநிஶம் தம் ।
ஹததஶகண்டம் தஶரதஸுதமிவ முநயோऽதிவிஸ்மயேந
ததா ॥

[ குருவம்ச காவ்யம் X 56—59 ]

இவ்விதமாக ஸகலவித கவலைகளும் நீங்கியான பிறகு ஸ்ரீ ஸ்வாமிகளும் சிருங்கேரி நகர வாசிகளும் ஸ்வஸ்தசித்தர்களாக இருந்துவந்தார்கள். அப்பொழுது பிரஜைகளின் நன்மையைக் கருதி ஒருவிதமான நியாயமான தீர்வை வியவஸ்தையைச் செய்துகொண்டார்கள். அவசியமான இடங்களில் அணைகள் கட்டி பாசனத்திற்கு வேண்டிய ஸௌகர்யங்கள் செய்து கொடுக்கப்பட்டன. பாக்குத் தோட்டங்கள் முன்னைவிட விருத்திக்கு வந்ததுடன் அதிகப் படுத்தவும்பட்டன. மற்றும் பல விதங்களிலும் ஸம்ஸ்தானத்தை வெகு செழிப்பாக இருக்கும்படிச் செய்து எல்லா பிரஜைகளும் திருப்தியுடன் ஸந்தோஷமாக காலக்ஷேபம் நடத்தும்படி செய்துகொடுத்தார். யாவரும் எவ்விதக் குறைவுமில்லாமல் ஸந்தோஷமாய் இருந்துவருவதினாலேயே ஸ்ரீமடம் நிர்வாகத்தில் சிரமமேயில்லாமல், ஸ்ரீமத் ஆசார்யார் தன்னுடைய ஆஹ்நிகங்கள், பூஜை, தபஸ் முதலானதுகளில் ஈடுபட்டுக்கொண்டு ஆனந்தமாயிருந்து வந்தார்கள்.

जाग्रन्नित्योत्साहो द्राग्राज्ये पूगनिष्कुटान् पूर्णान् ।
लालनवाञ्छाधुर्यात् पालितसकलप्रजो व्यवीवृधत ॥

अपि तत्र तत्र सेतून् अबन्धयद्धर्मसिन्धुरेष मुनिः ।
संततपरमानन्दः सच्चिदानन्दसार्वभौमेन्द्रः ॥

ஜாக்ரந்நித்யோத்ஸாஹோ த்ராக்ராஜ்யே பூக நிஷ்குடான் பூர்ணான் ।
லாலநவாஞ்மாதுர்யாத் பாலிதஸகலப்ரஜோ வ்யவீவ்ருதத ॥

அபி தத்ர தத்ர ஸேதூன் அபந்தயத்தர்மஸிந்துரேஷ முனி: ।
ஸந்ததபரமானந்த: ஸச்சிதானந்தஸார்வபௌமேந்த்ர: ॥

[குருவம்ச காவ்யம் X 61—62 ]

## அத்யாயம் 10

## ஸ்ரீமத் ஆசார்யாரின் கிருதிகள்

அஹோபல பட்டர் என்னும் பண்டிதர் ஸ்ரீமடத்தில் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் பிரவசனம் செய்ததைக் கேட்டதும், ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஸ்ரீராமசரித்திரத்தை சுருக்கமாக எழுதவேண்டுமென்ற ஸங்கல்பம் தோன்றி, பட்டாபிஷேகம் வரையுள்ள ஆறு காண்ட கதையையும் கொஞ்சம் விஸ்தாரமாகவே எழுதி அந்த மஹா காவ்யத்திற்கு ஸ்ரீராமசந்திர மஹோதயம் என்று பெயரிட்டார் என்ற விஷயம் முன் 5-வது அத்யாயத்தின் கடைசியில் சொல்லப்பட்டது. இப்பொழுது சிருங்கேரிமடம் புஸ்தக கோசத்தில் இருக்கும் ஏட்டுப்பிரதியில் பால காண்டம், அயோத்யாகாண்டம் ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டத்தில் முதல் ஸர்க்கம் வரைதான் காண்கிறது. பூர்ணமான பிரதி கிடைக்கவில்லை.

ஸ்ரீ ஸ்வாமிகளின் பூர்வாசிரம கிராமமான ஜாண்டிரப்பட்டி என்ற அர்த்த நாரீசுவரபுரத்தில் ஸ்ரீராமர் கோவில்

ஒன்று இருந்ததாக முதல்பாகம் ஆரம்பத்தில் குறிப்பிடப் பட்டது. அந்த மூர்த்தியை உத்தேசித்து புஜங்கப் பிரயாத விருத்தத்தில் 36 சுலோகங்கள் எழுதியிருக்கிறார். அங் குள்ள ஆலயத்தின் அமைப்பும் மூர்த்திகளின் அழகும் பிரதி தினம் நடக்கும் பூஜா விவரங்களும் நன்கு வர்ணிக்கப் பட்டிருக்கின்றன.

जयज्ञाण्ड्रपट्टीवरग्रामसंस्थ-
द्विजग्रामवन्द्याय सद्वन्दिताय ।
नमस्ते सुपट्टाभिरामाय रामा-
शिरोरत्नसीताविशिष्टाय नित्यम् ॥

ஜயஜ்ஜாண்ட்ர பட்டீ வரக்ராம ஸம்ஸ்த்த
த்விஜக்ராம வந்த்யாய ஸத்வந்திதாய ।
நமஸ்தே ஸுபட்டாபிராமாய ராமா
ஶிரோ ரத்ன ஸீதா விஶிஷ்டாய நித்யம் ॥

ஸ்ரீராமசந்திரரை வெகு அழகாக ஸகுணமாக வர்ணித்துவிட்டு அவரே வேதாந்தப் பிரதிபாத்யமான பரப்பிரஹ்மம் என்றும் காட்டுகிறார் :—

भ्रमद्भृङ्गमन्दारमालासहस्रैः
लसत्कम्बुकण्ठाय हारैरमूल्यैः ।
लसन्मन्दहासाय बिम्बाधराय
प्रभातोल्लसत्पद्मपत्रेक्षणाय ॥

नमस्तेऽस्तु सल्लक्षणैरन्विताय
प्रकृष्टैर्गुणैर्वाऽथ भो निर्गुणाय ।
परब्रह्मरूपाय वेदान्तवाक्य-
प्रकाश्यार्थलभ्याय सद्भाविताय ॥

ப்ரமத் ப்ருங்க மந்தார மாலா ஸஹஸ்ரை:
லஸத்கம்பு கண்டாய ஹாரைரமூல்யை: ।

லஸன்மந்த ஹாஸாய பிம்பாதராய
ப்ரபாதோல்லஸத்பத்ம பத்ரேக்ஷணாய ll

நமஸ்தேZஸ்து ஸல்லக்ஷணை ரந்விதாய
ப்ரக்ருஷ்டைர் குணைர்வாZத போ நிர்குணாய l
பரப்ரஹ்மரூபாய வேதாந்த வாக்ய -
ப்ரகாஶ்யார்த்த லப்யாய ஸத்பாவிதாய ll

இந்த ராமபுஜங்கமாகிற பெரிய ஸர்ப்பம் ஹ்ருதயமாகிற பொந்துக்குள் நுழைந்த க்ஷணமே அங்குள்ள காமம் குரோதம் முதலிய எலிகள் ஓடியேபோய் விடும் என்று பல சுருதியும் சொல்கிறுர் :—

प्रविष्टे हृद्बिले रामभुजङ्गे सुमहत्यथ ।
किं क्षमाश्चरितुं तत्र कामक्रोधादिमूषकाः ॥

ப்ரவிஷ்டே ஹ்ருத்பிலே ராமபுஜங்கே ஸுமஹத்யத l
கிம் க்ஷமாச்சரிதும் தத்ர காமக்ரோதாதி மூஷகா: ll

ஸ்ரீராமர் விஷயமாக வேறு விருத்தங்களிலும் ஸ்தோத்ரங்கள் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. ஆனல் சரியான பிரதி அகப்படவில்லே. ஒரு ஏட்டில்

गौतमस्य शापतोऽस्य यत्कलत्रमप्यभूत्
देवराजसङ्गतः शिलात्वमाप तत् किल ।
पादसेवनेन ते पुनः स्वरूपतः
प्रादुरास ते पुरः (च) कौशिकस्य च ॥

கௌதமஸ்ய ஶாபதோZஸ்ய யத் களத்ரமப்யபூத்
தேவராஜஸங்கத: ஶிலாத்வமாப தத் கில l
பாதஸேவனேன தே புன: ஸ்வரூபத:
ப்ராதுராஸ தே புர: (ச) கௌஶிகஸ்ய ச ll

என்று ஆரம்பித்து திருத்தாமலும் பூர்த்தியாகாமலும் நாலைந்து சுலோகங்கள் காண்கின்றன. அப்படியே வேறு ஒரு இடத்தில் இந்த சுலோகம் காணப்படுகிறது:—

अखिलवरगुणाढ्यं योगिनां ध्येयरूपं
नतसुरवरजालं तत्पदस्यैकलक्ष्यम् ।
मणिखचितविभूषं मर्दिताशेषदुष्टं
मुखविजितसरोजं भावये रामचन्द्रम् ॥

அகிலவரகுணாட்யம் யோகினாம் த்யேயரூபம்
நதஸுரவரஜாலம் தத்பதஸ்யைக லக்ஷ்யம் ।
மணிகசிதவிபூஷம் மர்திதாசேஷதுஷ்டம்
முகவிஜிதஸரோஜம் பாவயே ராமசந்த்ரம் ॥

ஸ்ரீ ஸ்வாமிகள் பீடத்திற்கு வந்த பிறகு மதுரைக்கு விஜயம் செய்ததாக குருவம்ச காவ்யத்தில் காணவில்லை. அவர்களுடைய சரித்திரத்தை விஸ்தாரமாக வர்ணிக்கும் ஏட்டுச்சுவடியில் பின்பாகம் கிடைக்காததினால் அவர் மதுரைக்குப் போகவேயில்லையென்றும் நிச்சயமாய் சொல்வதற்குமில்லை. ஆனால் அவர் மதுரை மீனாக்ஷியம்மனை ஸ்துதித்து எழுதியிருக்கும் ஸ்தோத்ரம் அவர் ஆசிரமம் பெற்று தன் குருநாதருடைய கருணை கடாக்ஷத்தினால் எழுதப்பட்டதென்று வியக்தமாய் சொல்கிறார்.

आचार्यशङ्करमहोज्ज्वलसंप्रदायः
श्रीनारसिंहगुरुपुण्यकटाक्षपूतः ।
लीलाभिरेनमतनोत् स मुदैव सच्चि-
दानन्दसंयमिवरः स्तवमम्बिकायाः ॥

ஆசார்ய சங்கர மஹோஜ்ஜ்வல ஸம்ப்ரதாய:
ஸ்ரீ நாரஸிம்ஹ குருபுண்ய கடாக்ஷபூத: ।
லீலாபிரேனமதனோத் ஸ முதைவ ஸச்சி-
தானந்த ஸம்யமிவர: ஸ்தவமம்பிகாயா: ॥

மதுரை ஆலயத்தையும், அதன் ஸன்னிவேசத்தையும், நகரத்தின் அழகையும், கடைவீதிகளையும், அநேகமாய் அந்தர்வாஹிநியாயுள்ள வைகை என்ற நதியையும், ஆலயத்தில் உள்ள திவ்ய மூர்த்திகளையும், அங்கு நடக்கும் திருக்கல்யாணம் முதலான உத்ஸவங்களையும், வெகு விஸ்தாரமாக 120 சுலோகங்களில் வர்ணித்திருக்கிறார். அவர் மறுபடியும் அங்கே போகவில்லையென்று வைத்துக் கொண்டால், அவர் பால்யத்தில் தன் தகப்பனாருடன் அங்கே தங்கியிருக்கும்படி ஏற்பட்டபோது அனுபவித்ததெல்லாம் மனதில் நன்றாய் பதிந்திருக்கிறது என்று நினைக்க வேண்டும். இதில் 120 சுலோகங்கள் இருந்தாலும் "மீனாக்ஷீசதகம்" என்றே பிரஸித்தியடைந்திருக்கிறது. அக்காலத்தில் காசியிலிருந்த ஒரு பண்டிதர் இதற்கு வியாக்யானம் எழுதியிருக்கிறார். மூலம் வியாக்யானம் இரண்டும் சிருங்கேரி ஸ்ரீமட புஸ்தக கோசத்தில் ஏட்டுப் பிரதியாக இருந்து வருகின்றன. [1]

बालार्ककोटिरुचिरे वरदे वरेण्ये
बाले बलप्रमथने मदनप्रवीणे ।
लीलासहस्रनिपुणे च महाविहार-
शीले सुमीननयने कुरु मङ्गलानि ॥

பாலார்க கோடிருசிரே வரதே வரேண்யே
பாலே பலப்ரமதனே மதநப்ரவீணே ।
லீலா ஸஹஸ்ர நிபுணே ச மஹாவிஹார
சீலே ஸுமீநநயனே குரு மங்களானி ॥

1 இந்த ஸ்தோத்திரத்திற்கு வியாக்யானமும் இருக்கிறபடியால் இரண்டையும் சேர்த்துப் பின்னால் அச்சிடலாமென்ற நோக்கத்துடன் சில குறிப்பான சுலோகங்களை மாத்திரம் பொறுக்கி ஸ்ரீ சங்கர கிருபாவில் தமிழ் அர்த்தத்துடன் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ராமபுஜங்க ஸ்தோத்திரம் பூராவையும் தமிழர்த்தத்துடன் அதே பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

என்று ஆரம்பித்து ஸகுணமாகவும் சிருங்கார பிரதான மாகவும் வர்ணிக்கிறார். ஆனாலும் அம்பிகையின் வாஸ்தவ ஸ்வரூபம் வேதங்களுக்குக்கூட எட்டாதது, நீ நான் என்ற வேற்றுமையற்றது என்பதையும் காட்டுகிறார்.

देवि श्रुतिश्रुतिमतां वचसां विदूरे
विद्रावितखिलशुभेतरकर्मजाले ।
ओंकारनादपरिभावितदिव्यरूपे
त्वंकारभेदरहिता वस मेऽन्तरङ्गे ॥

தேவி ச்ருதி ச்ருதிமதாம் வசஸாம் விதூரே
வித்ராவிதாகில ஶுபேதர கர்மஜாலே ।
ஓங்கார நாதபரி பாவித திவ்யரூபே
த்வங்கார பேதரஹிதா வஸ மேZந்தரங்கே ॥

அப்படியே, ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள் அனுக்கிரஹித்திருக்கிற மீனாக்ஷீ பஞ்சரத்தின ஸ்தோத்திரத்தை அனுஸரித்து இவரும் அதே விருத்தத்தில் 10 சுலோகங்கள் எழுதியிருப்பதாகத்தெரிகிறது. அவைகளில் முதல் சுலோகத்தில், பாண்டிய ராஜனின் புத்திரியாக அவதரித்து, கதம்ப வனத்தில் விளையாடிக்கொண்டு பொற்றாமரைக்கரையில் கோவில் கொண்டு, கையில் கிளியை ஏந்தி, மதுராபுர நாயகியாய், ஸ்ரீ ஸுந்தரேசுவரருக்குப் பிரிய பத்தினியாய் விளங்கிக்கொண்டு, மீனாக்ஷீ என்று திருநாமம் கொண்டு, தர்சனம் அளித்துவரும் கௌரியை வணங்குகிறேன் என்கிறார்.

गौरीं काञ्चनपद्मिनीतटगृहां श्रीसुन्दरेशप्रियां
नीपारण्यसुवर्णकन्दुकपरिक्रीडाविलोलां उमाम् ।
श्रीमत्पाण्ड्यकुलाचलाग्रयविलसद्रत्नप्रदीपायितां
मीनाक्षीं मधुरेश्वरीं शुकधरां श्रीपाण्ड्यबालां भजे ॥

கௌரீம் காஞ்சன பத்மினீ தடக்ருஹாம்
ஸ்ரீஸுந்தரேச ப்ரியாம்
நீபாரண்ய ஸுவர்ண கந்துக பரிக்ரீடா விலோலாம் உமாம் ।
ஸ்ரீமத் பாண்ட்ய குலாசலாக்ர்ய விலஸத் ரத்ன ப்ரதீபாயிதாம்
மீனாக்ஷீம் மதுரேச்வரீம் சுகதராம்
ஸ்ரீபாண்ட்யபாலாம் பஜே ॥

இதன் ஆரம்பத்திலுள்ள "கௌரீம்" என்கிற பதத்தையும் நான்காவதுபாதம் பூராவையும் அப்படியே வைத்துக்கொண்டு மேலுள்ள எட்டு சுலோகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. பத்தாவது சுலோகத்தில் மீனாக்ஷியம்மனுடைய திருநாமத்தை உச்சரித்தால், ( அவள் रमावाणी सव्यदक्षिणसेविता என்று லக்ஷ்மியினாலும் ஸரஸ்வதியினாலும் ஸேவிக்கப்படுகிறபடியால் ) அவ்விதம் உச்சரிப்பவருடைய கிருஹத்தில் லக்ஷ்மியும் வாக்கில் ஸரஸ்வதியும் குடிகொண்டிருப்பார்கள் என்பதுடன், தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்ற நான்குவித புருஷார்த்தங்களும் கைகூடுமென்று விளக்குகிறார்.

वाचा वा मनसाऽपि वा गिरिसुते कायेन वा संततं
मीनाक्षीति कदाचिदम्ब कुरुते त्वन्नामसंकीर्तनम् ।
लक्ष्मीस्तस्य गृहे वसत्यनुदिनं वाणी च वक्त्राम्बुजे
धर्माद्यर्थचतुष्टयं करतलप्राप्तं विधत्से नृणाम् ॥

வாசா வா மநஸாபி வா கிரிஸுதே காயேன வா ஸந்ததம்
மீனாக்ஷீதி கதாசிதம்ப குருதே த்வந்நாம ஸங்கீர்த்தனம் ।
லக்ஷ்மீஸ்தஸ்ய க்ருஹே வஸத்யநுதிநம் வாணீ ச
வக்த்ராம்புஜே
தர்மாத்யர்த்த சதுஷ்டயம் கரதலப்ராப்தம்
விதத்ஸே ந்ருணாம் ॥

சிருங்கேரி நகரத்தின் மத்தியில் குன்றின்மேல் கோவில் கொண்டிருக்கும் ஸ்ரீ மலஹானிகரேசுவரர் ஆலயத்தில் இந்த ஆசார்யார் பவானி என்ற பெயருடன் அம்பிகையை

பிரதிஷ்டை செய்து பலவித உத்ஸவங்களைத் துவக்கி வைத்தார். அவ்வுத்ஸவங்களில் திருக்கல்யாண உத்ஸவ ஸமயத்தில் தம்பதிகள் மஞ்சளிட்டு நலங்கு நடக்கும்போது அம்பிகை சொல்வதாக 10 சுலோகங்களும் பகவான் சொல்வதாக 8 சுலோகங்களும் அழகாக பத்தியமாகப் பாடும்படியாக இயற்றிக்கொடுத்திருக்கிறார். அப்படியே அவர்களுக்குள் பிரணய கலகம் ஏற்படுவதுபோல் கல்பித்து இருவரும் ஸம்பாஷணம் செய்வதாகவும், பிறகு இருவரும் சேருவதாகவும் ஸந்தானோத்ஸவம் என்று பெயரிட்டு 11 சுலோகங்களையும் எழுதிக்கொடுத்திருக்கிறார். இப்பொழுதும் பிரதி வருஷம் அவ்வுத்ஸவங்கள் நடக்கும் ஸமயம் அந்த சுலோகங்கள் சொல்லப்படுகின்றன.[1]

சிருங்கேரியில் நடக்கும் உத்ஸவங்களில் ஸ்ரீமத் ஆசார்யார் தர்சனம் செய்யும்போது சில ஸமயம் ஏதேனும் சுலோகங்கள் புதிதாகச் சொல்வார்களென்று தெரிகிறது. அவ்விதமேற்பட்ட சில சுலோகங்கள் மாத்திரம்தான் அவ்வப்பொழுது கூடவிருந்தவர்களால் குறித்துவைக்கப் பட்டிருக்கிறதாகவும் தெரிகிறது. ஸ்ரீ சாரதாம்பிகையைப் பற்றியே அதிகமான சுலோகங்கள் இருந்து வருவது ஸஹஜமே. அவைகளில் ஒரு சுலோகம் இங்கு உதாஹரிக்கப் படுகிறது. அம்பிகையினிடம் அன்னபக்ஷி இருப்பதற்குக் காரணம் இவ்வாறாக உத்ப்ரேக்ஷிக்கப்படுகிறது.

ब्रह्माद्यण्डभवस्तथाऽहमपि, यद्येनं विसृज्येश्वरं
सेवे सोऽपि पिशाचसंहतिविभुः, विष्णुः शयालुः सदा।
गच्छेयं शतमन्युमेनमिति चेन्नाम्नाऽलं, एवं दृढं
निश्चित्य द्रुतमाप कल्पलतिकां हंसः परां देवताम् ॥

1. இந்த ஹரித்ரார்ப்பண சுலோகங்களும் ஸந்தான சுலோகங்களும் பூராவாக தமிழர்த்தத்துடன் ஏற்கனவே ஸ்ரீ சங்கர கிருபாவில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன.

ப்ரஹ்மாத்யண்ட பவஸ்ததாZஹமபி
யத்யேனம் விஸ்ருஜ்யேச்வரம்
ஸேவே ஸோZபி பிஶாச ஸம்ஹ்ருதி விபு: விஷ்ணு:
ஶயாளு: ஸதா ।
கச்சேயம் ஶதமந்யுமேநமிதி சேந்நாம்நாZலம் ஏவம் த்ருடம்
நிச்சித்ய த்ருதமாப கல்பலதிகாம் ஹம்ஸ:
பராம் தேவதாம் ॥

"ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் இருந்த முட்டையிலிருந்து பிரஹ்மா உண்டானுர், நானும் முட்டையிலிருந்துதான் பிறந்திருக்கிறேன். பிரஹ்மாவை நான் ஸேவிப்பது உசித மாகாது. அவரை விட்டுவிட்டு பரமசிவனை உபாஸிக்க நினைத்தால், அவர் பூத பிசாசாதி கூட்டங்களுக்கல்லவா தலைவர் என்று தோன்றுகிறது. மஹாவிஷ்ணு மனோஹர மூர்த்தியல்லவா என்று கவனிக்கும்போது, அவர் எப்பொழுதும் படுத்துக்கொண்டிருக்கிருரேயென்று ஞாபகம் வருகிறது. திரிமூர்த்திகளும் வேண்டாம், தேவர்களுக்கு அதிபதியான இந்திரனை ஸேவிப்போமென்ருல் அவனுடைய பெயர் "சதமன்யு" கணக்கில்லாத கோபங்களையுடையவர் என்பதே அவனிடத்தில் நெருங்காமலிருப்பதற்குப் போதும். இவ்விதமாக ஹம்ஸபக்ஷி பலவிதமாக ஆலோசித்து தீவிரமாக நிச்சயம் செய்துகொண்டு கேட்பதையெல்லாம் கொடுக்கும் ஸ்வபாவமுள்ள கல்பலதைபோலுள்ள பரதேவதையான ஸ்ரீ சாரதாம்பாளை வேகமாக வந்து அடைந்தது."

ஸ்ரீ ஸ்வாமிகள் அம்பிகையைப்பற்றி அநேகம் கீர்த்தனைகளையும் ரசனை செய்து நன்கு பாடும்படியாக ராகம் தாளம் இவைகளையும் குறிப்பிட்டிருக்கிருர்.[1]

ஸ்ரீ ஸ்வாமிகள் மற்ற தேவதைகளைப்பற்றி சொல்லியிருக்கும் சுலோகங்களில், ஸுப்ரஹ்மண்யரைப்பற்றியும்,

1. இவற்றில் சில கீர்த்தனைகளை ஸ்வரப்படுத்தி ஸ்ரீ சங்கர கிருபாவில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

வெங்கடேசுவரரைப்பற்றியும் உள்ளவைகளிலிருந்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கே அந்த ஸமயத்தில் சரீரத்தில் ஏதோ அஸௌகரியமிருந்ததாக ஊஹிக்க இடம் கொடுக்கிறது.

सुब्रह्मण्य सुरेश सूरिजनतासंमोदसंदोहद
प्रेमप्रेष्ठतम प्रवीण कलय प्रोद्यत्कटाक्षान् मयि ।
पापं संहर पार्वतीसुत परा काष्ठा गतिस्त्वं हि नः
पापिप्राणिनमेनमामयमुखात् दीनं त्वदालम्बिनम् ॥

ஸுப்ரஹ்மண்ய ஸுரேஶ ஸூரிஜநதா
ஸம்மோத ஸந்தோஹத
ப்ரேம ப்ரேஷ்டதம ப்ரவீண கலய ப்ரோத்யத்
கடாக்ஷான் மயி ।
பாபம் ஸம்ஹர பார்வதீஸுத பரா காஷ்டா
கதிஸ்த்வம் ஹி நः
பாபி ப்ராணிநமேனமாமயமுகாத் தீனம் த்வதாலம்பினம் ॥

என்று ஸுப்ரஹ்மண்யரையும்,

श्रीवेङ्कटेश करुणाकर वारिजाक्ष
पाहि ह्यनन्यशरणं रुजयाऽतिदीनम् ।
विश्वंभरस्य तव मामकतर्षदानं
भारः कियान् नतजनेष्टफलप्रदस्य ॥

ஸ்ரீ வேங்கடேஶ கருணாகர வாரிஜாக்ஷ
பாஹி ஹ்யநந்ய ஶரணம் ருஜயாதிதீனம் ।
விஶ்வம்பரஸ்ய தவ மாமகதர்ஷ தானம்
பார: கியான் நதஜநேஷ்ட பலப்ரதஸ்ய ॥

என்று ஸ்ரீ வெங்கடேசரையும் பிரார்த்திக்கிறார். ஸ்ரீ கிருஷ்ணரைப்பற்றி,

कृष्णाश्रयमहं वन्दे दुर्योधनकुलान्तकम् ।
कालिङ्गगर्वहरणं कलापवदतिप्रियम् ॥

घनंजयाश्रयः श्रीमान् स भोगी गोप्रियो विभुः ।
सर्वदा मापतिः पायात् अब्जमङ्के बिभर्ति यः ॥

க்ருஷ்ணாச்ரயமஹம் வந்தே துர்யோதன குலாந்தகம் ।
காலிங்க கர்வஹரணம் கலாபவததிப்ரியம் ॥

தனஞ்ஜயாச்ரய: ஸ்ரீமான் ஸ போகீ கோப்ரியோ விபு: ।
ஸர்வதா மாபதி: பாயாத் அப்ஜமங்கே பிபர்தி ய: ॥

என்று வர்ணிக்கிறார்.

இவைகளைத்தவிர, ஸ்ரீ சிருங்கேரி குருபரம்பரையைப் பற்றி "குரு சதகம்" என்று சுமார் 120 சுலோகங்களை எழுதியிருக்கிறார். இதற்கு லக்ஷ்மண சாஸ்திரி என்பவர் அவர் காலத்திலேயே வியாக்யானமும் எழுதியிருக்கிறார். இதில் உள்ள முதல் 16 சுலோகங்கள் திரிமூர்த்திகளையும், பிறகு வஸிஷ்டர் முதல் கோவிந்தபாதர் முடிய உள்ள குரு சிரேஷ்டர்களை 33வது சுலோகம் வரையிலும் வர்ணித்திருக்கிறார். பிறகு 20 சுலோகங்களில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாரை வர்ணிக்கிறார். வேதமாகிற பாற்கடலை தன் புத்தியாகிய மத்தினால் கடைந்து பாஷ்யமென்ற அமிருதத்தை எடுத்துக்கொடுத்தவர், ஸரஸ்வதியை ஜயித்து பூலோகத்தில் இருக்கச்செய்தவர், ஸௌந்தர்யலஹரீ முதலானவைகளை இயற்றி உலகத்தை நிர்மலமாயும் பவித்திரமாகவும் செய்தவர், நான்கு புஜங்களோடு மஹாவிஷ்ணு பிரகாசிப்பதுபோல் நான்கு சிஷ்யர்களுடன் விளங்கினவர், என்றெல்லாம் வர்ணித்திருக்கிறார்.

येन श्रीशङ्कराचार्यगुरुणा गुरुबुद्धिना ।
मथितं भाष्यपीयूषं तस्मै श्रीगुरवे नमः ॥

रमणीयेन वादेन विजिता येन भारती ।
आनीता च भुवो भागं तस्मै श्रीगुरवे नमः ॥

सौन्दर्यलहरीश्लोकलहरीकहरीतकी ।
निर्मलीकुरुते वाचं तस्मै श्रीगुरवे नमः ॥

ऋश्यशृङ्गतपस्स्थाने तपस्तेपे च यो मुनिः ।
नानाव्याख्यानकृद्यश्च तस्मै श्रीगुरवे नमः ॥

यद्वाग्विनिस्सृतानन्तविशुद्धपदजान्हवी ।
पवित्रीकुरुते नित्यं तस्मै श्रीगुरवे नमः ॥

शिष्यैश्चतुर्भिर्गोविन्दश्चतुर्भिरिव बाहुभिः ।
विराजते मुनिश्रेष्ठः तस्मै श्रीगुरवे नमः ॥

யேந ஸ்ரீ சங்கராசார்ய குருணு குருபுத்திநா ।
மதிதம் பாஷ்யபீயூஷம் தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥

ரமணீயேந வாதேந விஜிதா யேந பாரதீ ।
ஆநீதா ச புவோ பாகம் தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

ஸௌந்தர்யலஹரீ ச்லோக லஹரீகஹரீதகீ ।
நிர்மலீ குருதே வாசம் தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

ருச்யச்ருங்க தபஸ்ஸ்த்தானே தபஸ்தேபே ச யோ முனி: ।
நாநாவ்யாக்யான க்ருத்யச்ச தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

யத்வாக்விநிஸ்ஸ்ருதாநந்த விஶுத்த பத ஜாஹ்னவீ ।
பவித்ரீ குருதே நித்யம் தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

ஶிஷ்யைச்சதுர்பி: கோவிந்தச்சதுர்பிரிவ பாஹுபி: ।
விராஜதே முனிச்ரேஷ்ட: தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

பிறகு அந்த நான்கு சிஷ்யர்களேயும் சிருங்கேரி ஆசார்யர்களேயும் வரிசையாய் நமஸ்கரித்து வருகையில், ஸ்ரீ வித்யாசங்கரரைப்பற்றி

श्रीविद्याशङ्करायाद्य विद्यातीर्थाभिधाय च ।
लम्बकर्णाय शुद्धाय तस्मै श्रीगुरवे नमः ॥

अष्टाङ्गलक्षणो धर्मो यस्यातिसुलभोऽभवत् ।

लम्बिकायोगसंस्थाय तस्मै श्रीगुरवे नमः ॥

ஸ்ரீ வித்யா ஶங்கராயாத்ய வித்யாதீர்த்தாபிதாய ச ।
லம்பகர்ணாய ஶாந்தாய தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

அஷ்டாங்கலக்ஷணோ தர்மோ யஸ்யாதி ஸுலபோऽபவத் ।
லம்பிகா யோகஸம்ஸ்த்தாய தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

வித்யாதீர்த்தராயிருந்தவர் லம்பிகாயோக நிஷ்டராய் வித்யாசங்கரராக இருந்துவருபவர் என்றும், வித்யாரண்யரைப்பற்றி

विद्यारण्यमुनीशाय विद्यारण्येषु नित्यशः ।
चरत्केसरिणे माद्यद्विद्वत्कुञ्जरवैरिणे ॥

सुप्रसिद्धमहाग्रन्थकरणे करुणान्विता ।
वशगा यस्य वागीशा तस्मै श्रीगुरवे नमः ॥

पुरा हरिहराभिख्यपृथिवीमण्डलेशितुः ।
स्थापको यश्च कालज्ञः तस्मै श्रीगुरवे नमः ॥

यस्य चान्दोलिकादण्ड एकतो मानुषैर्धृतः ।
एकतो भूतवेतालैः तस्मै श्रीगुरवे नमः ॥

வித்யாரண்யமுநீஶாய வித்யாரண்யேஷு நித்யஶ: ।
சரத்கேஸரிணே மாத்யத்வித்வத்குஞ்ஜர வைரிணே ॥

ஸுப்ரஸித்த மஹாக்ரந்தகரணே கருணாந்விதா ।
வஶகா யஸ்ய வாகீஶா தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

புரா ஹரிஹராபிக்யப்ருதிவீமண்டலேஶிது: ।
ஸ்தாபகோ யச்ச காலக்ஞ: தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

யஸ்ய சாந்தோலிகாதண்ட ஏகதோ மாநுஷைர்த்ருத: ।
ஏகதோ பூதவேதாளை: தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

எவருக்கு வாக்தேவதை ஸ்வாதீனமாயிருந்து பிரஸித்த மான கிரந்தங்களை எழுத உதவினளோ, எவர் விஜயநகர ஸம்ஸ்தானத்தை ஏற்படுத்தி அதில் ஹரிஹர மஹாராஜனை ஸ்தாபித்தாரோ, எவருடைய பல்லக்கு ஒருபக்க கொம்பில் மாத்திரம் மனிதர்களாலும் மற்றென்று பூதவேதாளங் களாலும் சுமக்கப்பட்டதோ, என்றும் விஸ்தாரமாக வர்ணித் திருக்கிருர். அதன் பிறகு வந்த ஆசார்யர்களையும் கிரம மாக வர்ணித்துவிட்டு, கடைசியில் தன்னுடைய குருநாத ரான அபிநவ நரஸிம்ஹபாரதீஸ்வாமிகளை 24 சுலோகங் களில் வர்ணிக்கிருர். தன்னுடைய வாக்சக்தியினல் துர்வாதிகளையும், தேஜஸ்ஸினல் ஸூர்யனையும், காம்பீர்யத் தினல் ஸமுத்திரத்தையும் ஜயித்தவர் என்றும், வாதத்தில் ஸிம்ஹமாயும், தானத்தில் உதாரராயும், பிரவசனத்தில் ஆதிசேஷனையுமிருப்பவர் என்றும், சிவகீதைக்கு வியாக் யானம் எழுதினவர் என்றும், பலவாருக ஸ்துதித்துவிட்டு, குரு நமஸ்காரரூபமான இந்த ஸ்தோத்ரம் கங்கா நதி மாதிரி எல்லாரையும் பவித்திரமாக்குமென்று சொல்லிமுடிக்கிருர்.

नमस्कृतिलसद्वाग्भिः शुभैषा गुरुसंततिः ।
पुनाति सकलान् लोकान् जान्हवीव प्रकीर्तिता ॥

நமஸ்க்ருதி லஸத் வாக்பி: ஶுபைஷா குரு ஸந்ததி: ।
புநாதி ஸகலான் லோகான் ஜான்ஹவீவ ப்ரகீர்த்திதா ॥

இவ்விதமாக ஸ்ரீ ராமசந்திர மஹோதய காவ்யத்தை யும், பற்பல தேவதாஸ்துதிகளையும், குருஸ்துதியையும், ஸ்ரீ ஸ்வாமிகள் எழுதியிருப்பதுடன், வித்வான்களின் வழக் கப்படி விளையாட்டாக அனேக சுலோகங்களையும் எழுதி யிருக்கிருர். உதாஹரணமாக,

का नित्यं सुखदा, करादिमपरिष्कारश्च को, मानसं
संतापं विफलीकरोति खलु कः, का मूढधीः शीलतः ।

कोऽगृह्णाद् द्विपमम्भसि, व्रजकुलोद्धर्ता च केनाचलं
(धत्ते), क्रीडत मध्यवर्णघटिते प्रश्नोत्तरस्य द्विजाः ॥

[ कमला , वलयः , महात्मा , वनिता , मकरः , करेण ]

— मलहानिकरे —

கா நித்யம் ஸுகதா, கராதிம பரிஷ்காரச்ச கோ, மானஸம்
ஸந்தாபம் விபலீகரோதி கலு க:, கா மூடதீ: ஶீலத: ]
கோऽக்ருஹ்ணாத் த்விபமம்பஸி, வ்ரஜகுலோத்தர்தா
ச கேநாசலம்
(தத்தே), க்ரீடத மத்யவர்ண கடிதே ப்ரச்னோத்தரஸ்ய

[கமலா, வலய:, மஹாத்மா, வநிதா, மகர:, கரேண]

— மலஹாநிகரே —

कं रक्षति महादेवः किं रक्षति वपुर्भृतः ।
एकमेवोत्तरं धीमन् वद प्रश्नद्वयस्य मे ॥

[ भक्तम् ]

கம் ரக்ஷதி மஹாதேவ: கிம் ரக்ஷதி வபுர்ப்ருத: ।
ஏகமேவோத்தரம் தீமன் வத ப்ரஶ்னத்வயஸ்ய மே ॥

[பக்தம்]

ஸ்ரீ ஸ்வாமிகளின் கிருதிகளைக் குறிப்பிடும் இந்த அத்யாயத்தை அவர் இயற்றியிருக்கும் ஒரு தேவீ ஸ்தோத்திர சுலோகத்துடன் முடிப்பது உசிதமாகும்.

कल्याणीं कमनीयरत्नखचितां भूषां वहन्तीं भृशं
कल्पानोकहपुष्पसंभृतकचां कामेश्वराङ्कस्थिताम् ।
वन्दे श्रीपरदेवतां परिजनानन्दौघसंदायिनीं
संस्तौम्याकलयामि संततममूमिष्टार्थसिद्ध्यै मुहुः ॥

கல்யாணீம் கமனீய ரத்னகசிதாம் பூஷாம் வஹந்தீம்
ப்ருஶம்
கல்பாநோகஹ புஷ்பஸம்ப்ருதகசாம்
காமேஶ்வராங்கஸ்திதாம் ।
வந்தே ஸ்ரீ பரதேவதாம் யரிஜனாநந்தௌக ஸந்தாயினீம்
ஸம்ஸ்தௌம்யாகலயாமி ஸந்தத மஹமிஷ்டார்த்த
ஸித்த்யை முஹு: ॥

---

## அத்தியாயம் 11

# விதேஹ கைவல்யம்

இவ்விதமாக ஸ்ரீமத் ஆசார்யார் தன்னுடைய ஆஹ்நிகம் பூஜை, தபஸ் இவைகளை ஆனந்தமாய் நடத்திக்கொண்டு ஸ்ரீமடம் நிர்வாஹத்தையும் வெகு விமரிசையாக கவனித்து வந்தார். அவரிடம் விசேஷ பக்தியுடன் பலவிதமாக ஆதரவு கொடுத்துக்கொண்டு வந்த கௌதிமஹாராஜனை வீரபத்திர நாயக்கர் எதிர்பாராமல் சுமார் 1645ல் காலம் சென்றுவிட்டார். அவருடைய பிதாமஹரான வெங்கடப்ப நாயக்கருக்குமுன் அவருடைய சிறிய தகப்பனார் சிக்க சங்கண்ண நாயக்கரும், ஸகோதரர் ராமராஜா என்பவரும், வெங்கடப்ப நாயக்கரின் தகப்பனார் தொட்டசங்கண்ண நாயக்கர் காலமானபிறகு, ராஜ்யத்தை ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு சுமார் 15 வருஷகாலம் ஆண்டு வந்து அதன் பிறகே வெங்கடப்பநாயக்கர் பட்டத்திற்கு வந்ததாகத் தெரிகிறது. வீரபத்திர நாயக்கர் காலமான பிறகு அந்த சிக்கசங்கண்ண நாயக்கரின் பௌத்திரரான சிவப்ப நாயக்கர் ராஜ்ய நிர்வாஹத்திற்கு வந்தார். முன்பு அவருக்கு ஸ்ரீமடத்தில் நெருங்கிப்பழகுவதற்கு அவகாச மிருந்ததாகத் தெரியவில்லை. அவர் பட்டத்திற்கு வந்த பிற்பாடு ஸ்ரீமடம் விஷயமாய் அவருடைய மனோபாவம் எப்படியிருக்கும் என்பதில் ஸ்ரீஸ்வாமிகளுக்கே ஸந்தேஹ

மிருந்ததாகத் தெரிகிறது. எப்படியும் அவர் அரசராக வந்துவிட்டபடியால் முன்னிருந்துவந்த ஆதரவு குறையக் கூடாதென்பதில் யாருக்கும் அக்கரையுண்டு. அவருடைய மனோநிலையை நேரில்போய்த் தெரிந்துகொள்வது உசிதம் என்று ஸ்ரீ ஸ்வாமிகள் நினைத்தார். அவ்வரசர் இருந்துவந்த பித்ருஹள்ளி அல்லது பெட்நூர் என்ற வேணுபுரததிற்குப் போய்வரவேண்டுமென்று தானுகவே ஸ்ரீ ஸ்வாமிகள் தீர்மானம் செய்துகொண்டு புறப்பட்டுவிட்டார். அரசனுக்கு முன்னுல் சொல்லியனுப்பாமலே அவ்வூர் சென்று ஸகல வாத்திய கோஷங்களுடன் அரண்மனை முன்பாகவே சென்று அங்குள்ள ஸ்ரீ நீலகண்ட தேவருடைய ஆலயம் சென்ருர். வாத்திய கோஷத்தினுல் விஷயம் அறிந்துகொண்ட சிவப்ப நாயக்கரும் உடனே அவ்வாலயம் சென்று ஸ்ரீமத் ஆசார்யாரை தர்சனம் செய்தார். உடனே ஸ்ரீ ஸ்வாமி களுடைய தபப்பிரபாவத்தில் ஈடுபட்டவராக, தன் அரண்மனைக்கு விஜயம் செய்து அநுக்ரஹிக்க வேண்டு மென்று கேட்டுக்கொண்டு அப்படியே அழைத்துச் சென்ருர்.

एतदीयैस्तपःश्रीबलैर्मोहितः
सद्विनीतो भवन् प्रार्थयन् पार्थिवः ।
सौधमायाहि मे शाधि मां बोधनैः
इत्यनैषीन्मुनीन्द्रं निजं मन्दिरम् ॥

ஏததீயைஸ்தபः ஸ்ரீபலைர்மோஹித:
ஸத்விநீதோ பவன் ப்ரார்த்தயன் பார்த்திவ: ।
ஸௌதமாயாஹி மே மாதி மாம் போதனை:
இத்யனைஷீன் முனீந்த்ரம் நிஜம் மந்திரம் ॥

— குருவம்ச காவ்யம் 11—7.

அப்படியே ஸ்ரீ ஸ்வாமிகள் அரண்மனை சென்று வெகு மனோஹரமாக ஒரு பிரஸங்கம் செய்துவிட்டு அரசர் செய்த மரியாதையைப் பெற்றுக்கொண்டு தன் மடம் திரும்பி

வந்தார். பிறகு ராஜபிக்ஷை முதலானதுகளால் விசேஷமாக ஆதரிக்கப்பட்டு எல்லா ஜனங்களுக்கும் ஸந்தோஷத்தைக் கொடுத்துக்கொண்டு அவ்வூரில் சில நாட்கள் தங்கி இருந்தார். முன் அரசர்களின் வழக்கப்படியே சிவப்ப நாயக்கரும் வெகு பக்தியுடன் நடந்துகொண்டார். கடைசி தினம் அரசரே நேரில் ஸ்ரீமடம் வந்து ஸ்ரீஸ்வாமிகளை வணங்கி மேலும் ஏராளமான வஸ்திராதிகளை ஸமர்ப்பித்து தன்னை ஆசீர்வதிக்கும்படி கேட்டுக்கொண்டார். அப்படியே ஸ்ரீஸ்வாமிகளும் அனுக்ரஹித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டு கிரமமாக சிருங்கேரிக்குத் திரும்ப வந்து சேர்ந்தார்.

பிறகு வெகு உத்ஸாஹத்துடன் ஸ்ரீமலஹானிகரேசுவரர் ஆலயத்தில் அம்பிகையையும் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று ஸ்ரீஸ்வாமிகள் ஸங்கல்பித்தார். மூல ஸ்தான கர்ப்ப கிருஹத்திற்கு வடபக்கமாக கல்லினாலேயே வெகு அழகாக ஆலயம் கட்டி வைத்து, சிலையிலேயே ஒரு மூர்த்தியை தயாரித்துப் பிறகு நல்ல தினம் நல்ல முகூர்த்தத்தில் பவானீ என்ற பெயருடன் அம்பிகையை பிரதிஷ்டை செய்வித்தார். அம்மூர்த்தியில் விசேஷமென்னவென்றால் அம்பிகைக்கு மூக்கு காதுகளில் ஆபரணங்கள் போடும்படியாக இருக்கவேண்டுமென்று துவாரங்கள் போடும்படியும் செய்திருந்தார். பிரதிஷ்டை ஸமயம் ஜபங்கள் ஹோமங்கள் பிராஹ்மண ஸந்தர்ப்பணம் தக்ஷிணை தானம் முதலானவைகளெல்லாம் வெகு சிறப்பாக நடந்தன. அவ்வாலயத்தில் கல்யா வம், ஸந்தான உத்ஸவம், தீபோத்ஸவம், ரதோத்ஸவம், முதலான உத்ஸவங்களையும் ஆரம்பித்து வைத்து வெகு விமர்சையாக நடத்திவந்தார். கல்யாணோத்ஸவத்தில் நலங்கிடும் சுலோகங்களையும் ஸந்தானோத்ஸவத்தில் பிரணயகலஹரூபமான சுலோகங்களையும் அவரே ரசனை செய்து கொடுத்த விஷயம் முந்தின அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

சிவப்ப நாயக்கர் பட்டத்திற்கு வந்தவுடன் சிருங்கேரி ஆசார்யார் தான் இருக்குமிடம் வந்து அனுக்ரஹம் செய்ததில் ஸந்தோஷமடைந்த போதிலும் அதனுல் திருப்தியடையாமல் மறுபடியும் ஆசார்யார் அனுக்ரஹம் பெற விரும்பி பின் ஒரு சமயம் தன் மந்திரிகளை அனுப்பி ஸ்ரீ ஸ்வாமிகள் வேணுபுரம் வந்து தன்னை மறுபடியும் ஆசீர்வதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அப்படியே ஸ்ரீஸ்வாமிகளும் அங்கே விஜயம் செய்து விசேஷமாக ஸத்காரம் பெற்ருர்.

சிருங்கேரி பரம்பரையில் 1517 முதல் 1560 வரை பீடாதிபத்தியம் வஹித்த ஸ்ரீ ராமசந்திரபாரதீ ஸ்வாமிகளின் சிஷ்யர் ஸ்ரீ நரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் பட்டத்திற்கு வந்திருந்தபோது அவருக்குத் துரோகம் செய்த ஒரு ஸன்யாஸியை சிருங்கேரியை விட்டே விரட்டும்படி ஏற்பட்டது. மஹாராஜரின் அனுமதியின்பேரில் அவர் ஸங்கம க்ஷேத்திரத்தில் தனியாக ஒரு மடம் கட்டிக்கொண்டு இருந்துவந்தார். அவருடைய பெயர் குருவம்ச காவ்யத்தில் காணப்படவில்லை. ஆனுல் அவருடைய நடத்தையினுல் அங்கேயும் மடாதிபதியென்று சொல்லிக்கொள்ள யோக்யதையற்றவர் என்ற பண்டிதர்களின் தீர்மானத்தை அனுஸரித்து 1576 யுவ வருஷத்தில் சிவப்ப நாயக்கரின் பாட்டனுர் சிக்கசங்கண்ண நாயக்கர் காலத்திலேயே, அதாவது வெங்கடப்ப நாயக்கர் பட்டத்திற்கு வருவதற்கு முன்னுலேயே பிறந்திருக்கும் உத்திரவில் அவர் பெயர் வித்யாரண்ய பாரதீ என்று தெரிகிறது. அவருடைய சிஷ்யரென்று சொல்லிக்கொண்டு பிரஹ்மேச பட்டர் என்பவர் தானுகவே அம்மடத்தில் பிரவேசித்துக்கொண்டிருக்கையில், அவருக்கும் எவ்வித பாத்தியதையும் கிடையாதென்று 1660-ல் சிவப்ப நாயக்கரே உத்திரவு பிறப்பித்து அந்த மடத்தையும் அதைச் சேர்ந்த திரவியங்களையும் பூமிகளையும் ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளின் ஸ்வாதீனத்தில் ஒப்புவித்துவிட்டார்.

அதன்பேரில் அவ்வூர் சென்று ஸ்வாதீனம் பெற்றுக் கொண்டதுடன் அங்கு ஒரு தேவாலயம் கட்டி, அதில் ராமேசுவரர் என்ற திருநாமத்துடன் பிரதிஷ்டை செய்தார். அம்மடத்தில் தனக்கு அதீனமாக சங்கர பாரதீ என்பவரை இருக்கும்படிச் செய்ததாகவும் தெரிகிறது.

சிவப்ப நாயக்கர் 1660-லேயே காலமாகிவிட்டபடியால் அவருடைய தம்பி வெங்கடப்ப நாயக்கர் என்பவர் ஒரு வருஷ காலம் ராஜ்ய பாரம் வஹித்தார். பிறகு சிவப்ப நாயக்கரின் மூத்த குமாரரான பத்திரப்ப நாயக்கர் என்பவர் பட்டத்திற்கு வந்தார். இவ்விரு அரசர்களுமே ஸ்ரீ ஸ்வாமி களிடம் மிகவும் ஈடுபட்டிருந்து பலவித உதவிகள் செய் திருப்பதாகத் தெரிகிறது.

இவ்விதமாக ஸ்ரீ ஸ்வாமிகள் தான் செய்யவேண்டிய சொந்தக் கார்யங்களையும் ஸ்ரீமடம் கார்யங்களையும் நன்கு நிறைவேற்றிக்கொண்டு, வித்வான்களுக்கு ஏராளமாய் ஆதரவு கொடுத்துக்கொண்டு, எப்பொழுதும் வேதாந்தப் பிரதிபாத்யமான ஆத்ம தத்வத்தை அனுஸந்தானம் செய்து கொண்டு, மஹாராஜர்களால் பூஜிக்கப்பட்டவராக, நல்ல கீர்த்தியுடன், சுமார் நாற்பது வருஷகாலம் வெகு சிறப்பாக பீடாதிபத்யத்தை நிர்வஹித்து வந்தார். பிறகு பத்திரப்ப நாயக்கர் கெளதி ஸம்ஸ்தானத்திற்கு வந்து சுமார் இரண்டு வருஷம் சென்றபிறகு, ஸ்ரீ ஸ்வாமிகள் தன்னுடைய ஆயுள்முடிவு நெருங்கிவிட்டதென்று உணர்ந்து சோபகிருத் ஜ்யேஷ்ட சுக்ல தசமிதினம் ஒரு சிஷ்யருக்கு ஸந்யாஸம் கொடுத்து நரஸிம்ஹபாரதீ என்ற யோக பட்டத்தையும் அளித்தார். அதிலிருந்து பத்து நாட்களில் அதாவது ஆஷாடகிருஷ்ண ஷஷ்டியில் (1663 ஜூலை 16) ஸ்ரீமத் ஆசார்யார் விதேஹ கைவல்யம் அடைந்துவிட்ட தாகத்தெரிகிறது.

அவருக்குப்பின் பட்டத்திற்குவந்த அந்த நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் மஹாபூஜை, ஆராதனை முதலானவை

களையெல்லாம் நடத்திவிட்டு, குருநாதரின் ஸமாதி ஸ்தலத்தில் ஆலயம் கட்டத்தீர்மானித்தார். அப்படியே அது கட்டி முடிந்தவுடன் அங்கே ஸ்ரீ ஸச்சிதாநந்தேசுவரர் என்று லிங்கப்பிரதிஷ்டையும் செய்தார்.

सच्चिदानन्दभारत्यभिख्यावतः
सद्गुरोः प्रीतये चारुदेवालयम् ।
बन्धयन् सोऽत्र लिङ्गप्रतिष्ठां व्यधात्
सच्चिदानन्दनाम्नेश्वरं ख्यापयन् ॥

ஸச்சிதானந்த பாரத்யபிக்யாவத:
ஸத்குரோ: ப்ரீதயே சாரு தேவாலயம் ।
பந்தயன் ஸோऽத்ர லிங்கப்ரதிஷ்டாம் வ்யதாத்
ஸச்சிதானந்த நாம்னேச்வரம் க்யாபயன் ॥

— குருவம்சகாவ்யம் 11–29

இதைத்தவிர, தன் குருவின் ஞாபகார்த்தமாக ஸச்சிதாநந்தபுரம் என்ற அக்ரஹாரத்தையும் கட்டிவைத்து பிராஹ்மணோத்தமர்களுக்கு தானம் செய்தார். அங்கேயும் ஒரு சிவன் கோவில் கட்டி ஸச்சிதாநந்தர் என்ற பெயரிலேயே அங்கு ஒரு லிங்கத்தையும் பிரதிஷ்டை செய்தார்.

सच्चिदानन्दनाम्नाऽग्रहारं ततः
संविधाप्य द्विजाग्र्यव्रजायार्पयन् ।
सच्चिदानन्दनाम्नैष शैवालयं
बन्धयंस्तत्र लिङ्गप्रतिष्ठां व्यधात् ॥

ஸச்சிதானந்த நாம்னாऽக்ரஹாரம் தத:
ஸம்விதாப்ய த்விஜாக்ர்ய வ்ரஜாயார்பயன் ।
ஸச்சிதானந்த நாம்னைஷ ஶைவாலயம்
பந்தயம்ஸ்தத்ர லிங்கப்ரதிஷ்டாம் வ்யதாத் ॥

— குருவம்சகாவ்யம் 11–31

இவ்விதமாக, இம்மஹான் தமிழ் நாட்டில் வேதவித்துக்களாயும், வித்வான்களாயும் செல்வாக்கும் செல்வமுமமைந்

தவர்களாயுமிருந்த உத்தம வம்சத்தில் பிறந்து வளர்ந்து, அதிபால்யத்திலேயே தாயாரை இழக்க நேரிட்டு, ராஜ்ய க்ஷோபத்தினால் பூர்வீக கிராமத்தையே விட்டு வெளியேறி, தான் ஒரு பக்கம், தகப்பனார் ஒரு பக்கமாக அலைந்து திரிந்து, வறுமையினால் பிக்ஷையெடுத்து காலக்ஷேபம் செய்யும்படி ஏற்பட்ட போதிலும் தன் குல தனமான வேதாத்யயனத்தை கைவிடாமல் பலப்படுத்திக்கொண்டு, எங்கு போனாலும் மதிப்புடனேயே ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் பூர்வாசிரமத்தில் இருந்து வந்தாரென்பதை அறிகிறோம். பின்னால், அவருடைய தாய்மாமன் முன்னமேயே சொல்லி இருந்தபடி அவருடைய பெண்ணை தனக்கு விவாஹம் செய்துகொடுக்கப் போகிறாரென்று எதிர்பார்த்து அவர் குடும்பத்துடன் இருந்துவந்த சிருங்கேரிக்குப் போய் அவர் வீட்டிலேயே ச்ரௌத கர்மாக்களுக்கு உதவியாக இருந்து கொண்டு ஒரு வருஷ காலம் தங்கியிருந்த ஸமயம் அப்பொழுதுள்ள ஸ்ரீமத் ஆசார்யாரின் விசேஷப் பிரீதிக்குப் பாத்திரமாகிவிட்டார். இவரே தனக்குப் பின் பீடாதிபத்யம் வஹிக்கவேண்டுமென்ற ஸங்கல்பத்திற்கு உடன்பட்டு விவாஹ ஆசையை அறவே விட்டு ஸன்யாஸம் கொள்ள ஸம்மதித்த இவருடைய மனோ தைர்யத்தை என்னவென்று சொல்வது? பிறகு பீடாதிபத்யம் ஏற்பட்டு ஸ்ரீமடம் நிர்வாஹத்தை விமர்சையாக நடத்திக்கொண்டுவருகையில், சிருங்கேரி நகரமே இரண்டு அரசர்களுக்குள் விவாத ஸ்தல மாக ஏற்பட்ட ஸமயத்திலும் அவ்விருவர்களிடமும் ஒரே ரீதியாக நடந்துகொண்டு வந்த தன்மையும், சிருங்கேரி போர்க்களமாகவே ஏற்பட்ட ஸமயத்திலும் ஸ்ரீமடத்தில் அமர்ந்துகொண்டு மந்திர ஜபாதிகளையும் தபஸையும் செய்து கொண்டு தேவதைகளின் அனுக்ரஹத்தினால் ஸகலவித ஆபத்துக்களையும் நீக்கிய ரீதியும், ஆலயங்களை பரிஷ்காரம் செய்து உத்ஸவங்களை ஏற்படுத்தி மிகச்சிறப்பாக நடத்திக் கொடுத்த பக்தியின் சிறப்பும், வித்வான்களை விசேஷமாக ஆதரித்துவந்ததுடன் தானும் ஸ்ரீ ராமசந்திரோதயம் முதலிய

கிரந்தங்களை இயற்றியதும், சிருங்கேரி ஸம்ஸ்தானத்தை பலவிதமாக அபிவிருத்திக்குக் கொண்டுவந்து பிரஜைகளை பரிபாலனம் செய்து வந்த மாதிரியும், இவ்வித லௌகிகப் பொறுப்பினுல் தன்னுடைய அத்யாத்ம நிலை குன்ருமல் ஆத்ம நிஷ்டராய் விளங்கி வந்ததும், மற்றும் நடந்த ஒவ்வொரு ஸம்பவமும், இம்மஹானுடைய விசேஷ மஹிமையை பலவாருக நன்கு எடுத்துக்காட்டுகின்றன.

எங்கேயெல்லாம் விசேஷமான யோக்கியதையோ, சக்தியோ, மஹிமையோ, காண்கிறதோ அவையெல்லாம் என்னுடைய அம்சம் என்று கீதாசார்யன் அனுக்ரஹித் திருக்கிறபடி, ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு பரம்பரையில் வந்த ஸகல ஆசார்யர்களும் பகவானுடைய அம்சமாயிருந்த போதிலும் சிலர்களிடத்தில் அவ்வம்சம் மிகவும் விசேஷ மாக பிரகாசித்தால் அப்பொழுது அவர்கள் ஸாக்ஷாத் பரமசிவனே என்று சொல்வதுண்டு. அவ்விதமாக எப் பொழுதும் ஸத்ய நிஷ்டராய், ஞானநிஷ்டராய், ஆனந்த ரூபியாய், விளங்கிவந்து ஸச்சிதானந்தர் என்ற தன் யோக பட்டத்தை அன்வர்த்தமாகக் காட்டிக்கொண்டு, தான் இந்திரிய நிக்ரஹத்துடன் இருந்துகொண்டு விஷய ஸுகங் களை பொருட்படுத்தாமலிருந்தபோதிலும் இப்பெரிய ஸம்ஸ் தான ராஜ்யத்தை நிர்வகிக்கும்போது அதன் உதவியைத் தேடிவரும் ஸகலர்களுக்கும் ஏராளமாக பலவித தானங்களை செய்துவந்து ஆத்மஞானத்தை அபேக்ஷித்துவரும் சிஷ்யர் களுக்கு உத்தமமான ஞானத்தையும் அளித்து வந்த இம் மஹானை ஸ்ரீசிருங்கேரி ஜகத்குரு பரம்பரா ஸ்தோத்திரத்தில்

सत्यस्वरूपं सद्ज्ञाननिष्ठं साक्षाच्छिवं परम् ।
सदा दानरतं दान्तं सच्चिदानन्दमाश्रये ॥

ஸத்ய ஸ்வரூபம் ஸத்ஜ்ஞான நிஷ்டம் ஸாக்ஷாச்சிவம் பரம் ।
ஸதா தானரதம் தாந்தம் ஸச்சிதானந்த மாச்ரயே ॥

என்று வர்ணித்திருப்பது மிகவும் பொருத்தமே யாகும். அவருடைய திருநாமத்தை ஸ்மரிப்பதே புண்யமாகும்.

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ விஜயம் முற்றும்.

## அனுபந்தம்—1

# குரு பரம்பரை

| | |
|---|---|
| ஸ்ரீ ராமசந்த்ர பாரதீ | 1517—1560 |
| ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ-III | 1560—1573 |
| ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ-IV | 1573—1576 |
| ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ-V | 1576—1600 |
| ஸ்ரீ அபிநவ நரஸிம்ஹ பாரதீ | 1600—1623 |
| ஸ்ரீ ஸச்சிதானந்த பாரதீ | 1622—1663 |
| ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ | 1663—1705 |

## அனுபந்தம்—2

# கௌதி ராஜவம்சம்



## அனுபந்தம்—3

# பிதாவின் வம்சபரம்பரை




## அனுபந்தம்—4

# மாதாவின் வம்சபரம்பரை

